சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

இது

# திருக்குற்றாலத் தலபுராணவசனம்.

ஷை புராணச் செய்யுளுக்கிணங்க

மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவானும்,
நூற்பரிசோதகருமாகிய
மு. ரா. அருணாசலக்கவிராயரால்

எழுதப்பெற்று

—

[illegible]பிரஸில் பதிப்பிடப்பெற்றது.

விலை ரூபா 1.

1906

# முகவுரை.

—:o:—

நவகண்டங்களுளொன்ருகிச் சிறந்த பரதகண்டத்திலே பூருவபுண்ணிய மேலீட்டால் ஆன்மாக்கள் பெறுதற்கரிய மானிடப்பிறவியைப் பெற்ற பிரயோசனம் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் புருஷார்த்தம் நான்கு மடைவதுவே; அந்நான்கனுள் ஒவ்வொன்றையும் அதனை அதனையெடுத்துக்கூறும் அந்தந்த நூலுணர்ச்சியாலறிந்து "முயற்சிதிருவினையாக்கும்" என்ற பழமொழிப்படி யிடைவிடாது முயன்று கைவரப்பெற்றநுபவிக்க வேண்டுவதொருதலை. ஆகலின், வீடாகிய மோக்ஷத்தை யடைவதற்குக்கருவியாகச் சுயம்பிரகாச முற்றுணர்வுடைய முழுமுதற் கடவுளாகிய சிவபிரான் றமது திருவுள்ளத்தெழுந்த பெருங்கருணையினாலே திருவாய்மலர்ந்தருளிய வேதாகமபுராண இதிகாச முதலிய நூல்கள் பலவற்றுள்ளும் பிரவஞ்சத்தோற்றமும், ஒடுக்கமும், மநுக்கள்வாழ்நாள்முடிவும், ருஷிபரம்பரைகளும், பிறசாத்திரங்களுமாகிய ' ஐந்திலக்கணங்களையுடைய புராணம்; சில்வாழ்நாட் சிற்றறிவுடைய நம்போலிகள் கருங்கல் மனமுங் கசிந்து நெகிழ்ந்துருகுமாறு பத்திமார்க்கத்தை மிக இலேசாகக்காட்டுமென்பது அறிவினுயர்ந்த ஆன்ருேர் பலர்க்கு மொப்பமுடிந்த தொன்ரும். பத்தியினாலே முத்தி சித்திக்கவேண்டுமென்பது சருவசாஸ்திர சம்மதம்; அதற்குத் தாலிபுலாக நியாயமாக அறுபத்து மூன்று நாயன்மார் சரிதமொன்றே போதுமானசான்ரும்.

பழமையெனப்பொருள்படும் புராணம் பதினெட்டு வகைப்படும்; அவைகள் வேதசிவாகமப்பொருள்களோடு வேறுபாடின்றியே விளங்காநிற்கும். அவற்றைச் சிவபிரானிடத்தி லுள்ளங்கைநெல்லிக்கனிபோ லுணர்ந்த திருநந்திதேவர் முனிசிரேட்டராகிய சனற்குமார முனிவருக்கு வழிப்படுத்தி யருளினர். அம்மகருஷி விஷ்ணு அமிசமாக அவதரித்த வேதவியாச மகாமுனிவருக்கு விளக்கிக்காட்டி யருளினர்; அவர் தாங்கற்ற நூற்பொருளெல்லாவற்றையும் சிவபுராணம்பத்து, விஷ்ணுபுராணம் நான்கு, பிரமபுராணம் இரண்டு, அக்கினிபுராணம் ஒன்று, சூரியபுராணம் ஒன்று, எனப்பாகுபாடுசெய்து சூதமுனிவருக்குச் சொல்லியருளினர். புராணவாராய்ச்சியும் போதித்தலுமே பொழுதுபோக்கும் விளையாட்டாகவுடைய அம்முனிவரானவர் சௌனகாதிமுனிவர்கள் சரியை கிரியை யோகம் ஞானமாகிய நான்கும்; அவற்றின் பயனுயுள்ள சாலோக சாமீப சாரூப சாயுச்சியமாகிய நான்கு முணர்ந்துய்யும் பொருட்டு, தலம் தீர்த்தம் மூர்த்தி விசேடங்கள் ஒன்றும் பலவுமமைந்த க்ஷேத்திரமான்மியங்களைக் காலந்தோறும் அமையநோக்கி நைமிசாரணியத்தையடைந்து அருண்மடைதிறந்தாற்போல அருளிச்செய்வாராயினர்.

அங்ஙனமருளிச்செய்யப்பட்டவற்றுட் காந்தமென்னும் அரும்பெரும்புராணத்தினங்கமாகிய சங்கரசங்கிதை சனற்

குமார சங்கிதைகளின் சாரமாகிய திருக்குற்றாலத்தல்புராண மான்மியம் வடமொழியிலிருந்தது. அதை அத்தலத்து ஆதி சைவப்பிராமணராகிய ஆன்றோர் தமிழில்மொழிபெயர்த்துப் பாடித்தரவேண்டுமென்று கேட்க, அவராஞ்ஞையின்படி பாடியருளிச்செய்தவர் ஸ்ரீ திரிகூடராஜப்பக்கவிராய மூர்த்திகள். இவர் திருக்குற்றாலத்துநன்னகரத்துக்குப் பக்கமேயுள்ள மேலகரநகரிலே பரம்பரைச் சைவவேளாளர் குலத்திலவதரித்தவர். சிவபக்தி குருபக்தி அடியார்பக்தியிற் சிறந்தவர். அரிய பெரிய இலக்கிய இலக்கணங்களை ஐயமாதி முக்குற்றமுமற ஆராய்ச்சிசெய்தவர். பண்டைநூல்களிற் பழகிய பாவலர் நாவலர் பலரு மொருங்குகொண்டாடப் பலதிறப் பாக்களையும் பாடுஞ் சாமர்த்தியமுடையவர். இத்திருக்குற்றாலத்தல்புராணமன்றிக் குற்றாலமாலை, குற்றாலச் சிலேடைவெண்பா, குற்றாலயமகவந்தாதி, குற்றாலக்குறவஞ்சி யாதியபல பிரபந்தங்களும் பல நயங்களமையப்பாடியுள்ளவர்.

இந்நிலவுலகமுழுதுந் தெரியத்துறவொழுக்கத்திலுயர்ந்த தேசிகசிகாமணியா யெழுந்தருளியிருந்த திருவாவடுதுறை யாதீனம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிகசுவாமிகள் (இவரது நேர்பரம்பரையிலே) திருவவதாரஞ்செய்யப்பட்டபெருந்தவமுடைய தென்றால் இவரது குலப்பெருமையைக்கூறவும் வேண்டுமோ? இவரது காலம் இற்றைக்குச் சற்றேறக்குறைய நூற்றைம்பது வருடங்களுக்கு முன்னென்றே பிண்டமாகத்தெரிகிறது. இது நிற்க.

இனி, திருக்குற்றாலத்தலபுராணமான்மியம் : தானவை பவகாண்டம் சிவரகசியகாண்டமென இரண்டாக வகுத்து முப்பத்திரண்டுபடலங்களாகவிரித்து (௨தூஎய) செய்யுளாலமைக்கப்பெற்றுள்ளது. அச்செய்யுள்கள் படிக்குந்தோறும் பதங்களிலும் பொருள்களிலும் பத்திரசம்பழுத்துக்கற்றவரிருதயங்களைக் களிப்பிக்குங் கற்பகம்போலக் காணப்படுகின்றன. அன்றியுஞ் சிங்காரமுதலிய நவரசங்களுஞ் செந்தமிழ்ச் சுவை தெரிந்தார்க்குத் தித்திக்குந் தெள்ளமுதம்போலக் கிடந்தன. இவை முழுதும் ஏனையபுராணங்களுக்குப் புலவர்களெழுதும் புனைந்துரைபோலாது, பலர்புகழுண்மைப்பான் மொழியேயாமென்பது : அப்புராணத்திலெந்த இடத்திலேனும் பத்துப்பாடல்களைவரிசையாக வுள்ளன்புடனே யுய்த்துணர்வார்க்கு வெள்ளிடைமலைபோல வெளிப்படையாக விளங்கும். இங்ஙனமெல்லா நலங்களுமியைந்த இப்புராணம்போலத் தலபுராணங்களுள் வேறொன்றிருக்கிறதாக எனக்குத் தோன்றவில்லை, என்னண்பர்கள் பலரபிப்பிராயமுமிதுவே.

சீவான்மாக்க ளின்பத்தையெய்தும் பொருட்டுச் சிற்பரம் பொருளாகிய சிவபிரான் பார்வதிதேவியாரைத் திருமணஞ்செய்தகாலத்துக்கு முன்னரே யிந்த க்ஷேத்திரமிருந்ததென்றால் அளத்தற்கரிய பல்லாயிரவருடங்கட்கு முன்னுள்ள அநாதிக்ஷேத்திர மிதுவென்பதை யறியாதவர்யாவர்? அநாதிக்ஷேத்திர மிதுவென்பதற்கு இன்னும் பற்பல பிரபல பிரமாணங்கள் இந்நூலுட்பரந்து கிடத்தலாலாண்டுக்

கண்டுணர்க. எல்லாச் சிவக்ஷேத்திரங்களிலு மெழுந்தருளி யிருக்குஞ் சிவலிங்கப்பெருமானுடைய அடிப்பாகம் பிரம பாகமென்றும், நடுப்பாகம் விஷ்ணுபாகமென்றும், முடிப்பா கம் உருத்திரபாகமென்றுஞ் சிவாகமங்களருளிச் செய்வதற் கொப்ப முதலாவது பிரமனாகவும், இரண்டாவது விஷ்ணுவா கவும் மூன்றாவது சிவபிரானாகவும் சர்வேசுர னெழுந்தருளி யிருப்பது:இத்தலம் சகலதலங்களுக்கும் உன்னதமான விசே டமுள்ள தென்பதற்குத்தக்கவொருசான்றன்றோ?

ஒரு சிவக்ஷேத்திரத்தில் தரிசனஞ்செய்யப் புகுந்தவர் மூன்றுநாளுக்குக் குறையாம லங்ஙனம் வசிக்கவேண்டுமென் று ஆன்றோர் பலரும் வற்புறுத்தி விதிவகுத்தருளினர். அத் தகைய விதிவரையறையில்லாமலே தரிசனார்த்தமின்றிப் பிற காரணங்களால் திருக்குற்றாலத்தலத்தைக் காணவருவாரை யும் அங்குள்ள வடவருவித்தீர்த்தமும், மந்தமாருதமாகிய தென்றற்காற்றுஞ், சந்தனமணக்குஞ் சாரல் மழையும் எவ் வளவு நாளாயினும் வெறுப்பைத்தராமல் விருப்பைத்தந்து வசிக்கச்செய்யும் எல்லா வளங்களும் மகத்துவமும் யாவரா லு மெழுதுந்தரத்தனவல்ல. நம்பெருமானுக்குத் திரிகூட மலை நன்னகரென்றும், அதிலிருக்கும் வேதமாகிய குறும்ப லாவிருக்ஷங் குடியிருக்குமிடமென்றும் ஸ்ரீ திருஞான சம் பந்த சுவாமிகள் "வம்பார்குன்ற நீடுயர்சோலை" "திருந்த மதிசூடி" என்னுந் திருப்பாசுரங்களி லருளிச்செய்திருத்த லால் அவ்விரண்டின் மகிமை : ஒன்றுந்தெரியாதவென்னொரு நாவாலெடுத்தியம்புதற் கெளியதாகுமோ ?

இனி, இந்நூல் பன்னூலாராய்ச்சியிற் பயின்று சிறந்த கூரிய புத்திமான்களன்றி யேனையோர் பொருள்காண்பதற் கரிதாயிருத்தலால் மதுரைச் சேதுபதி ஐஸ்கூல் உபாத்தியா யரும், மதுரைத் தமிழ்ச்சங்கம் காரியதரிசியும் செந்தமிழபி மான சிலரும் ஆகிய ப்ரும்மஸ்ரீ எஸ். சாமிநாதையரவர்களும் பிறநண்பர்களும் பரோபகார தருமமாக இதை யெல்லாரும் பயன்பெறும் பொருட்டு, எளியநடையில் வசனமாக மொழி பெயர்த்தெழுதி யச்சிட்டுத் தருகவென்று உத்தரவுசெய்ய, அப்பெரியாரது நன்மொழியைமறுத்தற்கஞ்சி யிசைந்துஆவ சியமாகவேண்டுவனவல்லாத பல அடைசொற்களையும் வித்து வத்திறமையையே பெரும்பாலும் புலப்படுத்தும் ஆற்றுச் சருக்கம் நாட்டுச்சருக்கம் நகரச்சருக்கமென்னு மூன்றுசருக் கங்களையும் மலைவளத்தையே கூறுஞ் சிலயமகந்திரிபுகளையும் விடுத்து ஏனைச்சருக்கங்களெல்லாவற்றிற்கும் என்சிற்றறிவு க்குத்தக்கவசனமெழுதி, எனது சகோதரரும் விவேகபாநு ப்பத்திராதிபரும் மதுரை விவேகபாநுப்பிரஸ் புரோப்ரைட் டருமாகிய மு. ரா. கந்தசாமிக்கவிராயர் நன்முயற்சித்தூண்டு கோலால் அச்சிட்டு வெளிப்பிரகாசப்படுத்தினேன். இதிற் காணப்படும் பிழைகளெல்லாவற்றையுங் கற்றறிந்தமேலோர் கமித்தருள்வாராக. மேற்கூறிய மூன்று படலங்களுக்கும் பிறபாடல்களுக்கும் ஒரு பதவுரை யெழுதி யச்சிட்டு வெளி ப்படுத்த முயன்றிருக்கின்றேன். திருக்குற்றாலநாதர் திருவ ருள்கூட்டி யருளுக. சுபம், சுபம், சுபம்.

இங்ஙனம்

மதுரைத் தமிழ்ச்சங்கதது நூற்பரிசோதகரும்,

சேற்றூர்ச் சம்ஸ்தான வித்துவானுமாகிய

மு. ரா. அருணாசலக்கவிராயர்.



ஓம்.

சிவமயம்.

# திருக்குற்றாலத்

# தலபுராணவசனம்.

## கடவுள்வணக்கம்.

தமிழாசிரியராகிய அகத்தியமாமுனிவரெழுந்தருளியிரு க்கும் பொதிகைமலைச் சார்பிலுள்ள திருக்குற்றாலத் தலபுரா ண மான்மியத்தை வசனமாக எழுதுவதற்கு அந்தத்தலத்து விசேடமூர்த்தியாகிய செண்பகவிநாயகரையுந் திருக்குறும்ப லா ஈசரையுங் குழல்வாய்மொழியம்மையையுஞ் சித்திரசபை நடராசரையுஞ் செண்பகப்பூங்கோதையம்மையையுந்திரிகூட நாதரையும் ஞானபராசத்தியையுந் தெக்ஷிணாமூர்த்தியையும் விநாயகர்குமாரக்கடவுள்முதலியோரையும் வணக்கஞ்செய்து தோத்திரஞ் செய்கிறேன்.

## தானவைபவகாண்டம்:

## முதலாவது புராணவரலாற்றுச்சருக்கம்.

——:-o-:——

நைமிசாரணியத்திலே தவம் தானஞ் செய்தவர்க்கல்லா மல் அவ்விரண்டையுந் கண்ணாரப்பார்த்தவர்களுக்கும் மோ

கூடிங்கிடைக்குமென்னும் விதியையறிந்து எல்லா நூல்களேயு முணர்ந்த சூதமுனிவர் அவ்வாரணியவாசிகளாகிய முனிவர் கள் செய்யும் யாகசாலேயின்க ணெழுந்தருளினர். அதுகண்டு அம்முனிவர் பலரும்வணங்கி வாழ்த்தி அவரைஆசனத்திலெ ருந்தருளச்செய்து *அருக்கிய பாத்திய ஆசமனமாகிய மூன் றையுங்கொடுத்துப்பூசித்து "நாங்கள்வேள்விசெய்யத்தொட ங்கியநல்லமுகூர்த்தமே தேவரீரையெழுந்தருளச்செய்த"தெ ன்று உபசரித்துச் "சுவாமீ! நீர் பதினூலென்றருளிச் செய்யப் பட்டசிவபுராணங்கள் பத்தினு ளொன்ருகிய கந்தபுராணத்தி லேசொல்லப்படுந் திருக்குற்ருலத்தலமான்மியத்தைச்சுருக்க மாக எங்களுக்குக் கூறியருளினீர், ஆதலாலெங்களுக்குப்போ துமான திருப்திவரவில்லே யின்னுமொருமுறை விரித்து அம் மான்மியத்தை நன்ருகச்சொல்ல வேண்டு" மென்று கேட்கச் சூதமுனிவர் மனமகிழ்ந்து கூறுவாராயினர்.

திரிநேத்திர தாரியாகிய சிவபிரானெழுந்தருளியிருக்கும் இடம் அனந்தம்; அவற்றுள் திருக்குற்றலத்தலம், அவருக்கு இரகசியமாகிய தானம்; அதன் மகிமை ஞானபக்குவமுடை யார்க்கே சொல்லத்தக்கது. ஆதலால் நீங்களே கேட்குந் தகு தியுடையீர்கள். கந்தபுராணத்துள்ள ஆறு சங்கிதைகளுள்ளே

* அருக்கிய முதலியன - முனிவர்களுக்குச்செய்யு முபசாரம். அவற்றுள் அருக்கியம் - மந்திரநீரிறைத்தல். ஆசமனம் - நீருட்கொ ள்ளல். பாத்தியம் - பாதசுத்தி செய்யுநீர்.

சங்கர சங்கிதையிலும் சனற்குமாரசங்கிதையிலுந் திருக்குற்றாலத்தலமான்மியமுள்ளது. எல்லா வுலகத்தையும் பெற்ற தாயாகிய உமாதேவியைச் சிவபெருமான் தாம் விவாகஞ்செயும்பொருட்டு, அந்தமான்மியத்தை அகத்தியமாமுனிவருக்கருளிச்செய்தனர். அவ்வாறே திரிகூடமலைமான்மிய முதலாக வரிசையாகச் சொல்லுகிறேன்.

முதலாவது புராணவரலாற்றுச்சருக்கம் முற்றிற்று.

---

## இரண்டாவது
## திரிகூடமலைச்சருக்கம்.

—:o:—

செந்தமிழ்ப் பாண்டிவள நாட்டிலே தலைநாடாகச் சிறந்து விளங்கா நிற்கும் ஆரிய நாடென்பது; அந்நாட்டின் திலகமாகிய திருக்குற்றால மென்னுந் திரிகூடமலையினது நான்கு திக்கிலுங் கின்னரர் வித்தியாதரருடைய வீணைகானமும் வேதகானமு மிகுந்தன. குகைகள் தோறு முனிவர் கூட்டங்களும் பக்கமெல்லாம் யாகசாலைகளு மலிந்துள்ளன. மேகங்களைத் தமதினமென்று யானைகள் மோதும். அந்த யானைகளை மலைகளென்று குரங்குகள் மேலேபாயும். அக்குரங்குகள் பாய்தல்போல விரைந்துபாயுங் காட்டாறுகளுஞ் சோலைகளினின்றொழுகுந் தேனாறுகளும் யானைகளின் மத நீராறுகளு மொன்றோடொன்று கலந்து செல்லும். குறமாதர்கள் குடிசை

முற்றத்திற் கொண்டுபோய் இடையர்மங்கையர் பாலினைத் தினைக்குச் சரிக்குச்சரியாக அளந்துகொடுப்பார்கள். குறவரு ங் குறவர்மாதரும் உண்டாக்கும் அகிற்கட்டைகளின் புகை யும் சந்தனக்கட்டைகளின் புகையும் யாகசாலையின் புகையுந் திரண்டொன்றுகி ஆகாயத்திலே மேகமெழுதல்போல மொ ய்ப்பதைத் தேவர்கள்கண்டு இமையாநாட்டமெல்லா மிமை க்கு நாட்டமாகச்செய்தனர். அருவியின்முழக்கமும் அந்தண ர் யாகமுழக்கமும் அவிபுணவு கொள்ளவருந் தேவர் முழக்க மும் கவண்கல் முழக்கமும் மலைமுழக்கமும் ஊழ்வலியைக் கடக்கின்றவரைப்போல இடிமுழக்கத்தைக்கடந்து அப்பாற் செல்லாநிற்கும். மேகமும் சந்திரனும் யானைக்கொம்பும் பன் றிக்கொம்புங் கொடுக்கின்ற முத்துக்கள் பதிந்துகிடக்குமிட மெல்லாம் நக்ஷத்திரங்களையுடைய ஆகாயத்தைப்போல விள ங்கும்.

இத்தன்மையாகிய பலவளங்களையுடைய திரிகூடமலையி னிடத்துப் பிரகாசம் பொருந்திய சடையினைத்தாங்கிய சி வபிரானுக்கும் உமாதேவிக்கும் ஆடுகின்ற சபையாகித் தன் னிடத்து வந்தவர் தவத்தை வளர்த்துச் சிவத்தை வளர் க்குஞ் செண்பகப் பூஞ்சோலை யொன்றுள்ளது. இந்தப் பூஞ் சோலையுந் திருக்குற்றுலநகருமே திருக்கைலாச மலையை விட்டுப் பார்வதிதேவியாருடனே யெம்பெருமா னெழுந்த ருளி வந்திருக்கு மிடங்களாம். பிரமன், விஷ்ணு, ருத்திரன்

ஆகிய திரிமூர்த்திகளுந்தோன்றுமிடமாகிய இந்தத்தலத்திலே வேதங்கள் பலாவிருக்ஷமாக முளைத்துத் தவஞ்செய்கின்ற மான்மியத்தாற் றேவருக்குந் தெரிவதற்கருமை யாகுந் திரிகூடமலையின்மூலம். தெய்வமுத்திரைக்கா வென்னப்படுஞ் சண்பகவிருக்ஷங்களின் பூந்தாதுக்களாகிய விபூதி தரிப்பித்து நக்ஷத்திரம் நவக்கிரகம் வானுலகம் தேவர் இவற்றின் மேல் *சைவமுத்திரைசாத்து மூன்று தலையையுடையதாய்ப்படைத்தல் காத்தல் அழித்தல் †திரௌபவம் அனுக்கிரகமாகிய காரணங்களுங் கணிதமுங் கடந்துநின்ற சுயம்பிரகாசமூர்த்தி தோன்றுங் காலத்திலே திரிகாலமுந் தன்னிடத்திலேயுண்டாகத் தோன்றிய அம்மலை ஆணவம்மாயை கன்மமென்னு மும்மலவிருளோடும்படி சோமசூரியாக்கினியின் பிரகாசத்தை வீசுவதன்றி ‡உம்மை யிம்மை மறுமைகளில் வருத்துஞ் சனனமாகிய வியாதிக்கு மணிமந்திர மருந்தாகவுமிருக்கும். பின்னுற் சடைமுடியுடைய சிவபிரான் தம்மைவிட்டுப்பிரியாதிருக்கும்படி மகாமேருமலையுங் கைலயங்கிரியு மந்தரமலையுமாகிய மூன்றும் மூன்று கொடுமுடிகளாக வந்திருந்தாற்போலும் பிரகாசிக்கும். பிரமப் பிரளயம் விஷ்ணுப் பிரளயங்கோறுஞ்

---

* சைவமுத்திரை சாத்துதல் - சூலக்குறிபதித்தல்.

† திரௌபவம் - மறைப்பு.

‡ உம்மை இம்மை மறுமை, உம்மை-சென்ற பிறப்பு. இம்மை-இப்பிறப்பு. மறுமை-வருபிறப்பு.

சிவபிரானெழுந்தருளியிருத்தலாற் றன்னிடத்துள்ளமூன்று
சிகரங்களுங் கெடாமற் பூமியந்தரம் வாயுவாகிய மூன்றையுந்
தாங்கிச் சிறந்து விளங்காநிற்கும். இம்மட்டோ? திரிகூடம
லையானது மேருவுக்கும் பழையமலை புதுமையினாற் புதுமலை
கயிலாயமலைக்குத் துணைமலை யுலகத்துள்ள பலமலைகட்குந்
தலைமையானமலை திசைதோறுந் தமிழ்மணக்கும் பொதிய
மலையாகிய தென்மலைக்கு வடமலையுமாகும். பஞ்சாக்ஷரத்தா
லுலகத்தை வாழ்விக்கும் நம்பெருமானுக் கிருப்பிடமாகிய
வேதங்களுக்கு முன்றோன்றிய பிரணவமந்திர சொரூபமுமா
கும். அம்மந்திரத்தினுட் கிடந்த அகர உகர மகர சொரூபங்
களாகும் அம்மலையின் மூன்று சிகரங்கள்—இன்னும், இன்ன
குணம் இன்னசெயல் இன்னபொருளென்று சொலப்படா
ரெனினு மெய்யடியார் குணமுஞ் செயலும் பொருளுமாகிய
சிவபிரானது மூன்று குணமோ மூன்றுசெயலோ மூன்று
பொருளோதெரியோம். இனி அம்மலை பொன்னு மணியுங்
கொழிக்கும் அருவியாகிய பூமாலையைக் கையிலேந்திச் சிவ
பிரானை மணஞ்செய்யவரும் பார்வதிதேவியாரையும் போன்றி
ருக்கும். பூமிதேவியின் தலையையு மதன்மேல்வைக்குங்கிரீ
டத்தையும்போன்றிருக்கும். கங்கையைத்தரித்து முத்த
லைச் சூலத்தைத்தாங்கிச் சந்திரசடாதரராய் இடபாரூடரா
யிருக்கும் பெருமானையும் இமயவரசனையும் உலகமாதாவை
யும்போன்று விளங்காநிற்கும். பற்பல காரணத்தாற் பிரம

விஷ்ணுக்களையும் போன்றிருக்கும். எந்தத்தலத்தினும் ஏகலி ங்கமிருக்கும்; அல்லது பஞ்சலிங்கமிருக்கும். உத்தரகாசியி லே கோடிலிங்கமிருக்கும். இந்தத்திரிகூடமலையெல்லாஞ் சி வலிங்கவடிவமாகி யவளவுஞ் சிவமயமானுல் அதன் மகிமை யை யாமென்னென்று புகழ்ந்துரைப்போம். இந்த மலையை வலமாகச்சூழ்ந்துவந்தவர் தீராதவினைகள் தீர்ந்தவராவர். தி க்குநோக்கிவணங்கினவர் சிவத்தைச்சார்ந்தவராவர். இதன் கீர்த்தியைக்கேட்டவர் தேவராவர். இதைச் சார்ந்திருப்பவர் மான்மியஞ்சொல்லமுடியாதென்று சூதமுனிவர் சொல்லும் போது "இந்தநான்குவிதத்தாலும் நற்கதிபெற்றவர் சரித்திர ம் அருளிச்செய்யவேண்டு"மென்று சௌனகாதிமுனிவர் கே ட்க, மனமகிழ்ந்து சூதமுனிவர் சொல்லுவா ராயினர்.

இமயமலையினின்றும் அகத்திய முனிவர் பொதியமலைக் கு வரும்போது இந்திரத்துய்மனென்னும் சந்திர குலத்து ஓரரசன் அவரை எதிர்சென்று வணங்காமலிருந்தனன். அம் முனிவர் அவனைக்கோபித்து"நீயானையாகக் கடவை" யெனச் சபித்தனர். அரசன் பயந்து "சுவாமீ! யும்மையறியாத என் னைச் சபிப்பது முறையோ?" வென்று வணங்கிக் கேட்க, மு னிவர் சிவனடியாரைக் கண்டாலெதிர் சென்று வணங்காதார் யாவருக்கு மிந்தச் சாபமிடத் தக்க"தென்றனர். அரசன் மீ ட்டும் வணங்கி "யிந்தச்சாபமோசனஞ் செய்தருளுக" வென் று பிரார்த்தித்தலும், முனிவரவனை நோக்கி அரசனே! "திரி

கூடமலையை நீ வலஞ்செய்யுங்காலம் அதற்குத் தென்கீழ்த் திசையிலுள்ள வொருதடாகத்திலே பரிசுத்த மடைவா" யென்றனர். அவரது ஆணையைத் தலைமேலே தாங்கிச் சென்று அரசன் ஆயிரம் யானைகளுக்கு ஒரு இராசயானையாகிக் கயேந்திரமென்னும் பெயரைப்பெற்று நெடுங்காலம் அநேகங்காடுகளிலே சுழன்று திரிந்து பின்னரோர்நாள் நல்வினைப்பயனால் திரிகூடமலைச்சாரலிற் போய் வலமாகச் சூழ்ந்து தென்கீழ்த் திசைச் சுனையிலே தண்ணீர் குடிக்கும்போது அச்சுனையிலுள்ள முதலைபற்றி யுள்ளே யிழுக்க யானை முதலையைக் கரையிலே யிழுக்கப் போராடி யாயிரம் வருடங் கழிந்தபின் முதலையினால் யானை பெருவலி யிழந்து மூலமே யென்றோலமிட்டலறியது. ஒப்பற்ற முதலையு மவ்வாறே யோலமிட்டது.

திருக்குற்றாலத்திலே மூலமொன்றாகித் திரிமூர்த்திகள் வடிவெடுத்த சருவேசுரன் நீலநிறம் படைத்த விஷ்ணுவாயெழுந்தருளியிருந்தநாள் சக்கராயுதத்தால் முதலையைக் கொன்று யானையை யிரக்ஷித்தருளினர். அதன்மேல் திரிகூடமலையை வலம் வந்த பிரயோசனத்தால் யானை வடிவம் போய்த் தேவவடிவம் பெற்றுச் சுவர்க்க நாட்டையடைந்து இன்பத்திலே மூழ்கி யிந்திரத்துய்மனென்னும் அரசனிருந்தனன்.

இனித்திரிகூடமலையின் மான்மியங்கேட்டவன் கதியைச் சொல்லுவோம். குடர், முட்டை, வேர்வை, நிலம் ஆகியநால்

வகைத் தோற்றத்தில் மக்கள் தேவர் நீர்வாழ்வன விலங்கு பறவை யூர்வன தாவரம் ஆகிய எழுவகைப்பிறப்பி *லெ ண்பத்துநான்கிலக்க யோனிபேதங்களை யடைந்த வுயிர்களுக் குச் செய்கை புண்ணியம், பாவம், புண்ணியபாவமென மூ ன்றும்; இம்மூன்றிற்கும் பலனநுபவிக்குமிடம் முறையே பொன்னுலகம் நரகம் பூமியாகும். மேற்குறித்த செய்கை மூன்றிலே புண்ணியஞ் சிறிதும் பாவம் பெரிதுஞ் செய்தா னொருவன் புண்ணியபாவப்பலனைப் பூமியிலே யநுபவித்துப் பூமியை விட்டுச் சுவர்க்கலோகத்திற் போய்ப் புண்ணியப்பல னை யநுபவித்தமுடிவிலே தேவர்களாலே தள்ளப்பட்டுப் பா வப்பலனை நரகத்திலே யநுபவிக்க அந்தரத்திலே விழும்போ து வித்தியாதரர் திரிகூடமலையின் கீர்த்தியை யெடுத்துப் பா டுங் கீதத்தைக் காதுகள் குளிரக் கேட்டான். அப்போது பாவமெல்லா நீங்கிப்போயின. யமதூதர் வருமுன்னரே தே வர்கள் வந்து அவனை விமானத்திலேற்றிக்கொண்டு போய்ப் பொன்னுலகத்திற் சேர்த்தனர். சேர்க்கப்பட்டவன் திரிகூட மலையின் பேர்கேட்ட மான்மியத்தாற் சுவர்க்கத்தையடைந் து தேவர்களுடனமுதமுண்டிருந்தனன்.

---

* எண்பத்தி னான்கிலக்கத்துக்கு விவரம் - தேவர் பதினான்கி லக்கம். மனிதர் ஒன்பதிலக்கம். நீர்வாழ்வனவும் விலங்கும் பற வையுந் தனித்தனியே பத்திலக்கம். தாவரம் இருபதிலக்கம். ஊர்வ ன பதினோரிலக்கமாம்.

இன்னும் அந்தத் திரிகூடமலையைச் சார்ந்திருந்தார் செய்கையையும் அம்மலையைத் *திசைநோக்கிப்பணிந்தார் செய்கையையும் விஷ்ணுவுக்குச் சிவபிரா னருளிச்செய்தபடியே யுங்களுக்குச் சொல்லுவன் கேளுங்கள். ஒன்றென்னப்படாமல் வேறு பிரிந்திடாமல் தோற்றத்திற் புகாமல் நீங்காமலிருக்கின்ற சிவம், சத்தி, ஆன்மாவாகிய மூன்றுந்தொன்று தொட்டு அமைந்த சுத்த வடிவமே திரிகூடத்தின் சொரூபமென்றுணர்ந்து, அந்தத் திரிகூடமலையில் இருக்கு, யசுர், சாமமென்னு மூன்று வேதங்களுந் தங்கியிருக்கும். மூங்கில் சொரியு முத்துக்களின் வெள்ளிய பிரகாசத்தா லம்மலை கயிலாயமலையையும் சூரிய சந்திரர் வலம் வருதலான் மகாமேரு மலையையும்போலிருக்கும். இம்மட்டோ? கண்டவர் மதியாகிய இரும்பைக் கவர்தலாற் காந்தமலையையும் போலும். ஆதலிற் றிரிகூடமலைக்கொப்பாகிய மலை யில்லை. வாசனை நீங்காத பதுமராகமணி விரிக்கின்ற வெயிலாலும், சர்ப்பங்களின் இரத்நம் வீசுகின்ற சோதியின் †செக்காரலும், தேவர்களாற் சொரியப்பட்ட முத்துக்களின் வெள்ளிய நிலவாலும் எம்பிரானெழுந்தருளியிருக்கும் அந்த மலைக்கு இரவு பகல் கிடையா. சித்தர் விஞ்சையர் தேவராகிய எல்லோரும் பத்தராய் விரு

---

* திசை நோக்கிப் பணிந்தார் சரிதம் இரண்டாவது காண்டத்தின் பன்னிரண்டாவது சருக்கத்திற் காண்க.

† செக்கர் - சிவப்பு நிறம்.

கூக்ஙகளாய் மிருகங்களாய்ப் பறவைகளா யங்கிருப்பர். அத ன்மேல் முத்தராய்க்கதிகட்கெல்லாம் முதல்வராயமர்வரானுற் றிரிகூடமலையினதிசயம் விரித்துச் சொல்லற்பாலதோ? தொ குத்துச் சொன்னேனெனச் சூதமுனிவர்சொல்லச், சவுனகா தி முனிவரெல்லாம் "வேதவேள்வி புவியினிடத்துப்பயனைத் தருமுன்னே புராணவேள்வி யவிப்பாகமாகத்திரிகூடமான்மி யத்தைத் தந்தருளினீர். அதனைச்செவிவாயாக நுகர்ந்து சன னமாகிய தாகத்தைத் தீர்த்தோம். இனி உயிராகி யுயிர்க்கெ ல்லா முணர்வாகி யறிவுக்குச் சான்றாகித் திரிமூர்த்திகளுந் தா னாகி யாகாயமாகி யெல்லா வுலகத்தையும்பெற்ற பெருமானு க்கிடம் அக்கயிலாயஞ் சிவலோக மிரண்டென்பார்க்கு மூன் றாகுமென்று சொல்லப்படுந் திருக்குற்றாலத் தலமான்மியத் தை யருளுக" வென்று கேட்கச் சூதமுனிவர் சொல்வாராயி னர்.

இரண்டாவது திரிகூடமலைச்சருக்கம் முற்றிற்று.

---

## மூன்றாவது
## திருக்குற்றாலத் தலமகிமைச் சருக்கம்.

---

இந்நிலவுலகத்திலே சிவபிரானெழுந்தருளியிருக்குந் தல ங்க ளனந்தங்கோடிகளாம்; அவற்றுள் தலம் தீர்த்தம் மூர்த் தியாகிய மூன்றாலுஞ் சிறந்த தலம் பதினான்காகும்; இவற் றுள்ளும் ஏழுதல முயர்ந்ததாகும்; இவ்வேழு தலங்களுள்ளும்

திருக்குற்றாலமாகிய ஒருதலமே மிகமேலானதாகும். எதனு லென்றால் திருவாரூர், காளத்தி, திருவண்ணாமலை, சிதம்பரம், மதுரை, காஞ்சி முதலிய பலதலத்துஞ் சிவபிரானெழுந்தரு ளியிருத்த லொவ்வொருவர் பொருட்டேயாம். அதுபோலாது, யுகாந்தகாலந்தோறு முலகங்களைப் படைத்துக் காத்துத் திரமாகச் சிவபிரா னரசு வீற்றிருக்கும் பரம ரகசியத்தாலெ ன்க. அத்தன்மையாகிய திருக்குற்றாலம் அநாதியேயுள்ளது. அன்றியுஞ் சத்தசமுத்திரமுஞ், சத்ததீவும், பெரும்புறக் கடலுஞ், சக்கரவாள மலையும், மேருவாதிமலைகளும், எல்லா வுலகங்களுந் தலைதடுமாறி யழியுஞ் சர்வசங்கார காலத்திலுஞ் சிவபிரானைப் போலவே யழியாமல் பஞ்சக்*குரோசதூரம் வரை நிலையாய்த் திரிகூடமலை சித்திராநதியுடனே யிருந்தது.

எல்லா வுலகங்களும் அழியுங்காலத்தி லிந்தமூன்று மாத்திரம் அழியாதிருந்த தெவ்வாறென்னில், திரிபுரமழியுங்காலத்திற் சிவபிரான் றிருவருளால் மூவர் அழியாதிருந்தது போலென்க. தருமந் தானந் தவஞ் செய்தாராயினுந் திருக்குற்றாலநாதர் சந்நிதானத்தைத் தரிசித்துப் பணிவார்க்கன்றி யேனையோருக்குப்பாவம் நீங்குதலரிதாகும். சூரியன் சன்னிதானத்திற்றானே சூரியகாந்தக்கல் பஞ்சினைச்சுடும் வேறிடங்களிற் சுடாதவாறுபோ லென்றறியுங்கள். முனிவர்களே! இமயமலையிலே பார்வதிதேவியார் திருமணக்காலத்திலே மூன்றுல

* குரோசம் - கூப்பிடுதூரம்,

கத்திலுள்ளாருமொருங்கேவந்து கூடியிருக்க வடதிசைதாழ்ந்து தென்றிசை யுயர்ந்திட, அவரனைவருக்குஞ் சமமாக அகத்தியமுனிவரொருவரையே தாங்கி வடதிசையை யுயரச் செய்ததும் இத்திருக்குற்றாலத்தலமே. இதிலே வேதமே குறும்பலா விருக்ஷமாக முளைத்திருக்கின்றது. அதனிழலிலே பிரமவிஷ்ணு வடிவாகிச் சருவேசுரனான சிவபிரா னரசுவீற்றிருந்தருளுவர். அன்றியும், சர்வலோகைக நாயகி காண ஞான சித்திரசபையிலே திருநடனஞ் செய்தருளுவர்.

ஆதியந்தமில்லாத அவரது கீர்த்தியே மேலெழுந்தாற்போலுமுயர்ந்த அந்த மலையிலுள்ள தீர்த்தமூலமுந், தலமூலமும், மூர்த்திமூலமுந் திரிலோகத்தை யுணர்ந்தவருந் தெரிவதற்கரியவாகும். மனிதரிவர் தேவரிவர் சிவமதுகங்கையிது ஆகாயகங்கையிது சண்பகச்சோலையிது கற்பகக்காவிது மலையிது சிவலிங்கவடிவிது என்றுபிரித்தறிவது, நான்கு வேதங்களுக்குமரியதானால் லெம்போலிகளுக்கு எளியதாகுமோ? நினைத்தவருக்கு அருணையும் தரிசித்தவருக்குச் சிதம்பரமும் பிறந்தவருக்குத் திருவாரூரும் இறந்தவருக்குக் காசியுங் கதிகொடுக்கும். திருக்குற்றாலமோ மேலேசொல்லிய நால்வகையோருக்கு மோக்ஷங் கொடுக்கும். எந்தத்தலத்திலே யாவர் செய்த பாதகமு மிந்தத்தலத்திலே தீரும். இந்தத்தலத்திலேசெய்த பாதகந் திரிலோகங்களிற் சென்றாலுந் தீராது. எந்தவிதத்தாலுயர்ந்த பெரியோரு மிந்தத்தலத்தைவிட்டு

அப்புறஞ்செல்லமாட்டார். இத்தலத்து*மந்தமாருதத்தாலே சென்றபிறப்பிலே செய்த பாவமெல்லாம் பஞ்சுபோலப் பற ந்துவிடும். மறுபிறவியையுண்டாக்கு மலச்சேற்றை யித்தல த்திலுள்ள வடவருவித்தீர்த்தமே கழுநீராகக் கழுவிவிடும். இம்மையிலேசெய்யும் வினையிருளை யோட்டுந் திரிகூடநாதர் சந்நிதியே யந்தியத்திலே மோக்ஷத்தைத்தந்தருளும். இம்ம லையின் குளிர்ந்தசாரல் தென்றற்காற்றாகிய வாளாயுதத்தை வீசும். வடவருவி—சிலைபூட்டி அம்பு (ஒலிசம்பந்தப்பட்டு நீர்த்துளியைச்) சொரியும். வளந்தங்கிய தேனிறைந்த செண் பகப்பூஞ்சோலை கிளைகளாகிய தண்டங்களைக் கொண்டு மோ தாநிற்கும். இப்படியான லிந்தத்தலத்திலிருப்பார்மேல் வந்த வினை எந்தவிதமிருக்கமுடியும். திருக்கயிலாசமலைபி லெழுந் தருளியிருக்குஞ் சிகண்டபரமசிவன் மயிலியற்சாயன் மடமங் கையாகிய குழல்வாய்மொழி யம்மையை மணந்து மகாமேரு முதலிய மலைகளெல்லாமழியுங்காலத்து மழியாத சங்கக்கோ யிலில் வீற்றிருப்பரென்றால் திருக்குற்றலமே பூலோக கை லாயமென்பதற்குத் தடை யாதொன்றுமில்லை. சிவமதுகங் கையுஞ் செண்பகத்தடாகமுஞ் சித்தர் முனிவராடுகின்ற வட வருவித் தீர்த்தமுந் திரிகூடமலைப்பக்கமுஞ் சித்திராநதியுங் காணும்பொருட்டுப் பூலோகத்திலே வந்துபிறக்கப் பொன் னுலகத்திலிருக்குந்தேவருந் தவஞ்செய்வார்கள், பொங்குமா

---

* மந்தமாருதம் - தென்றற்காற்று.

கடலருவித் தீர்த்தமும், தெய்வத்தன்மைபொருந்திய *பூட்டாதவில்லும், சங்கவீதியும், தாணுமாலயத்தொட்டிலும், ஆதிசத்தி பீடமும், வேதமாகிய குறும்பலாவும், நன்னகரும் விரும்பியன்றோ இந்தத்தலத்திற் சிவபிரான் பிரமாவாகியும் விஷ்ணுவாகியுமிருந்தனர். இந்தத்தலம் †இருபத்தொருதிரு நாமங்கள் பெற்றுள்ளது.

வடவருவியிலே ஸ்நானஞ்செய்து சங்கவீதியின் வலமாக வந்து சங்கக்கோயிலுட்சென்று குற்றாலநாதரையுங் குழல்வாய்மொழியம்மையையுங் கும்பிட்டுத் துதித்துக் கற்றறிந்தாருடன் சேர்ந்து குற்றாலநாதர் கீர்த்தியைப்பாடி யொருநாழிகை யந்தத் தலத்திலிருப்பவர் திருக்கயிலாசமலையிற் கற்பகோடிகாலங் களிகூர்ந்திருப்பர். கொலைமுதலிய கொடும்பாதகராணாலும் வேதப்பலாவிருக்ஷ நீழலிலே திரிமூர்த்தியாய் முளைத்த பெருமானுரது குற்றாலமென் றொருதரங் கூறுவாராகில் அரசராயுலகத்தை யாளுவர். இரண்டுதரங் கூறுவராகில் தேவராய் விண்ணுலகத்திலிருப்பர். மூன்றுதரஞ்சொல்

* பூட்டாதவில் - அருவியிற்றோன்றும் இந்திரதனு.

† இருபத்தொரு திருநாமங்களாவன—பிதுர்கண்டந்தீர்த்தபுரம் சிவத்துரோகந்தீர்த்தபுரம் மதுவுண்டவனுயிர்மீட்டபுரம் பவர்க்கமீட்டபுரம் வசந்தநகரம் கங்கைவந்தபுரம் செண்பகாரணியபுரம் முத்திவேலி நதிமுற்றமாநகரம் திருநகரம் நன்னகரம் ஞானப்பாக்கம் வேடன்வலஞ்செய்தபுரம் வேழம்பூசித்தபுரம் சத்திபீடபுரம் சிவமுகுந்தபிரமபுரம் முனிக்குருகும்பேரூர் தேவகூடபுரம் திரிகூடபுரம் புடார்ச்சுனபுரம் குறும்பலாவிசேடபுரம் என்பன.

லுவாராகில் சிவமயமாகுவர். குற்றால மென்றொருதர நினைப்பவர்க்குக்கோடிபாவ நீங்கும். சொல்லுவாருக்குக்கோடிபுண்ணியஞ்சேரும். குற்றாலத்திலிருந்து செய்யுந்தவ மனந்தகோடியாகப் பெருகும். குற்றாலத்தைத் தரிசித்து வணங்கவந்தவருக்கும் பரமபதங் கைகூடும். பத்தரா யங்குள்ளவர் முத்தராய் விடுதலாலே யத்தலம் *பரிசனவேதியாகும். கண்டோர் யாவருஞ் சித்தராய் விடுதலாலே †தெரிசனவேதியாகும்.

பன்னிரண்டுவருட மூணுறக்கமின்றி வேறிடத்துத்தவஞ் செய்தார் பெறும்பயன் இத்தலத்திலே யொரு சிவநிசிவிரத முற்றியவர் பெறுவர். வேறிடத்திற் செய்யுங் கோடிசிவநிசி விரதப் பலனை இத்தலத்தில் அமாவாசையுடன்கூடிய ஒருசோமவாரவிரதங்கொடுக்கும். பிறதலத்திற்செய்த ‡முப்

* பரிசனவேதி - தன்னைத்தொட்ட பொருளை வேறுபடுத்துவது.

† தெரிசனவேதி - தன்னைக்கண்ட பொருளை வேறுபடுத்துவது.

‡ முப்பத்திரண்டு தருமமாவன:—தரித்திரருக்கு இருப்பிடம், பூஞ்சோலை, தண்ணீர்ப்பந்தர், மடம், தடாகம், பசுவுரிஞ்சுதறி அமைத்தலும், கண்ணாடி, சுண்ணாம்பு, தலைக்கெண்ணெய், கண்வியாதிக்கு மருந்து, காதோலை, பிள்ளைப்பால், பிள்ளைச்சோறு தின்பண்டம், மிருகத்துக்குணவு, பசுவுக்குணவு, கல்விபயில்வார்க்குணவு, அநாதருக்கன்னம், அநாதருக்குவஸ்திரம்,அறுசமயத்தார்க்குணவு, சிறைச்சாலை யடைந்தோர்க்குச்சோறு கொடுத்தலும், எல்லாப் பொருளையு மிழந்தாரை நிலைநிறுத்தல், அன்னியர்செய்த தருமத்தைக்காத்தல், பிச்சையிடுதல், காமத்தில் வருந்துவார்க்குப் பெண்களைச்சேர்வித்தல், பிள்ளைப்பேற்றுக்குதவல், வண்ணானைக்கொண்டு வெள்ளைசெய்து கொடுத்தல், நாவிதனைக்கொண்டு மயிர்களைவித்தல், அநாதப்பிணத்தைச் சுடுதல், கன்னிகையைத்தானஞ்செய்தல், பிள்ளையைவளர்த்தல், கொலைப்படுமுயிரை விடுவித்தலுமாம்.

பத்திரண்டு தருமத்தின் பிரயோசனத்தை யித்தலத்திலில்ல றம் பூண்டிருந்தவர்பெறுவர். பலதலங்களின் மாதப்பட்டினி யிருந்த விரதப்பலனை யித்தலத்திற் பகற்போசன மின்றி யிருந்தவர் பெறுவர். பிறதலத்திற் செய்த சாந்திராயண விரதப்பலனை யித்தலத்தி லொரு இரவு பட்டினியிருந்தவ ரெய்துவர்.

அன்னிய தலத்திலொருபொழுதுண்டு ஒருவருடந் தவ ஞ்செய்தா ரடையும் பலனை யித்தலத்தி லிரண்டுபொழுதுண் டு ஒருநாளிருந்தவரெய்துவர். ஒரு பருவகால மயலூரிற் செ ய்யும் பற்பல விரதப்பயனை யித்தலத்திலொரு சோமவாரவிர தங்கொடுக்கும். மாதராசையற்றுச் சந்நியாசமுற்று மறுதல த்திருப்பவர் பெறும்பலனை யித்தலத்திற் புட்பசயனத்தின் மாதரை மணந்துவைகியவர் கைவரப்பெறுவர். மற்றத்தலத் திலே *பஞ்சாக்கினிமத்தியிலே ஐம்புலனொடுக்கி யோராண்டு தவம்புரிந்தார் பெறும்பயனை யித்தலத்திலே பஞ்சாக்ஷர செ பஞ்செய்து தெய்வப்பலாவிருக்ஷ நிழலிற் சிறுபொழுதிருந் தார் சேருவர். நடத்தற்கரிய காடுமலையு நாடும் பலவருடங்க ளோடி யலைந்து பூவலம் புரிவார் பலனை யித்தலத்திலே சங்க

---

* பஞ்சாக்கினி மத்தியிலே யிருந்து தவஞ்செய்தலாவது—நா ன்குபுறமுந் தீயை வளர்த்துச் சூரியன் மத்தியை நோக்கிக் குறித்த பொருளைத் தியானித்தல்.

வீதியை யொருவலம்வருவார் பெறுவர். பிறதலத்திற் *சோடச தானஞ்செய்தாற் கிடைக்கும் பலனை யித்தலம் அன்ன தானஞ்செய்வாருக்கருளும். பற்பல தலங்களினுஞ் செய்யும் அக்கினிட்டோமம் சோதிட்டோமம் இராசசூயம் சோமயாகம் அசுவமேதம் முதலிய யாகங்களின் பிரயோசனத்தை மாதர் பிதுர் யாகஞ்செய்வாருக் கித்தலங் கொடுக்கும். அநேக வனங்களில் கந்தமூலபலாதிகளைப்புசித்தும் உபவாசமிருந்தும் தீமேலும் ஊசிமேலுமொருகாலையூன்றி நெடுநாள் தவஞ்செய்தபேற்றைச் செண்பகாடவியிலே யொருதினந் தலவாசஞ் செய்தாலதுகொடுத்தருளும். பிறதலத்திலே தொண்டராய் வணங்குவாருக்குந் தவஞ்செய்வாருக்கும் உத்தராயணங்கொடுக்கும் பலனை யித்தலத்தை யுங்ஙனம் வணங்கு வாருக்குச் சித்திரை மாதப்பிறப்புக் கொடுத்துவிடும், தெக்ஷிணாயனங் கொடுக்கும் பலனை ஐப்பசிமாதப் பிறப்புத் தந்துவிடும். உத்தரகங்கையாதி நதிகளிலே ஸ்நானஞ்செய்த பலனைச் சித்திராநதி சூழப்பட்ட தெய்வத்தன்மையுள்ள இந்தத்தலமே கொடுத்தருளும்.

திருக்குற்றாலம் திரிகூடமலையென்னு நாமங்கள் மலைக்குண்டாகிப் பின்னர் தலத்துக்காகி அதன்மேல் சகதீசனுக்குரி

* சோடசதானம்-அன்னம் வஸ்திரம் பூமி கன்னிகை பொன் பசு ஈனும்போது கன்றின் தலை தெரியும் பருவத்தோடுகூடிய பசு எருமை மலையாடு குதிரை வெள்ளைக்குதிரை யானை காளாமுகி மந்தாமேரு கற்பகம் வித்தை ஆகிய இவற்றைக் கொடுக்குந்தானம்,

யனவாமென்று லவற்றின்பெருமை சொல்லுதற் கிலேசாகு மோ? என்ற சூதமுனிவரைப்பார்த்து "முன்னர் இந்தத்தல த்துக் கிருபத்தொரு பெயர்களுள்ளன வென்று சொன்னீர், அவைகளை விரித்தருளிச்செய்யவேண்டும்" என்று சௌன காதிமுனிவரர் கேட்கச் சூதமுனிவர் சொல்லுவார். கேளுங் கள் முனிவர்களே! புடார்ச்சுனபுரமென்னும் பெயர் வந்த வகையைச்சொல்லுவோம். சந்திரகுலத்தரசராகிய துரியோ தனுதியருக்கும் பஞ்சபாண்டவராகிய தருமன் முதலியோரு க்குஞ் சண்டையுண்டான காலத்திலே துரியோதனன் முத லானவரை வெல்லும்பொருட்டுப் பாண்டவருள்ளே நடுநின் றவனுகிய அருச்சுனன் பாசுபதாஸ்திரத்தைக் கருதிப் பர மேசுரனை நோக்கி யரிய தவஞ்செய்து சரீரமெல்லாம் புற்று வடிவமாகக் கறையானரிப்ப நிட்டையிலிருந்தனன்; அவனு டையபத்தியை வெளிப்படுத்தும்பொருட்டுச் சிவபிரானொரு வேடவடிவெடுத்துப் பார்வதியையு மதற் கிசைந்த வேடிச்சி யாக வரச்செய்து ஒரு பன்றியைத் தேடிவரல் போலவந்து அருச்சுனனோடு யுத்தம்பண்ணி யிருவரு மேலுங் கீழுமாக விழுந்து புரண்டுருளுவதைப் பார்வதியம்மை பார்த்து நகை செய்தலும், அருந்தவ வேடனுகிய அருச்சுனன் அரனுகிய வேடன் தலையின்மேலே வில்லாலோங்கியடித்தனன். அவ்வ டியைத் தாங்கமாட்டாதவன்போ லந்தவேடர் தமதுமனைவி யுடனே யாகாயத்திலே மறைந்தனர். அங்ஙன மறைந்தவர்

சர்வேசுரனென்று அருச்சுனனறிந்து அந்தோ! கெட்டேன் எம்பெருமானுக்குத் தீங்கிழைத்தேனே யென்று பரிதபித்து வாடியபூதுதேடி யெங்கணுங்காணாததோடு தன் விபூதிச்சம் புடத்தையுங் காணுமற்றிகைத்து உடல் சோர்ந்து தன்னுயி ரைவிட்டுவிட நினைந்தவளவில், கருணாநிதியாகிய நம்பெருமா ன் இடபாரூடராய் விண்ணிலெழுந்தருளிநின்று "அன்பனே! திரிகூடமலையிலே சென்றாற் சம்புடத்தைப் பஞ்சதரிசனத் துடன் காண்பா" யென்று பாசுபதாஸ்திரமுங் கொடுத்தருளி மறைந்தனர். அப்பாசுபதாஸ்திரத்தைப்பெற்று அர்ச்சுனன் ஆனந்தபரவசனா யெழுந்து கும்பிட்டு குறும்பலாச்சாரலைய டைந்து குற்றாலத்தை நெருங்கிக் கும்பிட்டுச் சங்கவீதியை வலம்வந்துபோய்க் குற்றாலநாதரைப் பங்குனியுத்திரத்தன் று பூசனைசெய்து வணங்கிப்பின்னர் மேற்றிசைமுகமாகச் சிவலிங்கம், விநாயகர், சிகரம், மலை, தேனருவி ஆகிய ஐந் தையுந்தரிசித்து இவ்வைந்தோடாறுவதாகச் சம்புடமுங்கண் டெடுத்துத் தன்னுயிரைக்கண்டதுபோல மகிழ்ந்தனன். இவ் விதம் சம்புடத்தை யருச்சுனனெடுத்தகாரணம்பற்றிப்புடா ர்ச்சுன புரமென்றுபெயரித்தலத்துக்கு வந்தது. மற்றைப் பெயர்களை யாங்காங்குக் கதைகள் வருஞ் சருக்கந்தோறுங் காரணங்களாற் கண்டறியுங்கள். இந்தத்தலம்போலொருதல மெவ்வுலகத்துமில்லை. இந்தத்தலமிருக்க வேறொரு தலத் தைத் தேடிச்செல்பவர் வீட்டில் விளக்கிருக்க வெளியே தீ

யைத் தேடியலேவார்போல்வர். வேதங்களாலும் விளம்புதற் கரியதான சங்கக்கோயிலுந்தலமுந் தேவர்கூட்டங்களின் பெருக்குமென்னொரு நாவாற்சொல்லற்பாலனவோ? ஆயிரநாவுடைய ஆதிசேடனாலும் அசைக்க முடிவனவல்ல. சிதம்பரம் சேது, காசியினும் உயர்ந்தது திருக்குற்றாலம்; இதனைச்சொன்னாலும் வாயூறுங் கேட்டாலுஞ் செவிகள் திறக்கும். என்றனர். அதுகேட்ட நைமிசாரணிய முனிவரர் செழித்த சிந்தையராய் "இனித்தீர்த்த மான்மியம் அருளிச்செய்க" என்று கேட்கச் சூதமுனிவர் ருஷிமூலம் நதிமூலஞ் சொல்லுதலரிதுதான். ஆயினுந் திருக்குற்றாலநாதர் திருவருளாற்றெரிந்த மட்டுஞ் சொல்லுகிறேனென்று செப்புவராயினர்.

மூன்றவது திருக்குற்றலத்தலமகிமைச்சருக்கம் முற்றிற்று.

---

## நான்காவது
## வடவருவிச் சருக்கம்.

புடார்ச்சுன புரமென்னுந் திருக்குற்றாலத்திலே பராசத்தியிடத்திலிருந்து பரமேசுரன் எல்லாவுலகங்களையுஞ் சிருட்டி செய்யுங்காலத்தில் அவரைத் திருமஞ்சனஞ் செய்வித்தற்காக உருத்திரகணத்தோர் தீர்த்தமொன்று வேண்டிப் பிரார்த்தித்தலும், அவரது பெருங்கருணையால் மூன்று சிகரங்களையுடைய மலையிலே யுண்டாகி மூலதீர்த்தமாகும் வடவருவித் தீர்த்தம், சத்த சமுத்திரமும் சத்தநதியுந்தோன்றுத

ற்கு முன்னே தோன்றிய அந்த வடவருவித் தீர்த்தத்திலே யுருத்திர கணத்தவரும் நந்திகணத்தவரும் சிவகணத்தவரும் ஸ்நானஞ்செய்து பின்னர்த் திரிகூடநாதரை யபிடேகஞ்செய்து திருவருள் பெற்றனர்.

இவ்விதம் திரிகூடமலைச்சிவபிரான் திருமேனிமுழுதுந் தோயப்பெறுதலாலவர் சடையின் மேலிருக்குங் கங்கையைப்பார்க்கினும் நூறுமடங்கதிக விசேடமாம் வடவருவித் தீர்த்தம்; அத்தீர்த்தம் சிவமதுகங்கை செண்பகத்தடமென்னு மிரண்டு துறைகளையுடையது. அன்றியுங் கங்கை, நருமதை, யமுனை, சிந்து, கோதாவரி, காவேரியாதி நதிகளெல்லாம் வற்றிய காலத்தினும் குறும்பலாவீசர் திருவருளாற்பொங்கி மேலெழுங்காரணத்தால் பொங்குமா கடற்றுறையென்னும் ஒரு துறையினையு மொருபக்கங்கொண்டு விளங்கும். பிறதலங்களிலே தூரமாக இருக்கும் தீர்த்தங்கள் போலாது குற்ருலநாதருக்கு வலப்பக்கத்திலே மிகச்சமீபமாக விளங்கித் தேவர்களா லாட்டப்படுந் திருமஞ்சனம் போலுமந்த வடவருவித்தீர்த்தம். கோடி கிணறும் தடாகமுங் கொடுக்கின்ற பலன்களை நீலோற்பல மலர்ந்த வொரு வாவி கொடுக்கும். அந்தவாவிபுஞ் சுனையுங் கோடிகூடிக் கொடுக்கின்ற பலன்களை யொரு நதியேகொடுக்கும். அந்நதி யொருகோடி கொடுக்கின்றபலனை யொருமலையருவி கொடுக்கும். அந்தவருவி யொருகோடி கொடுக்கின்ற பலன்களை யிந்த வடவருவித் தீர்த்தமொன்றே கொடுத்தருளும்.

பாலையுந் தண்ணீரையும் நாகணவாய்ப்பறவையுங் கிளியும் வேறுபிரிக்க முடியாததுபோல வெவ்வேறு பலதீர்த்தங்களும் பாவங்களையும் புண்ணியங்களையும் வேறு பிரிக்கமாட்டா. அன்னப் பறவை பாலையும் நீரையும் வேறு பிரித்து விடுவது போல வடவருவித்தீர்த்தம் வந்து மூழ்குவாரது பாவங்களைக் கழுநீராகப் பிரித்துப் போக்கிவிடும். மலைக்கூட்டந் தோறுநின்று வரு நதிகளி னுத்தரவாகினியே யுயர்ந்ததென்று வேதங்களு மிருதிகளும் விளம்புமானால் அயனும் அரியும் அரனுங் கூடுமிடமாகிய திரிகூடமலையினது வடவருவியின் மகிமை சொல்லும் பகுப்புடையதோ? காலாலேறிச் செல்லுதற்கரிய சுவர்க்கபதம் பிரமபதம் வைகுந்தபதம் பரமபதமாகிய நான்கிடத்தும் விரைந்து செல்லுதற்கு நிறுத்திய நூலேணியைப்போலவும் திரிகூடமலையிலே வடவருவிவிளங்கும். இவ்வுலகத்திற் பிறந்தா ரெல்லாருங் கங்கா நதியிலே போய்த் தோய்ந்து பாவத்தைப் போக்குவார். அத்தன்மையுடைய கங்காநதியினது பாதகங்களை யிந்தச்*சித்திரகங்கை நதி தீர்க்குமானால் திரிலோகத்தினு மிதற்கு நிகரானதீர்த்தமுண்டுமோ? எல்லா நூலுமுணர்ந்த முனிவர்களே! யெப்படிப்பட்ட பாதகங்களையுங் கழுநீராகப் போக்கும் வடவருவியாகிய சித்திராநதிக்குத் தெய்வத்தன்மையா லெய்துநாமங்கள் பலவுள அவற்றி லொருநாமம் வந்த கதையினைச் சொல்லுகிறேன்.

* சித்திரகங்கை - சித்திராநதி.

கேளுங்கள் முனிவர்களே! தனக்கென வொரு வூரும்பே ரு மில்லாத பிராமண னொருவன் பிரமசாரி வறுமையாற் சி றுமைபூண்டவன் தனியன் வூர்தோறும் பிக்ஷையெடுத்தா லும் பசிக்குணவு பற்றாது வருந்திக்கந்தையே யாடையாகப் புல்லாற்றிரித்தகயிறே யரைஞாணாகக் கட்டிக்கொண்டு திரி வான். மனம்விரும்பிய வொன்றுங் கிடையாம லேமாந்துதிரி வான். அந்தோ முன்னைத் தவஞ்செய்யாதா ரிம்மையின் முய ற்சி செய்தாலுங் கிடைக்குமோ? கொடிய வேனிற் காலத்தி லே கையினால் மெய்யை மூடிக்கொள்வான். குளிர்காலத்தி லேகுடங்கையால் முட்டைக்கட்டிக்கொண்டிருப்பான். பின் பனிக்காலத்திலே யரிய குளிருக்காற்றாதவனாகி நடுங்கியொடு ங்கி யொரு சிவாலயத்தைச் சேர்ந்து, உள்ளேபோய் அடிச் சூட்டுக்குப் பயந்து அரிய நெருப்பிற் குதிப்பவனைப்போலச் சிவலிங்கப்பெருமானுக்குச் சாத்தியிருந்த பரிவட்டத்தைத் திருடிப் போர்த்துக்கொண்டான். உடனே சிவத்துரோகச் செந்தீயானது அவனைப்பற்றி யெரிதலுஞ், சரீரமுழுதுங்கரி ய நிறமுற்றுக் கவலையடைந்துவருந்தி "ஐயோ பிறரிடத்துக் களவு-செய்தாற் பாவம் ஒன்றே பற்றிப்பிடிக்கும். சிவனிட த்துக்களவு செய்ததனாற் பாவ மொன்றினுக் கிரண்டாகப் ப ற்றிப்பிடித்து வருத்துகின்றதே யினிச்செய்வதென்"னென் று தேம்பிச் சிவத்துரோகஞ் சிவனாலேதான் தீரவேண்டுமெ ன்று ஒரு சிவஸ்தலத்திற் போயிருந்து சிந்தனை செய்து கொ

ண்டிருக்கும்போது, தீனதயாளுவாகிய சிவபிரான் சிறிது தி ருவுள்ளமிரங்கி யசரீரியாக நின்று அவனைப்பார்த்து" வடதி சையினின்றுந் தென்றிசைநோக்கி யாங்காங்குள்ள தீர்த்தங் களிலெல்லாம் ஸ்நானஞ்செய்வாயாகிலுன்னுடைய பாவமொ ரு ஞான தீர்த்தத்திலே நீங்கிவிடு" மென் றருளிச்செய்த னர்.

சிவத்துரோகி யதுகேட்டு உள்ளக்கவலை யொழித்துக் காடுமலையுங்கடந்து, சிந்து கங்கை காளிந்தி நருமதை கோ தாவரி கண்ணவேணி காவிரி வையை சேது பொருநையாதி தீர்த்தங்களாடித் திரிகூடமலையைச் சேர்ந்து அம்மலைச்சார லிலுள்ள புண்ணிய மிகுந்த நதியிலே மூழ்கும்போது, பாவ மெல்லாங் கழியச் சரீரத்திலுள்ள கரியநிறம் போய்ச் சூரிய னுடைய பிரகாசிக்கின்ற செந்நிற மடைந்தனன். இம்மட் டோ? பின்னர் வறுமை நோயுந்தீர்ந்து பெருவாழ்வும் பெற் றிருந்தனன். இந்த ஆச்சரியத்தாலே யந்நதிக்குச் சித்திரா நதியெனப்பெயரானது. மேலேசொல்லிய நதிகளெல்லா மி ந்த நதியிலே மாசிமாதத்திலே வந்து தீர்த்தமாடும். பலதலங் களிலுமுள்ள மூன்றரைக்கோடிதீர்த்தங்கொடுக்கும்பிரயோ சனங்களைப் பாவங்களெல்லாம் புறங்காட்டிக்காகம்போலோ டத் தெய்வவில்லைக் காட்டுகின்ற திரிகூட வடவருவித் தீர் த்தங் கொடுத்தருளுமென்று வேதஞ் சொல்லும். சங்கை. பூசித்த மதுகங்கை யென்னுந் தேனாற்றிலே மூழ்கினவர்

சனன சமுத்திரத்திலினி யொருகாலமுமூழ்கார். வாவிகளுக்கெல்லா மதுரை கும்பகோணம் சிதம்பரம் இவற்றிலுள்ள வாவிகளுயர்ந்தவைகள். நதியிலேயுயர்ந்ததுகங்கை. சமுத்திரத்திலுயர்ந்தது சேது. அருவியிலே யுயர்ந்தது வடவருவி. வேறொருநதியிலே பஞ்சேந்திரியங்களையு மொடுக்கி மூச்சடக்கி நீரிலே நின்று தவஞ்செய்வார் பேற்றைப் பின்பனிக்காலத்திற் சித்திரப்பூங்கங்கை (சித்திராநதி) யிலே யொருநாள் நித்தியகருமாநுட்டானஞ் செய்தவர் பெறுவர். மாசிமாதந்தோறும்பிரயாகையிலே பலவருடம்படிந்தவர் பெறும்பலன் ஒருநாள் வடவருவியிலேதோய்ந்தவர்பெறுவர். தாமேவந்து மூழ்கினவருக்கும் ஒருவர் பொருட்டாவது உடம்பழுக்கு ஆகுசம்போகும் விதமாகவாவது மூழ்கினவருக்குந் தண்ணீர் வழுக்கி வீழ்ந்தவருக்குஞ் சித்திரப்பூங்கங்கை பரகதிதந்தருளும்.

இம்மட்டோ? கண்டவர்க்கும் வணங்கினவர்க்கும் நினைத்தவர்க்கும் மூழ்கினவர்க்கும் ஒரு துளியாற் சரீரத்தை நனைத்தவர்க்குங் கதியருளும். பிறதீர்த்தங்கள் காலையினும் உச்சிப்போதினும் மாலையினு மூழ்கினல் தூர்க் கரும்பும் நடுக்கரும்பும் நுனிக்கரும்பும்போலப் பலன்கொடுக்கும். வடவருவி மூன்றுகாலமுஞ் சருக்கரைக்கட்டிபோல ஒரேவிதமான பலனைக்கொடுக்கும். இஃதன்றி ஒருநாள் மூழ்கினர் பண்டைவினைகள் பற்றறும். இரண்டுநாள் மூழ்கினலிம்மையிற் செய்த

வினையுமவற்றோடு பற்றறும். மூன்றுநாள் மூழ்கினவர் கருக்குழியின் மூழ்கமாட்டார். ஒருதான மந்நதியிலுயர்ந்த பிராமணருக்குக் கொடுத்தவருக்குச் சந்ததி விருத்தியுண்டாகும். யார் யார் எதை யெதை யிச்சித்தாலுங் கொடுத்தலாலந்நதி பாலாகவும் பாவவியாதியைப் போக்கலால் மருந்தாகவுமிருக்கும். அயனநாள் விஷ்புண்ணியகாலம் திருவிழா அட்டமி சதுர்த்தசி திருவாதிரை மாதப்பிறப்பு * முப்பான்மாகம் பௌர்ணமி அமாவாசை சங்கிராந்தி சோமவாரத்தோடுகூடிய அமாவாசை கிரகணகாலம் இவைகளிற் பிறதீர்த்தங்களிலே மூழ்குவார் பெறும் பலனுக்கு வடவருவியிலே மூழ்குவார் பெறும் பலன் ஆயிரமடங்கதிகமாகும். இன்னும் தாம்பிறந்த நாள் மூழ்கினராகிலினிப் பிறவியடையமாட்டார். ஆண்டு பிறந்தநாள் மூழ்கினலவரைத் தேவரெதிர்கொண்டு சிறப்புச் செய்வர். தம்முன்னோரிறந்த நாளறிந்துமூழ்கினல் இறந்தவர் நரகத்திலேயினி மூழ்கமாட்டார். வடவருவியை மறந்த நாளே மறந்தவரை யமனினைக்கு நாளாகும். திருக்குற்றாலத்திற்கு வரும்போதும் வடவருவியிலே மூழ்கும்போதும் ஒருவரை யொருவர் நினைப்பாராகி லவ்விருவருங்கதி பெற்றுய்வார்கள். அவ்விருவரைக் கண்டவரும் பிறவிப்பிணியைநீங்குவர்.

† உவா சங்கிராமம் விதிபாதம் தனித்தனி பன்னிரண்டு.

---

* முப்பான்மாகம் - மாசிமாத முப்பதுநாள்.

† உவா - அமாவாசி. சங்கிராமம்-மாதப்பிறப்பு. விதிபாதம்-ஓர்

வைதிருதி பதினைந்து ஆக ஐம்பத்தொன்று. மனுப் பதினான்கு யுகாதி நான்கு மாளயம் பதினைந்து அட்டகை பன்னிரண்டு ஆக நாற்பத்தைந்து. இவ்விரண்டுஞ் சேர வொருவருடத்தில் வருந் தொண்ணூற்றாறு நாளுந் தீர்த்தத்திலே தோய்ந்து, தருப்பணஞ்செய்வோர் பிதுர்க்கடன் முழுதுந்தீர்த்தோராவர். இதுவன்றித் தமது புத்திரர் தத்துபுத்திரர் தமது சகோதரர் அவர் புதல்வர் தமது புதல்வி பிள்ளையாசையால் வளர்த்த புத்திரர் தமது சொல்வழி மனைவியயலாரைக் கூடிப்பெற்ற புத்திரர் தம்மைக் காப்பாற்றிவந்த தன்மையாலுயர்ந்தவர் இந்த எட்டுப்பேருமே யிறந்தவருக் கெள்ளுந்தண்ணீரு மிறைப்பவர். ஆதலாலிவரிலொருவர் சித்திராநதியில் மூழ்கிப் பிதுர்க்களுக்குப் பிண்டமிடுவாரானால் சுவர்க்க பதவிக்கு ஏணி வைத்தாராவர். எள்ளுநீரு மிறைப்பாரானால் கைலாயமுஞ் சிவலோகமுங் காணியாக வைத்தவராவர்.

---

யோகம்-வைதிருதி-ஓர்யோகம். யுகாதிநான்கு - ஐப்பசிமாதத்துச் சுக்கிலபக்ஷத்து நவமி கார்த்திகைமாதத்துச் சுக்கிலபக்ஷத்து அட்டமி வைகாசிமாதத்துச் சுக்கிலபக்ஷத்துத் திரிதிகை மாசிமாதத்துச் சுக்கிலபக்ஷத்துச் சத்தமி. மனுப்பதினான்கு - மாதந்தோறும் வரும் பௌர்ணமியும் தைமாதத்துச் சுக்கிலபக்ஷத்துச் சத்தமியும் ஏகாதசியும். மாளயம்-புரட்டாசி மாதத்துக்கிருஷ்ணபக்ஷத்துப்பிரதமை முதலிய பதினைந்து திதியும். அட்டகை-மார்கழி தை மாசி பங்குனிமாதத்து அபரபக்கத்துச் சத்தமி அட்டமி நவமியாகியபன்னிரண்டும்,

இம்முறை செய்ய இயலாதவர் வடவருவியிற் படிந்து தருப்பணஞ்செய்து வேதந்தெரிந்த பிராமணருக்கேதேனும் பொருள் கொடுத்தாலுந் தென்புலத்தார்க்குப் பரகதியைக் கொடுத்தவராவர். பிள்ளையுஞ் சுற்றத்தாருமின்றிப் பிறநாட்டிற் போயிறந்தவருக்கு மேற்கூறிய எண்மரிலொருவர் வடவருவியிலொருநாட்சென்று தருப்பண முறைப்படி செய்தாலெள்ளொன்றுக் காயிரவருடம் அவ்விறந்தவர் சுவர்க்காதி பதவிகளிற் போயிருப்பார். புத்திரரில்லாதிறந்தவருந் துன்மரணமாகவிறந்தவரும் நரகத்திலே யழுந்துங்காலம் எவரேனுமவ்விருவருடைய எலும்பையெடுத்துச் சித்திராநதியிலே போட்டு விட்டால் அவ்விருவரும் நரகத்தைவிட்டு வானுலகத்தை யரசளித்து வாழுவர். எவளவென்று சொல்லுவது. இன்னுங்கேளுங்கள். கற்புடையமாதர் வரம்பை யழித்தவரும் மாதாபிதா குருவுக்கிடர் செய்தவரும் பிரமா விஷ்ணு ருத்திரனை நிந்தித்தவரும் உயிர்க்கொலை புரிந்தவருஞ் செய்ந்நன்றி மறந்தவரும் தலைவனைக்காட்டிக்கொடுத்துச்சமர்க்களத்திலோடினவரும் நம்பினவருக்குக் கபடஞ்செய்தவருமின்னுமெவளவு பாதகஞ்செய்தோரும் வடவருவியிலே படிந்தால் மோக்ஷமடைவார்.

பிரமசரிய விரதங்காத்து அந்தணர் முனிவர் கடன் கழிப்பவரும் யாகஞ்செய்து தேவர் கடன் கழிப்பவரும் புத்திரரைப் பெற்றுப் பிதுர்க்கடன் கழிப்பவரும் வடவருவியிலே

ஸ்நானஞ்செய்தே மூன்றுகடனையுங் கழித்துவிடலாம். இளமைப்பிராயத்திலறியாது செய்தபாவம் நடுப்பகலிலும் காளைப்பருவத்திலறிந்து செய்தபாவம் உதயகாலத்திலும் வயோதிககாலத்திற் செய்தபாவம் மாலைக்காலத்திலும் மூழ்குவார்க்கு வடவருவித் தீர்த்தம் போக்கிவிடும். இம்மூன்றுகாலமும் மூழ்குவார்க்கு எழுவகைப் பிறவியையுந் தீர்க்கும். ஐம்பொறியடக்கல் ஒருவழிநடத்தல் அந்தக்கரணங்காத்தல் இகழாதிருத்தல் கொடுத்தல் தம்முயிர்போலப் பிறவுயிருக்கிரங்கல் அறிவு அன்பு பொறுமை அமைதி இன்சொல் வாய்மை இப்பன்னிரண்டு முடைய மானததீர்த்த மூழ்காதவர் பிறதீர்த்தங்களிலே மூழ்கினுல் தவளை தண்ணீரிலே மூழ்கியதற்கொப்பேதவிரவேறில்லை. வடவருவியிலே மூழ்குவார்க்கு மானதத்தீர்த்த மூழ்கவேண்டுமென்பதில்லை. யென்னெனில் யாவராயினு மூழ்கினுலுடனே யவர் பாவங்களைக் கழுநீராகப் போக்கிவிடுதலாலென்க.

இந்தத் தீர்த்தமான்மியத்தை யெங்குங் கண்ணுயெங்குந்தாமாகிவிளங்குஞ் சிவபிரான் இயமனுக்கும் அகத்தியமுனிவருக்கும் வாசுசிக்குந் திருமாலுக்குஞ் சொல்லியருளியபடிவியாத முனிவர் பிண்டமாக எனக்குச் சொல்ல யானுஞ்சுருக்கமாக உங்களுக்குச் சொன்னேன், பிரமாவினுலும்விரித்துச்சொல்ல முடியாது. என்று சூதமுனிவர் சொல்லுதலும், நைமிச முனிவர்களவரைவணங்கிச் "சுவாமீ! சித்திராநதி மகி

மையாகிய தேனூறு எங்கள் செவிவாய்க்கால்வழியேசென்று வனமாகிய தடாகத்திற்பாய்ந்து தவப்பயிரை வளர்வித்தது. "இனி ஆகாயகங்கை திரிகூடமலையருவியிலேவந்து திருக்குற்றால நாதரை மதுவைச் சொரிந்து பூசித்தகாதையைக் கூற வேண்டு" மென்று வணங்கச் சூதமுனிவர்சொல்வாராயினர்,

நான்காவது வடவருவிச் சருக்கம் முற்றிற்று.

---

## ஐந்தாவது
## சிவமதுகங்கைச் சருக்கம்.

சூரிய குலத்தரசனாகிய சகரன் அசுவமேதஞ் செய்யத் தொடங்கிக் குதிரையைத் திசைகடோறும் போய் வரவிடுத்தலும், அக்குதிரையைத் தேவேந்திரன் பிடித்துப் பாதலத்திலே தவஞ்செய்திருக்குங் கபிலமகாரிஷியினிடங்கொண்டு போய்க் கட்டிவைத்துச் சென்றான். குதிரையின்பின்சென்ற சகரன் மகனாகிய போசணன் புத்திரன் அஞ்சுமான் பற்பல இடந்தோறுந் தேடியுங் குதிரையைக் காணாமற் சலிப்புற்றனன். அதுகண்டு சகரனிளைய மனைவி புத்திரராகிய சாகரர் அறுபதினாயிரவர் எங்குந்தேடிப்பூமியைததோண்டி மண்ணையுண்டபோது, குதிரையைப் பாதலத்திலே கபில முனிவரிடங்கண்டு கோபங்கொண்டு அவர்மேற் பாய்ந்தனர். அஃதறியாமல் முனிவர் சினந்து கண்ணைத்திறத்தலும், அறுபதினாயிரஞ்சாகரருஞ்சாம்பராயெரிந்தனராயிறந்தனர், அதன்பின்

சகரன் குதிரையைமீட்டுவந்து யாகத்தை நிறைவேற்றினன்.

அஞ்சுமான் மகனுடைய புத்திரனாகிய பகிரதன்றவஞ் செய்து பிரமாவைப் பணிந்து முனிவர் சாபத்தினலிறந்த சாகரர் நரகத்தைவிட்டு நீங்கும்பொருட்டுப்பிரமாவின்கட்ட ளைப்படி கங்கையைப் பரவித் தவம் புரிந்து கங்கையின் வே கத்தைத்தாங்குதற்குப் பரமேசுரனை வணங்கித்தவஞ்செய்து அவர் வரத்தினலே மீட்டுங் கங்கையை நோக்கி யளவில்லாத காலந் தவஞ்செய்தனன். அதன்மேற்கங்கையெழுந்து ஆரவா ரித்து ஆகாயத்தைத் துளைத்து எட்டுத்திசையு நடுங்க அண் டங்கள் வெடிப்ப மலையை வில்லாகவுடைய சிவபிரானை மதிப் பிலாதவளாய்த் தன்னுடைய வேகத்தைப் பூமிதேவி தாங்க மாட்டாளென்று தேவரு முனிவருஞ்சலிப்பக்கீழேகுதித்து வருகின்ற அப்போது அக்கங்கைநீரிலே நக்ஷத்திரங்கள் கயல் மீன்களைப்போலச் சுழலவும் மேகக்கூட்டங்கள் பாசிபோல மிதப்பவும் சூரியசந்திரர்கள் செந்தாமரை வெண்டாமரை போலத் தோன்றவும் ஆகாயநடுங்கவும் சிவபிரான்சடாமகுட த்திலேயாயிரமுகமாக ஆயிரம் பருவகாலம் பாய்தலும், சூரி யன்முன்னே தோன்றிய புல்லின் நுனிப்பனிப்போலொடுங் கினள், அதுகண்டு சிவபிரான் புகழை விண்ணவர்பாடியாடிக் களித்தனர்.

அண்டங்களை யுடைத்தெழுந்தகங்கை சடைக்காட்டினி டத்துவந்து வற்றுதலாலே கலக்கமுற்றுப் பரமேசுரனைப் பணி

ரதன் பணிந்தனன். கங்கையு மவருடைய பாதங்களை நடுநடு ங்கிப்பரவினள். உடனே சிவபிரான் பகீரதனுக்கிரங்கிக் கங் கையின் வேகத்தையொடுக்கி யிமயமலை விடுக்கப்பட்ட துளி வடிவாக்கி யேழுபாகமாகப் பிரித்துச் சீதை, சுசுட்டு, சிந்து வென்னு மூன்றையு மேலைத்திசையினும் நளினி, பாவனி கலாதினியென்னு மூன்றையுங் கீழைத்திசையினுங் கங்கை யைத்தெற்குத்திசையினும் நடக்கச்செய்தனர். பகிரதன்பின் னே சென்ற கங்கை சன்னுமகாருஷி வேள்வியைப்போயழி த்தலும், அவரதனைமுழுதுமுண்டு பகீரதன்வேண்டுகோளுக் கிரங்கிக் காதின்வழியாகவிடுப்ப வந்து சானவியெனப்பெயர் பெற்று மயானத்திற் சாகரர் சாம்பரிற்பாய்ந்தது. அந்தச்சா கரரனைவரு நரகத்தைவிட்டுப்பொன்விமானத்திலேறிச் சுவர் க்கலோகத்திற் சேர்ந்தனர்.

அதன்மேற் கங்கை கயிலாயமலையின்கட் சென்று நம்பெ ருமானை வணங்கி "யென்னுடைய மறைந்தவடிவத்தைக் கா ட்டியருளுக" வென்று கேட்க அவரருளிச்செய்வார் "பாவம் உருவத்தைத் தேய்க்கும். தருமம் உருவத்தை வளர்க்கும். பாவத்தினுயர்ந்தது சிவத்துரோகம். தருமத்தினுயர்ந்ததுசிவ தருமம். அத்தகைய சிவதருமம் *எண்வகைப்பத்தியினலெய்

*எண்வகைப்பத்தி—அடியார்களுடைய திருவடியை வணங்கு தல், பிறர் சிவபூசைசெய்யக்கண்டு மகிழ்தல், தான் சிவபூசைசெய் தல், தான்செய்யும் பணிவிடைகளைச் சிவபிரான்திருவடிக்கே சமர்ப் பித்தல், சிவசரிதங் கேட்கும்போது ஆனந்தக்கண்ணீர் சொரிதல்,

தப்படுவது. தோத்திரம் பத்தி பூசைசெய்யாமை பூசைசெய் தவரைத் துதியாமை பத்திசெய்ததை மறத்தல் சிவநிந்தை யாகிய ஆறும் வித்தாகவும் வேராகவும் இருந்து சிவத்துரோ கத்தை விளைவிப்பன; இவை யாறனுள்ளுஞ் சிவநிந்தையதிகம் அதனை யெளிதாகநீயடைந்தனை. அனந்தங்கோடியுகந் தவஞ் செய்தாலு நீ யிது தவிர்க்கமாட்டா"யென்றனர். கங்கையது கேட்டு வருந்தி மீட்டும் வணங்கி "யெம்பெருமானே! யிப்பா தகந் தீரும்படி யருள்செய்ய வேண்டு"மென்று பிரார்த்தித்த னள். அதற்கிரங்கி "ஆயிரவருடஞ்சிவபூசைசெய்தாயாகி லிப் பாதகந்தீரு"மென்று சுவாமியருளிச்செய்தனர். கங்கை "சுவா மீ! உமது சன்னிதியைப் பிரிந்திருக்குமொருநாள் ஒருயுகமா" மென்றுவருந்தலும், எம்பெருமான் றிருவுள்ளமிரங்கி "அ நேகவருடந் தீர்த்தற்கரிய பாவம் ஒருநாள் தன்னிடத்திலி ருந்தாற்றீர்க்கும் நமது இரகசியத்தானமொன்றுள்ளது; அ தாவது திரிகூடமலை; அந்தமலையின்மேலே யிருக்குஞ் சிவலிங் கத்தை மதுவினாலே யொருநாளருச்சனைசெய்து வணங்கினால் எம்மையணுகப்பெறுவாய்" என்று விடைகொடுத்தருளுதலு ம், கங்கையுடனே புறப்பட்டுப்போய்த் திரிகூடமலையினுச்சி யிலேயுள்ள சிவலிங்கத்தைத் தேனாலேபூசித்துவணங்க நம் பெருமான் இடபாரூடரா யெழுந்தருளிக் காட்சிகொடுத்துக்

---

மயிர்சிலிர்த்தல், சிவபிரானைத் தியானித்தல், திருப்பணிக்கென்று வாங்கியபொருளைத் தான் அபகரியாதிருத்தல்.

கங்கைக்கு இருப்பிடமாகத்தமது சடாமகுடத்தை யருளிச் செய்தனர். இங்ஙனம் சிவபிரானைக் கங்கை மதுவினாற் பூசை செய்தலினாலே அந்நீர்த்துறை சிவமதுகங்கை யென்னும் பெயர்பெற்றது. என்ற சூதமுனிவரை வாழ்த்திச் சௌனகா திமுனிவர்" சுவாமீ! யெங்களுடைய வினையாகியவெப்பத்துக் கு மேகம்போலெழுந்தருளிச் சிவமதுகங்கை மான்மிய மழை யைப்பொழிந்தீர். இனி நன்னகராகிய சர்க்கரைப்பந்தலிலே தேன்மாரி பொழிந்தாற்போலும் மூர்த்திமான்மியத்தையரு ளுக" என்றுகேட்கச் சூதமுனிவர் சொல்வாராயினர்.

ஐந்தாவது சிவமதுகங்கைச் சருக்கம் முற்றிற்று.

---

## ஆறாவது
## மூர்த்திவிசேடச் சருக்கம்.

ஒளியாய் வெளியாயுருவாயருவா யொன்றுமாகுத் தெளி யாததாய்த் தெளிந்தவர்களுக்குத் தெளிவுள்ளதாய்த் திரி கூடமலையிலன்புள்ளதா யெல்லா வுலகங்களுக்கு மரியதா மெ ன்று சொன்ன வேதமே மெய்யடியார்கட்கு எளிய" தென்று இயம்பும். ஆதலாலந்தப்பொருளின் பெருமையை யான் சொ ல்லத் துணிந்தேன். திருக்கயிலாச முதலாகிய அனந்தந் தலத் திலெழுந்தருளியிருக்குஞ் சிவலிங்கங்களைப் பார்க்கினுந் திரி கூடமலையிலெழுந்தருளியிருக்குஞ் சிவலிங்கமே யுயர்ந்த மூர் த்தியாகும். யாதுகாரணத்தாலென்னில் எல்லாத்தலத்தினு

முள்ள இலிங்கங்களிற் சிவபெருமான் சிறிதுசிறிது கூறுதங் கியிருப்பர். திரிகூடமலை மூல இலிங்கத்திலே சதா எழுந்தரு ளியிருப்பர். இதனாலென்க,

சத்தசாகரமும் பெரும்புறக் கடலும் பெருகிக்கொதித் தெழுங் கற்பாந்தகாலத்திற் சக்கரவாளமலை கால் சாய்ந்து மேருமலை நிலை கலங்கி யேனைய மலைகளெல்லாந்தடுமாறி யண் டசராசரங்களொடுங்கிப்போகச் சமுத்திரசலத்தை வடவாமு காக்கினி மண்டி யெழுந்து வற்றச்செய்தது. அங்ஙனம் வற் றச்செய்த அக்கினி யெல்லாவுலகங்களையுஞ்சுட, அஃதடங்கு மாறு பிரசண்டமாருதம் பரந்து தாவி முழுவது மொடுக்கிய பின்னர் அங்கங்கே தங்கிநின்ற விண்டலமுந் தேவர்களுந்தத் துவங்களும் பூருவத்திற்றோன்று முறைப்படி யொன்றிலொ ன்றொடுங்கச் சிவபிரானொருவரே மிஞ்சி நித்தியராய் நின்ற னர்.

அளவிறந்தகாலங்கள் பிரிந்திருக்கவும், அவற்றைப்பிரியா மலவற்றோ டைக்கமாகி யெவ்வுயிர்க்கு முணர்வாகிக்குணங் குறியுற்பத்தி நாசமின்றாகி யிருந்த சிவபிரானே சிவபுரம்போ லழியாதிருந்த *புடார்ச்சுனபுரத்தி லெழுந்தருளியிருந்து தம க்கென வொரு சொரூபமில்லராய்த் திருவருளே திருமேனி யாகக்கொண்டு சகலலோகங்களையும் படைக்குமாறு திருவுள் ளத்தினினைந்து சிவந்த நூறிதழ்களையுடைய தாமரைப்பூவி

* புடார்ச்சுனபுரம்- திருக்குற்றாலம்,

ளிருக்கும் பிரமனுருவமாகி நான்குமுகமு நான்குகிரீடங்களுஞ் எட்டுப்புயமுந் தண்டமுங் கமண்டலமு முப்புரிநூன்மார்புங்கொண்டு சரசுவதியுடனிருந்து புவனங்களெல்லாவற்றையும் பிருதிவி யப்பு தேயு வாயு ஆகாயமென்னும் பஞ்சபூதங்ளாற் சிருட்டித்துப்பின்னர் சத்தமேகங்களையும் சூரியசந்திரரையும் மற்றையேழுகிரகங்களையும் நக்ஷத்திரங்களையுந் தேவரையுந் தேவேந்திரனையுந் திக்குப்பாலகரையும் பிறதேவர்களையுந் திரிகாலங்களையும் ஆறு இருதுக்களையும் நான்கு வேதங்களையும் ஆறங்கமுதலிய பலகலைகளையும் யாகங்களையும் யாகத்துக்குவேண்டிய திரவியங்களையுங்காயத்திரிமந்திரங்களையும் படைத்து அப்பால் முகம் புயம் மார்பு தொடை இந்நான்கினின்று முறையே பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திராகிய நான்கு வருணத்தாரையுந்தந்து அதன்மேல் சமுத்திரந் தடாகம் மலை நதி சோலை காடுமுதலியவற்றையும் உண்டாக்கிப் பரசமயமாகிய சூறைக்காற்றிற்பட்டுழலாவண்ணஞ் சிவசமயமார்க்கத்தைத்தருஞ் செண்பகக்காவைச் சிருட்டித்துத் தேவர்களும் நான்குவேதங்களும் பணிசெய்யத்திரிகூடமலைச்சங்கக்கோயிலிலே குடிகொண்டிருந்தனர்.

இவ்வனம் பிரமாவாயிருந்து படைத்த பல வுயிர்களையுங் காக்கும்பொருட்டு இலக்குமிசமேதராய்ச்சங்குசக்கரதாரியாய் நீலமலைபோலுந் திருமேனிகொண்டு திருமாலாயெழுந்தருளியிருந்தனர். அதன்பின் அகத்தியமாமுனிவருக்காகத் திரி

நேத்திரம்படைத்த நின்மலராகிய சிவசொரூபராயமர்ந்திருந் தனர், அந்தக்கதையப்பாற்சொல்லுவோம். பராசத்தியைத் தழுவி யிச்சாஞானக்கிரியையைப் பொருந்தித் திருவிளையாடல்செய்யுஞ் சிவபிரானே மூவராய் முத்தொழிலுஞ் செய்து முப்பொருளாய்த் திரிகூடத்து முதல்வராவரென்றால் அவருக்கு நிகராக யாரைச்சொல்வது.* ஆரிடம் மானிடம் தேவம் அசுரம் இராக்கதம் எனப்பிரதிட்டை யிலிங்கங்களைந்துவகைப்படும். தானேதோன்றிய இலிங்கம் சுயம்பு இலிங்கமெனப்படும். இவ்விருவகை யிலிங்கங்களுமுள்ள தலங்களனந்தமாகும். அருணசலத்திலுள்ள இலிங்கம் போகலிங்கம். மதுரையிலுள்ளஇலிங்கஞ் சைவ இலிங்கம். மற்றைய இலிங்கங்கள் பராபர இலிங்கம். திருக்குற்றாலத்திலுள்ள இலிங்கம் பரமரகசிய இலிங்கமாம்.

சிவபிரான் கொன்றைமலரிலே யிமைப்பொழுதும் வில்வத்திலே நொடிப்பொழுதும் இலிங்கத்திலே யொருநாழிகைப் பொழுதுமிருப்பர். இவற்றைத்தெரிந்து தேவர்கள் திருக்குற்றாலத்திலிங்கத்திலே சதாகாலமுமிருந்தருளவேண்டுமென்று வரங்கேட்க அவ்வாறே வரந்தந்து † எழுந்தருளியிருந்தனர்.

---

* ஆரிடம்-இருடிகளாலும், மானிடம் மனிதராலும், தேவம் தேவர்களாலும், அசுரம் அசுரராலும், இராக்கதம் இராக்ஷதராலுந் தாபிக்கப்பட்ட இலிங்கங்களாம்.

† இக்கருத்துப்பற்றியே மாணிக்கவாசகசுவாமிகள் குற்றாலத்திற் குறியாயிருந்துமென்றருளிச்செய்தனர்,

இதற்கு வேதங்களே சாட்சியாகும். இம்முறையாலே யெல்லாவுலகங்களுக்குந் திருக்குற்றால முயர்ந்த க்ஷேத்திரமாகும். அங்கிருக்கும் இலிங்கமூர்த்தியே யெல்லாமூர்த்திகளுக்கு முயர்ந்த மூர்த்தியாகும்; அந்தமூர்த்தியைப் பூசிக்கும் பூசையே யெல்லா மூர்த்தியு மேற்றுக்கொள்ளும் பூசையாகும். எப்படியென்னில் ஒருமரத்தின் தூரிலே சலத்தைவிட்டால் கொப்புகளெல்லாந்தழைவதுபோலென்க.

யாகங்களுந் தவங்களுஞ்செய்து தவிக்கவேண்டா. செண்பகாரணியஞ்சூழ்ந்த குறும்பலா நிழலி லெழுந்தருளியிருக்குங் குற்றால நாதர் கோயிலை நோக்கிவந்தால் ஒவ்வொரு அடிக்கும் ஒரு அசுவமேதஞ்செய்த பேறுகிடைக்கும். அவ்விடத்துவந்து பிரம விஷ்ணுக்களாலறியப்படாத குறும்பலாநாதரைவணங்கினவர் பெறும் பேற்றை மதிக்கமுடியாது. அந்தநாதர் திருமேனியில் இரத்நாபரணஞ் சந்தனம் புட்பமாலை பரிவட்டம் புனைவித்து அலங்கரிப்பாரது சரீரத்தை யவ்வாறே யமரமாதரலங்கரித்து அவரை மகிழ்விப்பர். இன்னும் அந்த மூர்த்திக்குப் பொன்னாலாவது கல்லாலாவது திருப்பணி செய்வார்க்குச் சயலக்குமியுந் தனலக்குமியு மேவல் செய்வர். அவருக்கு ஒரு திரு நந்தனவனம் வைத்தவர் கற்பகப் பூங்காவனத்திலேபோய் வசிப்பர். அவர் திருமேனியிலே பூமாரி சொரிவார்மேலே தேவர்கள் பொன்மாரி பொழிவர். பால் தயிர் நெய் தேன் பஞ்சகெளவிய மபிஷேகஞ் செய்வா ரிவ்வுலகையாண்டு முடிவிலே சிவமயமாகுவர்.

குளகமாதிய பாமாலைகளைச் செய்து சாத்துவார் கற்பக மாலைதரித்துக் கற்பகாலம்வாழ்ந்திருப்பர். வாழைக்கனி பலாக்கனி மாங்கனி யிளநீராலபிடேகஞ் செய்விப்பார் பிரம விஷ்ணுக்களால் முடிசூட்டும் பதவியைப் பெறுவர். குறும்பலாவீசருக்கு வாகனஞ் செய்வித்துத் தந்து திருவிழாச் செய்து தெரிசித்தவர் இந்திரன் பிரமனுக்கு முயர்ந்தவராவர். கொடி குடை மேற்கட்டி பரிவட்டம் ரத்நம்பதித்த பொற்குடங் கிரீடம் மற்றையாபரணம் வழங்குவோர் திக்குப்பாலகர் பதவியைப் பெறுவராகிச் சிவப்பேறடைவர். மாலை கட்டுபவர் திருமஞ்சனமெடுப்பவர் களபஞ் சேர்ப்பவர் தூபதீபம் பரிகலங்கள் விளக்குபவர் விளக்கிடுபவர் தெய்வவடிவாகிச் சிவபுரத்திலே போய்த் தேவர் கூட்டங்கள் வணங்கச் சிவகணங்களோடு சேர்ந்திருப்பர்.

ஆதிவாரத்துதய காலத்திலே சித்திரகங்கையிலே மூழ்கிக் குற்றாலநாதரை வலஞ்செய்பவர் தேவர்கள்பணியத் திருமால் பதவியடைவர். சோமவாரத் துதயாதியிலே சங்கக்கோயிலுடைய சுயம்பு மூர்த்திக்கு ஒருபூவை யணிபவர் அணிவிப்பவரிருவருஞ் சிவபுரஞ்சேர்ந்திருப்பர். செவ்வாய்க்கிழமையில் செண்பகப்பூஞ்சோலையிற் பூவெடுத்துச்சாத்துபவர் சிவலோகத்துக்கு மைந்தராயிருப்பர். புதவாரத்திலேதும்பைமலரெடுத்து அருச்சனை செய்பவர் தேவருலகத்தைச் சேருவர். குருவாரத்தில் வடவருவித் தீர்த்தமாடி யலரிப்பூக்களாலருச்

சனே செய்பவர் வைகுந்தபதவியைச் சேருவர். சுக்கிரவாரத்திலே சருக்கரைபருப்புக்கலந்த அன்னத்தை நிவேதிப்பவர் பிரமபதவியடைவர். சனிவாரத்திலேசித்திரகங்கையிலேதோய்ந்து சங்கவீதியை யொருவலமாவது வந்தவர் திருக்கயிலாசபதவியைச்சேருவர். திருப்பணிக்குச் செங்கல் சுண்ணும்பு திரவியங்கொடுத்தவர் கைலேமலேயிலேயிருப்பர். நெல்லளவு சந்தனமாயினுங் கையளவுபாலாயினும் ஒருமலராயினுங்கொடுத்தவர் சிவலோகஞ் சேருவர்.

திரிகூடச்சிவபிரானைச் சிறுகாலசந்தியிலே பணிபவர் சாலோகபதவியுங் காலசந்தியிலேபணிபவர் சாமீபபதவியும் உச்சிக்காலத்திலே பணிபவர் சாரூபபதவியும் மாலேக்காலத்திலே வணங்குபவர் சாயுச்சிய பதவியுஞ்சேருவர். திருநாள் சிவவிரதநாள் வருடவிசேடநாளிவைகளிலே குறும்பலாநாதரை யடிவணங்க வருவோர் யாவருக்கும் ஒருநாளன்னங் கொடுத்தவர் தருமமெல்லாவற்றையுங் கொள்ளே கொள்ளுவர். இரண்டுநாளன்னமிட்டவர் திருக்கயிலாசமலேயைச் சேருவர். புண்ணியமெல்லா நிறைவேறுந் திரிகூடத்தை வந்திப்பவருக்கு அவர் வேண்டும்பொருளெல்லாங் கைகூடும். திருக்குற்றால மகிமையையெடுத்துப் புகழ்வார்க்குஞ் சங்கவீதியை வலம் வருவார்க்கு மின்பமேன்மேல்வளரும். வில்வம் ஆத்திமலர் கொன்றைமலர் குறும்பலாநாதருக்குக் கொடுப்பவர் செல்வமும் பரகதியுஞ் சொல்லுதற்கெளியவோ? இவைகள் கொடுக்க இயலாத

வர்புல்லாகிலும் இலேயாகிலும் பூவாகிலுங் கிடைத்ததொன்றை யிரவிலாயினும் பகலிலாயினுங்கொடுத்தாலுந்தேவராவார்கள். ஆலகாலவிடத்தை யமுதமாகவுண்ட அவ்வெம்பிரானுக்குப் பாற்சோறு (பாயாசம்) ஒருநாள் நிவேதிப்பவர் தேவர் கூட்டத்துடன்கூடியமுதுண்டிருப்பர். சிவனடியார்கட்கன்ன மிட்டவர் பிரமன்மாலாகிச் சிவகணத்தலேவருமாவர்.

திருக்குற்றுலத்துச்சிவபுராணம் வாசிப்பவரதுபுகழைச் சிவபுரத்து வாழ்கின்றவரெல்லாம் வாசித்து மகிழுவர். திரிகூடநாதரைப்பூசிப்பவர் தேவரென்றுசொல்லத் தேவர்களவரைப்பூசிப்பார்கள். நீலகண்டராகியசிவபிரானடியாரைக் காக்குங் கடமைபூண்டவர் மிண்டராலும் வெற்றியுண்டாகும். அவ்வடியார்கட்குத்துன்பம் விளேப்பாராஞல் தேவர்களாலுமவர்கட்கு அவசயமுண்டாகும். திரிகூடநாதர் தொண்டர்க்குத் துணையாவார்க்கே துணையாகுவர். தொண்டர்க்குப் பகையாஞர்க்கே பகைஞராவர். அவரது அடியார்க்கு அன்னஞ்சமைப்பவர் பெருமையை யெவ்வாறுசொல்லுவோம். அவ்வடியாருண்ட பரிகலத்தை யெடுத்தெரிந்தவர் தேவர்களுக்குள் வித்தியாதரராய்ச்சிறந்தவராவர். இந்திரவில்லேக்காட்டும் அவரது வடவருவித் தீர்த்தத்தையள்ளித் தெளித்துக்கொண்டாலுஞ் செம்மொழியுமாஞல் அகத்தியமுனிவருக்காகச் சிவபிராஞகிய அந்தமூர்த்தியைத் தொழுவார் கதியை யென்னென்று கூறுவது.

எல்லா அண்டங்களையும் ஆக்கல் காத்தலுடையாராலு மறியக்கூடாத திருக்குற்றாலமூர்த்தி மான்மியங் கூறுந்தகுதி யுடையதோ? அம்மூர்த்தியடிமையானாரைப் புகழ்வோரானு லவராது அடியார்க்குப் பிரமலோகம் வைகுந்தலோகமொருபெ ரியதன்றாகும். என்று சகல புராண நூல்களுந்தெரிந்த சூத முனிவர்சொல்லுதலும் வணங்கித்துதித்து"நன்று நன்று திரி கூடமலைக்கடவுள் போலருட்கடவுள் உலகந்தோன்றுமன்று மில்லை. யின்றுமில்லை. யென்றுமில்லை. ஈததிசய"மென்றாடிப் பாடிநெருங்கியசடாமகுடத்தையுடையமுனிவரெல்லாம்"சரீ ரமெடுத்த பிரயோஜனத்தை யின்றுபெற்றோ"மென்று"பின் னும் வணங்கி" முனிபுங்கவ! அந்தமூர்த்தியினிடத்தன்புற்ற பராசத்திபீடத்தின் மான்மியத்தையருளிச்செய்க" வென்று வினவ இமயமலையிலிருந்து அகத்தியமுனிவர் பொதியமலை க்குவரும்போது பரமேசுரனவருக் கருளிச்செய்தகிதை மு றைப்படி சூதமுனிவர் சொல்லுவாராயினர்.

ஆறவது மூர்த்திவிசேடச்சருக்கம் முற்றிற்று.

---

## ஏழாவது
## பராசத்திபீடச்சருக்கம்.

முதலிடைகடையென்னு மூன்றும், அளவையுமில்லாத பிரமப்பொருளினின்றும் பிரணவந்தோன்ற அதிலே நின்று நாதந்தோன்ற அதனிடத்து விந்துதோன்ற அதனிடத்திற்

றேன்றியகடவுள் திரிகூடத்திலே குணமுங் குறியுங் கடந்து நின்றருளினர். மேலேசொல்லிய நாதத்திற்றேன்றிய விந்து சத்தியிலே பிறந்துபோகமுண்டாதற்கிடமாய் நின்மலியாகிய பராசத்தி சகலமுந்தோன்றுங் காரணத்தால் திரிகூடச்சிவபிரான்பாற்கலந்திருந்தனள். சிவகோணம்நான்குசிற்சத்திகோணமைந்து ஆக ஒன்பது கோணத்துள்ளு நாற்பத்துமுக்கோண சக்கரவட்டந்தோன்றும் அதன் மேலுமே லும் எட்டிதழ் பதினறிதழ் இருபத்துநான்கிதழ்கொண்ட சதுரவடிவாகிய ஒரு பீடமுள்ளது. அந்தப்பீடந்தான் கருணைவடிவாகியபராசத்தி பீடமென்று சொல்லப்படுவது. அந்தப்பராசத்திமேலான யோகத்திருத்தலாலே யோகபீடமென்றும் உலகமெலாந்தோற்றுவித்தற்கு மூலமாயிருத்தலாலே தரணிபீட மென்றுஞ்சொல்லுவர், அத்தன்மையான பீடத்துள்ளே பெம்பிரான்பாகத்திலிருக்குமெம்பிராட்டியெழுந்தருளியிருப்பள்; அவளிடத்திலே யாதிசத்தி, யிச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தியென்னச்சிவபிரான்றிருவருளால் நால்வர்தோன்றுவர். இந்த ஐவர்சகாயத்தினல் அவ்வெம்பிரானெல்லாக்கிருத்தியங்களு நடாத்துவர். ஐவர் வடிவத்தை யெம்மாலியம்பமுடியாது. ஆபினுமியன்றமட்டுஞ் சொல்லுவோம். பராசத்திமுதலிய பஞ்சசத்திகளுக்கு முறையே முகங்கள் ஐந்து, நான்கு மூன்று, இரண்டு, ஒன்று. முறையே நிறங்கள் வெண்மை பச்சை செம்மை பால் பொன்மையாகும். கண்கள் ஒவ்வொருவ

ருக்கு மும்மூன்று. தாமரைப்பூ அபயம் ஆயுதம் செபவடந் தாங்கிய கைகள் ஒவ்வொருவருக்கும் நந்நான்கு.

மேற்கூறிய பஞ்ச சத்திகளாலு மெம்பிரான் பஞ்ச கிருத்தியஞ் செய்யாநிற்பர். பராசத்தியே கருணையா லாதிசத்தியாகத் தோன்றித் தேவவருடமாயிரங்கருக்கொண்டிருந்து ஒரு கற்பத்திலே யிலக்குமியையும் பிரமனையும் பெற்றாள். மற்றொரு கற்பத்திலே முன்போலக் கருவிருந்து விஷ்ணுவையும் உமாதேவியையும் பெற்றாள். அதன் பின்னொரு கற்பத்திலே கருமுதிர்ந்து சரசுவதியையும் சிவபிரானையும் பெற்றாள். அதன்மேல் பிரமனுக்குச் சரசுவதியும் விஷ்ணுவுக்கு இலக்குமியு மனைவியாக்கிப் பின்ன ரெம்பிரா னுமாதேவியை மணஞ்செய்துகொண்டனர். நிமலனாகிய பிரமசாரி யுமாதேவியினிடத்தி லுலகமெல்லாமுண்டாதற்குக் குற்றாலம் கோவிதாரம் சமருகம் என்னு மூன்றுபேரையுடைய, வரையாத்திமர நிழலிலே யெழுந்தருளி யிருத்தலாலே யும்மரப் பெயரிலொன்றாகிய குற்றாலமென்பது * மூலட்டானத்துக்கு ஆகு பெயராய் அம்மூலட்டானத்தையுடைய அத்தலத்துக்குப் பெயராயிற்று.

ஆதிசத்தி மூன்று கருத்தாக்களைப் பெற்றதாலுந் திருக்குற்றாலத்துக்குத் திரிகூடமென்னும் பெயர்விளங்காநிற்கும், அந்த ஆதிசத்தி சந்நிதானத்தின் முன்பு தாணுமாலயத்தொ

* மூலட்டானம்—மூலஸ்தானம்,

ட்டில் ஆடா நிற்கும். திரிமூர்த்திகளும் விநாயகர் முருகக்கடவுள் மன்மதன் முதலிய மற்றைத் தேவர்களெல்லோருங் கலந்து நிற்பர். * பரானுபவஞ் † சிவானுபவமென்னு நாழியாலிரண்டுபடி நெற்கொண்டு சகல அண்டங்களையும் வளர்த்துத் தருமங்களையும் வளர்க்குந்தாயாய்ச் சிற்பரனிடத்துச் சிற்சத்தியாய் அலைகடல்போல நீங்கி நீங்காதிருக்கும் புராதனியாகிய திரிகூடத்திரிபுரையை யன்றி யாவருக்கும் வேறுபுகலில்லை. அந்தப் பராசத்தி பீடத்திற் சித்திரை மாதத்திலே பசுவினெய்யா லபிடேகஞ்செய்து பராசத்தி பாதத்தை வணக்கஞ்செய்பவர் வைகுந்த பதவியடைவார். வைகாசி மாதத்திலே செண்பகப்பூவா லருச்சனைசெய்பவர் சிவபதத்திற் சேருவர். ஆனி மாதத்திலே வெள்ளிய மல்லிகை மலராலருச்சிப்பவர் பிரம பதவியைப் பெற்றுவாழ்வர். ஆடி மாதத்திலே பச்சைக் கருப்பூரங்கலந்த சந்தனக்குழம்பை யபிடேகஞ்செய்பவ ரிந்திர பதவி பெய்துவர். ஆவணி மாதத்திலே வெண்ணிறவலரிமலரும் பொன்னிறவலரிமலருஞ் சாத்தினவர் சரசுவதி யிலக்குமியருளைச் சாருவர். பவளமல்லிகை மலர் சாத்தினவர் பராசத்தி யருளாற் சிவபதத்திற் சேருவர். புரட்டாசி மாதத்திலே நெய்கலந்த அமுதமைத்து நிவேதிப்பவர் சூரிய பதவியை யடைவர். ஐப்பசி மாதத்திற் சந்தனாதித்தயில மபிடேகிப்பவர்

---

* பரானுபவம்—பரபோகம். † சிவானுபவம்—சிவபோகம்; இவற்றினுண்மை சைவசித்தாந்த சாஸ்திரங்களிற் கண்டுணர்க.

பிரம பதவியைப்பெறுவர். கார்த்திகைமாதத்தில்நெய்விளக்கிட்டுத்தரிசிப்பவர் கருவிலேயினியுருவடையமாட்டார். மார்கழிமாதத்திலே பருப்புப் பொங்கல் நிவேதனஞ் செய்பவர் தேவருலகிற் சென்று அமுதமுண்டு வாழ்வர். தை மாதத்திலே கருப்பூர தீபமிட்டு வந்திப்பவர் தேவகுல தீபமாக விளங்குவர். மாசி மாதத்திலே * பஞ்சவாசங் கலந்த கும்ப நீரபிடேகஞ் செய்தவர் ஒரு நாளுங் கெடாத பரமபதத்திலே பயின்றிருப்பர்.

இத்தன்மைய பராசத்தி பீடத்தைக் கையால் வணங்கிஞற் கையாற்செய்த கொலை முதலிய பாவந்தீரும். நாவால் வாழ்த்திஞல் வாக்கிஞலே செய்த நிந்தனை முதலிய பாதகங்கள் நீங்கும். கண்ணுற்றரிசித்தவர்க்குக் கண்ணுலே செய்த பிறர் மனைவியரை விரும்பிப்பார்த்தலாதிய பாவங்கள் விலகும். வலஞ்சூழ்ந்தவர்க்குச் சகல பாவமுந் தானேயகலும். திருக்குற்ருலஞ்சென்று பராசத்தி பீடத்தைத் தெரிசிக்கும் வரைதான் மனம் வாக்குக் காயத்தாற் செய்தபாவமும் பழவினைகளு நிற்கும். பராசத்தி பீடத்தெதிரே பிரம காயத்திரி மந்திரஞ் செபித்தா லாயிரங்கற்பம் பிரமனுருப்பெற்று வாழ்வர். விஷ்ணு காயத்திரி மந்திரஞ் செபித்தாலாயிரங் கற்பம் விஷ்ணுவடிவம் பெற்று விளங்குவர். பஞ்சாக்ஷர மந்திரஞ்செ

---

* பஞ்சவாசம்—ஏலம் தக்கோலம் இலவங்கம் சாதிக்காய் கருப்பூரம்.

பிக்கிற் பதினாயிரங் கற்பஞ்சிவசாபரூபம் பெற்றுக் கயிலாச மலையிலிருப்பர். இந்த விதமாக இன்னுமனந்தமான்மியமுள் ளது பராசத்தி பீட மென்று அகத்தியமாமுனிவருக்குச் சிவபிரானருளிச்செய்தபடி சூதமுனிவர்சொல்ல, நைமிசாரணிய முனிவர் கேள்வியுற்றுக் களிகூர்ந்து "குறும்பலாமான்மியஞ்சொல்லுக" என்று கேட்கச் சூதமுனிவர் சொல்வாராயினர்.

ஏழாவது பராசத்தி பீடச்சருக்கம் முற்றிற்று.

---

## எட்டாவது
## குறும்பலாச்சருக்கம்.

இதுவென்று சுட்டிக்காட்டு மியல்புக் கெட்டாததாய் நினைத்தற்கரிய பரஞ்சோதி யருள் வடிவங்கொண்டு இச்சா ஞானக்கிரியை யென்னு மூன்று சத்திகளா னுலகத்தைச்சிருட்டித்தபின் அவரது ஐந்து திருமுகங்களினின்று மிருபத்தெட்டாகமங்கள் தோன்றின; அவ்வைந்தினுள் அதோமுக நீங்கிய ஏனைநான்கு முகங்களினின்று நான்கு வேதங்களும் பிறந்தன. கருத்தாவின்றிருவருளால் அவ்வேதங்கள் நான்கும் * ஆறங்கமாயனந்த மிருதிகளாய்ப் பற்பல பேதநூல்கள், புராணங்கள், மற்றைய கலைகளாய்க் காலங்கணக்குக் காட்டிக் கதிகளுக்கெல்லாம் வழியாய் விளங்கும். பிரம விஷ்ணுக்கள் படைப்ப

* ஆறங்கம் - மந்திரம் வியாகரணம் நிகண்டு சந்தோபிசிதம் நிருத்தம் சோதிடம்.

துங் காப்பதும் இந்திரனரசு செய்திருப்பதும் வானவர்வாழ்க்கையும் அந்தணர் யாகங்களும் ஏனையோர் செய்யுந் தவமுதலியவும் எங்கும் நடைபெறுவது வேதங்கள் நடைபெற்று வருவதனாலன்றோ? அவரவர் குல ஆசாரம் அநாசாரங் குணங் குற்றம் இன்பதுன்பஞ் சத்தியம் அசத்தியம் புண்ணியம் பாவம் சுவர்க்கம் நரகம் ஆதியவற்றைப் பிரித்துக் காட்டலால் அவ்வேதங்கள் கண்களுக்குச் சமானமாகும்.

அவ்விதமாகிய வேதங்கள்: ஒரு பிரமனுடைய பகற்காலத்திலே பலமனுக்கள் நாசமடைதலும்,இராக்காலத்திலேயுலகமெல்லா மிறந்துபடுதலும் பார்த்து வருந்தி, நாமினியொருகாலத்து மழியாதிருக்கும் உபாயம் யாதென்று உபநிடதப் பொருளாலுணர்ந்து நெற்றிக் கண்ணையுடைய சிவபிரானலன்றி மற்றெவராலுமிந்தவிபத்து விலக்குதற்கரிதென்று தெளிந்து "அவரது பேருளைவேண்டி னறஞ்செய்யவேண்டும்; அந்த அறமும் தானந்தவமென இரண்டுவகைப்படும். இவ்விரண்டும் புண்ணியமென்றாலும், தானம் வானமுதலிய போகங்களையே வளர்விக்கும். விரதமுற்றி மௌனமா யாதொருபற்றுமில்லார்க்குத் தவந்தான் மோக்ஷத்தைத்தரத்தக்கதென்று உறுதிப்படுத்தித் தவத்தின் பயனை யெளிதிலே யருளுவது திருக்குற்றாலத்தலமென்று ஆராய்ந்து,அவ்விடத்துள்ள செண்பகாரணியத்தில் வந்து, பலா விருக்ஷமாகி உற்பத்தி நாசமில்லாத சிவமூல மந்திரத்தையுந் ·தூலசூக்கும மந்திரத்தையும்

முறைப்படி செபித்துத் தவஞ்செய்து, நெடுங்கால நம்பெருமானைத் தேடி நின்றன.

இவ்விதந் தவஞ்செய்து இளைத்து வாடிச்சலனமடைந்து தேவவருடத்திற் பதினாயிரவருடஞ் சென்றும் இறைவன்வெளிப்படாததனாலே யேக்கமுற்றன. நம்மிறைவனெளிதில் வெளிப்படக்கூடியவரோ? அதன்மேல் அவரது ஆயிர நாமங்களையுந் துதித்துப் பின்னுங் "கங்கைவார்சடையாய் பிரமன் விஷ்ணுக்களறியப்படாதாய் மங்கைபாகா மந்திரசொரூபா சங்கவிதியாய் சம்புநாதா செங்கைமான்மழுவா செண்பகாடவியாய் நிருமல நிராமய நித்தனே நீற்றனே நெற்றிக்கண்ணனே குறுமுனிதயாகரா குழல்வாய்மொழிமனோகரா! நமோநமோ" என்று பலவாறாகத் தோத்திரஞ் செய்தலுந், திரிகூட நாதர் திருவுள்ள மிரங்கி யிடபாரூடராய்ச் செண்பகப்பூங்கோதையாகிய குழல்வாய் மொழியம்மையுடனெழுந்தருளி யாகாயத்தினின்று "வேதங்களே! தென்றற்காற்றுடன் யாமிருக்குஞ் செண்பகாரணியத்தில் வந்து தவஞ்செய்து நம்மைத் தேடித் தோத்திரஞ்செய்ததை மகிழ்ந்தோம். உங்களுக்குவேண்டிய வரங்களைப் பெற்றுக்கொள்க" என்று திருவாய் மலர்ந்தருளுதலும், வேதங்கள் கண்குளிரத் தரிசித்துப் பேரானந்தமுற்று வணங்கிச் "சுவாமீ! யும்முடைய திருவடிகளை வணங்கி யிந்தநிலையிலே யாங்கள் நிற்கவேண்டுவதொன்று, எங்களுடைய நிழலிலே யுமாதேவியாருடனேநீரெழுந்தருளியிருப்பதொ

ன்று, பிரளய வெள்ளத்திலே யெல்லா வுலகமுமழியும்போது முமது திரிகூடமலை யழியாதிருத்தல்போல யாங்களு மழியாதிருப்ப தொன்று; இந்த மூன்று வரங்களுந் தந்தருள வேண்டும்" என்று கேட்க "அப்படியேயாகுக" என்று அநுக்கிரகஞ்செய்து நம்பெருமான் மறைந்து சென்றனர்.

உடனே நான்கு வேதங்களு மொன்றுகூடி யொரு பலா விருக்ஷமாகிப் பிரணவம்வேராகவும்*பாகை யிரண்டுங்கவடாகவும் சுருதிமுழுதுங் கிளைகளாகவுஞ் சாகைகள் வளார்களாகவும் உபநிடதங்கள் கருவாகவும் நின்று தருமார்த்த காமமோக்ஷங்களை யுதவும். இந்த மான்மியமுள்ள குறும்பலா நான்கு வேதங்களாதலினாலதனிடத்து எந்தத் தேவருமிருப்பர். ஒரு குடநீர் குறும்பலா விருக்ஷத்தின் தூரிலே வார்த்தால் தேவருக்குந் திரிமூர்த்திகட்கு மபிடேகஞ்செய்சுதாக முடியும். அதனிழலிலிருந்து செபஞ்செய்யுமந்திரங்கள் ஒன்று கோடியுருவாகும். அங்கிருந்து விஷ்ணு நாமங்களைத் துதிப்பவர் வைகுந்தபதவி யடைந்து வாழ்வர். வேத பாராயணஞ் செய் வேதியர் கயிலாசமலையைச்சேர்வர். ஏதாவதொருயாகஞ்செய்பவ ரிந்திரன்போல் நூறுமகஞ் செய்த பிரயோசனத்தைப் பெறுவர். ஒரு மாதம் வெற்றிலை பாக்குத் தானஞ்செய்பவர் சந்திரமண்டலத்தைச்சார்ந்திருப்பர். மாதந்தோறுங் கொடுப்பவர் மகிமை வாயாற்சொல்லுதற்கரிது. இரண்டுபடி நெல்

* பாகை—கருமகாண்டம், ஞானகாண்டம்.

விளையும் பூதானஞ்செய்பவர்எழுலுலகத்துக்குமிறைவராவர். பிதுர்ப்பலியிடுவார்இருபத்தொருதலைமுறையும்பிதுர்க்களைக் கதியிலே சேர்ப்பவராவர். நெல் பொன் அன்னம் பசுவுக்குப் புல் தானமாகக் கொடுப்பவருக்குத் தேவர்க ளவருலகத்தில் விருந்து செய்வார்கள். செங்கல் திருப்பணிக்குக் கொடுத்தவர் அரசராவர், கருங்கற்கொடுத்தவர்கயிலாசமலைபிற்கலந்திருப் பர். பஞ்சாக்ஷரத்தைச் சொன்னவருந் துதித்தவரும் வான வர் துதிக்கும் வாழ்க்கை பெறுவர். இத்தன்மையுடைய மா ன்மிய முழுவது மகத்தியருக்கு நம்பெருமானருளிச் செய்த படி சொல்லிச் சூதமுனிவர் மானதஸ்நானமும் நதிஸ்நானமு ஞ் செய்யாதவருக்கும் முத்தி தோய்விக்கு மந்தமாருதஸ்நா னமான்மியத்தை நைமிசாரணிய வாசிகளுக்கு வழங்குவாரா யினர்.

ஏட்டாவது குறும்பலாச்சருக்கம் முற்றிற்று.

---

## ஒன்பதாவது.

## மந்தமாருதச் சருக்கம்.

செண்பகாரணியம் வேதவியாச முனிவருஞ் சனகராசா க்களும் புகழ்ப்பெறுவது. தன் பெயரைச் சொன்னவருக்குப் பழைய வியாதியையும் பாவத்தையுந் தொலைத்து வேதநூற் கல்வியையு ஞானத்தையுங் கொடுப்பது. நினைத்தால் செல்வம் வீடுபேறு கொடுப்பது. ஐஞ்ஞூறு அந்தணர் யாகசாலை யுடை

யது. தவஞ்செய்யுந் தேவராச்சிரமங்களையுடையது. பராசத்தியுடன் பரமசிவனெழுந்தருளி யிருக்குங் கோயிலையுடையது. சந்தனப் பூஞ்சோலையாகிய வேலியையுடையது. அந்த ஆரணியத்திலேபிறந்து அம்மரக்கிளைகளாகிய தொட்டிலிலே விளையாடித் தேனருவியிலே தோய்ந்து சங்கக்கோயில் முற்றத்திலே தவழ்ந்து திரிவது தென்றலாகிய பிள்ளை. அத்தன்மையுடைய இளந்தென்றற் காற்றின் மகிமையாலே திரிகூடமலையி னாற்றிசையினெல்லையுள்ளே பொருந்தி யுயிர்விடுத்த பாதகமறையோன் உபத்திரவநீங்கி மோக்ஷமடைந்த காதையை யினிமேற் சொல்லுவோம். ஆகாயத்தை யளாவிய தென்னம்பாளையையுடைத்துமேற்போய்மேகத்தைக்கிழியும்படி, வாளைமீன்பாய அதனதன் பிள்ளையைத் தேடுந் தாய்போலத் தாழை கமுகு மா வாழைமரங்கள் மேலேதாவித் தேமாஞ் சோலையினுச்சியிற்பாய்கின்ற அலைகளையுடைய நீர்வளமுள்ள சோழதேசத்திலே நீதியே நீராகக் குடிகளே பயிர்களாகச் செங்கோலேவேலியாகச் சோழராசாக்கள் அரசுசெலுத்தாநிற்பர். அத்தேசத்திலே பெருமை நிறைந்த பிராமணகுலத்திலே தலைமைபூண்டு வேதமுதலாகிய கலைகளெல்லாங் கற்றறிவையுடையவனும் அரியவேள்விகள் செய்யும் அத்திரிமுனிவர் கோத்திரத்திற் பிறந்த மகத்துவமுள்ள அத்திரியென்னும்பெயருடையவனொருவன்; அவனில்லறம்பூண்டொழுகு நாளில் அவன்வாழ்க்கைத்துணைநலமாகியகற்பின்மிக்கமனைவி

கருப்பவதியாயிருந்து ஆத்திரேயனென்னுமொரு புத்திரனைப் பெற்றனள். குலத்துக்கொருபிள்ளையாதலாலே பூமியில் மூன்றுவருடமிதித்தறியான். அருமைத்தாய் தந்தையர் முடிமேலு மடிமேலுமார்பின்மேலுங் கைமேலும் நல்லமரத்துக்குப்புல்லுருவிவளர்வதுபோல் வளர்வதாயினுன்.

நான்காம் வயசிலே பூமியிலேயவன் பழகும்போது தருமமெல்லாம் பயந்து ஒலிட்டழுதல்போலத் தண்டை சதங்கை முழங்கின. கீழேகிடந்தபாவமெல்லாம் நடைகற்கும்பொருட்டு, நடக்கத்தொடங்கினன். மன்மதன் ஐம்படைகளும், நாண் (விற்கயிறு) பூண,ஐம்படை (ஐந்துஆயுதங்கள்வடிவாற் செய்த ஆபரணம்) நாண்பூட்டியஆபரணமார்பிலேதரித்தான், தனக்குமேலொரு பிறப்பில்லாத வுயர்ந்தகுலத்தில்வந்த அவனுக்குப்பிராமணர் விதிப்படி ஐந்தாம் வயசிலே யுபநயனஞ் செய்வித்தார்கள். ஏழாம் வயசிலே பலகலைகளும் படிப்பித்தார்கள், பன்னிரண்டுவெயசுவரையும் படிக்கும்போதுகிளியைப்போலச்சொன்னதே சொல்லுவானுகித் தனக்கெனச்சுதந்திரவறிவொன்றில்லாதவனுயிருந்தான், ஸ்நாநஞ்செய்யும்போது அவ்விதியொன்றுந்தெரியாது நீர்க்காக்கைபோலமூழ்குவானுயினுன். கிரியைசெய்யுமார்க்கத்தி லதன் பயனுணராது அபிநயப்பாவைபோல நடிப்புச்செய்வானுயினுன். அரியநூல்களாராயும்போது அறம் பொருள் மோக்ஷநூலைக் கைவிட்டு இன்பமாகிய காமநூலையே கற்பானுயினன். காமநூலினும்

*பெருந்திணையொன்றையேகற்று ஏனை †ஐந்திணையைமறப் பானாயினன். அவன் புருவம் முகங் கண் மார்பு வடிவங்களைக் கண்டமாதர் மனமும்வஸ்திரமுஞ்சோர வனப்புவாய்ந்து பதி னாறுவயசடைந்து மன்மதசொரூபனாயினான். அருவமொன்ற டையாதிருந்தா லந்தமன்மதனேயிவனென்பதற்கையமில்லை. கரும்புவில்லில்லாததனாலே யிரதிதேவியிவனைத் தன்னாயக னில்லையென்றறிந்தனள். அவ்வில்லால் மன்மதனிவன்மேற் போர் செய்யத்தொடங்கினன்.

அளத்தற்கரிய அழகின்மிகுந்தவனாதலாலவனைக்கண்ட அரம்பை மாதர்போல்வாரெல்லாரும் விளக்கில்வீழும் விட்டில் போலச் சூழ்ந்து வீழ்வாராயினர். சலனமற்ற விகாரத்தாலே யிந்தமாதரை யவனும் ஒட்டில்வீழும் பறவையைப் போலச் சுற்றுவானாயினன். மிக்க பொருள் கல்வி ‡செல்வம் சுற்றம் இளமைகளைப்பெற்றான். வாழ்வார்க்கு இவ்வைந்திலொன்றே போதும். இவ்வைந்தையுங் காமமாகிய வெடிப்பு நிலத்திலே வீழ்க்கத்தொடங்கினான். நற்குடியிற்பிறந்தாரேனும் அறிவி ல்லார்க்கு வாழ்க்கையுண்டுமோ? நடுராத்திரியிலேபிறர்தலைவா யிலிற்றிரிவான். தாய் தந்தையர் வார்த்தைகேட்கமாட்டான்.

---

*பெருந்திணை ஒவ்வாக்காமம், அது மடலேறுதல் முதலியவற்றி ல் மனவொருமைப்பட்டு யௌவன நீங்கிய வழியுங்காமப்பற்றறாது வருந்தல்.

† ஐந்திணை—அன்புடைய காமம்.

‡ செல்வம்—சீர், அதாவது பலவழியால் வருஞ்சிறப்பு.

மேற் குலத்தே பிறந்தும் கீழ்க் குலத்தாரோடு சேர்ந்து பன்றியுடன்சேர்ந்த பசுவின்கன்றுபோல்வானுயினன். பெரிய எட்டிலெழுதாது வாயினுலே வேதமோதுவாரை நீங்கிப் போய்வண்டுகளேயுடைய விதழிலேயெழுந்தாதுக்களேயுடைய மலர்களே மாதர்களுக்காகப் பறிப்பான். அக்கினிகாரியத்தை விரும்பிய ஒழுங்குப்படிசெய்யுந் தருப்பைப்புல் சிலவற்றைக் கையிலே தாங்குதலேவிட்டுக் கொடியவேட்டையாடுங் குணத்தைவிரும்பும் வில்லேத்தாங்கித் திரிவான். பெருமையாயத் திரிமுனிவர் கோத்திரத்திலவதரித்திருந்தும் அன்னியமாதர் கலவிப்போரைவெல்ல,மாறுபட்டதாழ்குலத்தாரோடுங்கூடிச் சஞ்சரிப்பான். வேதங்களேயாராய்ச்சிசெய்ய நடப்பவரை நிந்திப்பான். மயில்போலுஞ் சாயலு நிறமு முருவமுமுள்ள மங்கையர் மயக்கத்தாலுயர்ந்தகாயத்திரிமந்திரத்தை மறந்துவிட்டான். * பஞ்சயாகத்தைக்கண்டு பயப்படுமனமுடையவனுய்ப் பிராமணகுலத்து மிகுந்த கீர்த்தியுடைய †ஆறுதொழிலேயும் அற்றதொழிலாகக் கைவிட்டான். பஞ்சுமெத்தையிற்கலவி நலம்பழகிக் காதுகளிலே பெண்கள்சொல்லும் நடனரகசியமே பேசும் நான்குவேதமாகக் கைக்கொண்டான். சந்தி

---

*பஞ்சயாகம்—பிரமயாகம், தெய்வயாகம், பூதயாகம், பிதுர்யாகம், மானிடயாகம்.

† ஆறுதொழில்—ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்.

யாவந்தனங்களை மறந்திருந்தாலும் பொதுமாதரிருப்பிடமாகிய வீதிகளைமறந்திருக்கமாட்டான். அநுட்டானகாலத்திலே முதலாவது தொடுமிடங்களைமறந்திருந்தாலும் பொதுமாதர் சேலைமுந்தியைத் தொட்டிழுக்குங் கிரமத்தை மறந்துதிரியமாட்டான். பிரமசரியவிரதம் கைவிட்டதனாலே பிரமசரியமணமும் பிரசாபத்தியமணமும் விட்டொழிந்தான். யாகமிழந்ததனாலே தெய்வமணச்சடங்கை நீங்கினான். வேதவொழுங்கு தவறியதனாலே ஆரிடமணத்தையுமகன்றான். ஏட்டிலெழுதுதற்கரியபாவைபோலும் பெண்களை வழிநடக்குங் காலத்திலும் பெரியகாட்டில் நித்திரைசெய்யுங்காலத்திலும் பைசாசமணஞ்செய்தான். பிராமணர்க்குமுறையல்லாத விதமாகப் போய் இடபேறுதழுவியிடைப்பெண்களையாசுரமணஞ் செய்தான். குலத்திலிழிந்த ஏழைகளின் பெண்களைப் பலவந்தமாக இராத்திரியிலே பற்றிக்கொண்டுபோ யிராக்கதமணஞ் செய்தான். கள்ளத்தனமாகச் சிலசூத்திரப் பெண்களைக் கண்டு காந்தருவ விவாகஞ்செய்தான். இத்தகைய துர்ச்செய்கையினாலே வீட்டிலுள்ள மனைவியரை நாகணவாய்ப் பறவையைப் போலச்சிறைப்படுத்திவைத்துவிட்டுக் காமாக்கினியை வளர்க்கின்ற கலகஞ்செய்யுங் கண்களையுடைய கணிகைமாதரைப் பூமேலிருக்கு மன்னப்பக்ஷியைப்போலப் பொன்னாற்பொதிந்து அவரது உடலே நிலமாகவுங் கொங்கையே விதையாகவும் மோகசம்பந்தமே கலப்பையாகவும் போகமாகிய வேளாண்மையை விளைவித்தநுவிப்பான்.

பகலுமிரவுமாகிய காலங்களில் இரண்டுமூன்று சந்தியா வந்தனமுமறந்து சரியை கிரியை யோக ஞான வொழுக்கங்களுந்தவற வேதமந்திரவிளக்கமெல்லா நாளுக்குநாள்மங்கையர் மோகமாகிய சூறுவழிக்காற்றுலவிந்தன. தொன்றுதொட்ட நீதிவழிநடப்ப ஞானக்கண்ணில்லாதவனுய் மோகமாகிய புலி தொடர்ந்துபற்ற வோடிக் கொடிபோலுமிடையினையுடைய வேசையர் முலையாகிய மலையாலிடறப்பட்டு, அல்குலாகிய தடாகத்திலே வீழ்ந்தழுந்தினன். மாதராகிய கொம்புகளி லெல்லாமவன் காமமாகிய தளிர்தளிர்த்துச்சாதிவரம்புதோறும் வசைச்சொற்காடுபெருகித்தெருத்தோறும் சபைதோறும் அலர் தூற்றலாகிய அரும்புகட்டியெவ்விடத்தும் வீண்வார்த்தையென்னுங் குற்றமாகிய வடுக்கள்காய்த்தன. இவையனைத்துமவன் குலகுருவானவர் காதாரக்கேட்டு ஞானசாத்திரத்தை யுபதேசிக்கஅவனிடத்திற்சென்று தாம் முன்பு அவனுக்குப் படிப்பித்த கல்வியையுந் தம்மையு மறந்திருப்பதறியாதவராய்த் தனியிடத்திலேயவனையிருத்திச் சொல்வாராயினர்.

"யானைமுதல் எறும்பிறுதியாகச் சொல்லப்பட்ட எண்பத்துநான்கிலக்க யோனிபேத சீவராசிகளுக்குள்ளே மானிடப் பிறவியேயுயர்ந்தது. அதினும் குறவர், சோனகர், ஊன்விற்பவர், சண்டாளர், பரவர், கள்விற்பவர்முதலிய கீழ்க்குலத்திற் பிறவாமல் மேற்குலத்திற் பிறப்பதரியது. மேற்கூறிய கீழ்க்குலத்தவர் கோடி சென்மந் தவஞ்செய்தாற் சூத்திரகுலத்தி

லே தோன்றுவர். சூத்திரகுலத்தவர் கோடிசென்மந் தவஞ்செய்தால் வைசியகுலத்திலே பிறப்பார். இம்முறையேதவஞ்செய்தால் வைசியர்க்ஷத்திரியராகவும் க்ஷத்திரியர் பிராமணராகவும் பிறப்பார். பிராமணராகப்பிறந்தாலுங் குருடு செவிடு ஊமை முடம் முதலிய அங்கஈனமில்லாமற் பிறப்பதெல்லாவற்றினு முயர்ந்தது. அங்ஙனம் பிறந்தாலுங் காடுமுதலிய இடங்களிற் பிறவாமல் நீர்வளமுள்ளநாட்டிலே பிறத்தலரியதே. இவ்வரிய பிறப்பினை யடைதற்கெத்தனை தவமோ நீமுன்செய்திருக்கவேண்டும். பிரமசரியம், வானப்பிரத்தம், சந்நியாசம், இல்லறம் ஆகிய நான்கு மார்க்கத்திலும் முதன் மூன்று மார்க்கத்தாருக்குந் துணையாயிருத்தலாலே யில்லறமார்க்கமே மேலானமார்க்கமாம். அவ்வில்லறத்தார் தினந்தோறும் விடியற்காலத்திலெழுந்து சௌசாதி கருமமுடித்து ஸ்நானஞ் செபந் தவம் பூசை அக்கினிகாரியம் ஐவகை யாகஞ்செய்து சுற்றத்தாருடன் அடுத்தோரையும் பாதுகாத்துப் போசனஞ் செய்து கல்வியாராய்ச்சியிலே பொழுது போக்கல் வேண்டும். நீயோ எல்லாவற்றிலும் படிப்படியாயுயர்ந்து பிராமணனாய். இனிச்சுவர்க்கபதவியை யடையுஞ் செயலிற் புகுதற் பகுப்புடையாய்; அதை விட்டுவிட்டுக் காமமாகிய ஆகாயத்திலேதாவிக்கீழேவிழுதல் முறையோ ஐயா! கேட்பாயாக.

காமமானது: பொருளாகிய நிறைந்த நீருக்கு உடைகுளம், உயர்ந்த குலநெறிக்கு விக்கினம், அறிவாகிய சந்திரனை

புண்ணும் பாம்பு. பாவமாகிய செடிகளை வளர்க்குங்காடு. நரக மிழுக்குங் கொடிய கயிறு. உயிரை யுருக்கிக்குடிக்கும் பைசாசம். மோக்ஷவழியையடைக்குங் கற்கதவம். என்று தெளிவாயாக.

நல்ல பூரணகும்பங்கள் வைக்கப்பெற்று நூறு அசுவமேதஞ்செய்து அரிதிற்பெற்ற இந்திரபதவியை யிந்திராணியினது காமம் நாய்போலப்பிடித்தலைத்தலால் நகுடனென்னுமரசன் கிரீடத்தையிழந்து விண்ணுலகத்தோடு மண்ணுலகத்தையுமிழந்து மலைப்பாம்பாகியசரித்திரம் உனக்குத்தெரியாதோ? நீ சிறுவனு தெரியாதிருக்க, இன்னுங்கேளையா! கற்புடைமனை விவருத்தமுற நீசென்று பரத்தையருக்குப் புதிதுபுதிதாகிய போகத்தைக்கொடுத்தல் கதிர்ப்பருவமுள்ள செந்நெற் பயிர் வாடக் கரிய மேகம் பயனற்றகாட்டிலே மழை பெய்ததற்குச் சமானமாகும்" என்று கூறினர்.

இங்ஙனங் குருகூறிய இதோபதேசமெல்லாம் உலக்கைக் கழுந்துபோலத்தடித்த மூடனாகிய ஆத்திரேயனுக்குக் கவிழ்த்தகுடத்தின்மேலே சொரிந்த உழுந்துபோலத் தூரத்தேயோடிச்சென்றன. குருடர்முன்னே சூரியனை விளக்காகக் காண்பித்தாலும், இருளாகத்தானே யவருக்குத்தோன்றும். அந்தோபாவம். மேலேகூறிய குருவைநோக்கிச் சீடனாகிய ஆத்திரேயன் சொல்லுவான் " முத்துப்போலுந்தந்தங்களையுடைய

மாதரேதெய்வம்; அவர் வாக்கேயுபதேசம்; அவரது கொங்கை யிரண்டுமே குருபீடம்; அவரது பாதங்களை வருடுவதேபூசை; அவரைச்சேர்வதேமோக்ஷம். குருவே! கணிகையர்மாட்டுச்சொல்லும் மதனுகமத்தை நீரின்னமு மறியமாட்டீர்போலும்" என்றான், இப்படிச்சொல்லிய வஞ்சகவுருவாகிய பிராமணனைக் கருணையுருவாகிய ஆசாரியர் கோபித்து நீங்கிப்போய்விட்டனர். அவர்போதலும், சிலநாளிற் செல்வமுஞ் சுற்றமும் வாழ்வுங்கெட்டன. குரு நிந்தைசெய்த மூடரிவ்வுலகத்திலெப்படிப்பிழைப்பார். திரவியமெல்லாங் கணிகையருக்குக் கொடுக்கக்காணுமல் மனையிலுள்ள பொருள்களெல்லாம் விற்று மற்றுள்ள எல்லா வளமுங் குறைய மேன்மையும் போய் மெலிந்து செய்யவேண்டிய நியதியையுஞ்செய்யாமல் தரித்திரத்தையடைந்தான், ஆதலாற் கொடியகாமம் யாருக்குத்தாணினியதாகும், அப்பால் காடுதோறும்போய் வேட்டையாடிக்கொலைகளவுசெய்து இருப்பிடமுங்கெட்டு மானங்கெட்டாலும் விரகமுள்ள புலைப்பெண்களிடத்திலே யூனும் கள்விற்கு மங்கையரிடத்திலே கள்ளும் ஈனசாதிப் பெண்களிடத்திலே போசனமும்போகமு மநுபவிப்பானாய் மோகக் கடலினுள்ளே மூழ்கிக் குலாசாரந்தவறிப் புலைச்சேரியுட்புகுந் தான். அவன் செய்கையைப் பிராமணர்கள் கண்டு ஊரினுள்ளேவரவொட்டாமற் றடுத்து விலக்கிச்சாந்தியோமமும் ஸ்நானமுஞ் செய்து, ஆசுசநிவிர்த்தி செய்துகொண்டனர்,

கீழ்க்குலத்திலேயழுந்திய ஆத்திரேயன் சுற்றமும் மனைவியும் வேறு வேறு பிரிந்து பயனற்றார்கள். நரம்புந் தண்டமுஞ் சுரைக்குடுக்கையுமொன்றுசேரில், யாழென்னும் பெயராற் பயனடையும். அம்மூன்றுந் தனித்தனி பிரிந்தால் வேடர் கண்ணியும். விற்கும். பிச்சையெடுக்கும் ஓடுமாகிவிடுமன்றோ? சலதாரையிலே கவிழ்த்தபால்போலக் குலப்பெருமைகெட்டுச் சுற்றந்தாரமூர்கைவிட்டுங் கங்கணமணிந்த கையையுடையமங்கையர் காமங் கைவிடானாகிக் கொங்கணதேசத்திலே சிலநாளிருந்து கடாரதேசத்திற் சென்றிருந்து சோழதேசத்திற்போய்க் காமவெள்ளத்தைக் கடப்பதற்குத் தோணியொன்றுகாணாது பெண்கள் தனக்குடத்தைத் தேடித்திரிந்து கச்சணியாத கொங்கைகளை யுடைய மாதர் வசிக்கு மலை நாட்டைப்போய்ச்சேர்ந்தான். அங்ஙனஞ் சேர்ந்த தூர்த்தப்பிராமணனை யங்குள்ள இளம் பருவப்பெண்கள் மன்மதன் விடுத்தசேனைபோல வந்து வளைந்து நீலோற்பலம்போன்ற கண்களாற் களிகூறப் பார்த்து மயங்கி அவனழகுவலையிலே புகுந்து வளையல் கழன்றோடப் பின்றொடர்ந்தனர். தூர்த்தவேதியனும் பெண்களாகிய பெண்யானைகளுக்குள்ளே புகுந்தவொருமதங்கொண்டயானையாய் நின்று, அவர் மோகமிகுந்து பொய்களவால் வந்த பொருளெல்லாங்கொடுத்துக் கருத்தழிந்து விளக்கில் வீழ்ந்த விட்டி லுடல்கரிந்தாலும், அவ்விளக்கைவிடாதவிதம்போல அவ்விலைமாதரை யகலாதிருந்து சிலமாதர் செங்கையோடுஞ் சிலமாதர் கொங்கையோடும் பலபெ

ண்கள் ஊடலோடும் பலபெண்கள்கூடலோடும் நலமநுபவித்து நானுவிதபோகமுண்டு கனிபழுத்த சோலையைப் பிரியாத பறவைபோல அவரைப்பிரியாது அவரதுமுலையாகிய யானைக்குக் கரும்பாகியும் கண்ணுகிய வலைக்கு மீனுகியும் அல்குலாகிய பாம்புக்குத்தேரையாகியுங் கெட்டான். அம்மாதர் மோகமும் போகமும் அவனுக்கு வினையாய்விளைந்தன. அவர்கண்ணுகியவண்டே தூண்போலப் பலமுள்ள அவனுடம்பைத்துளைத்தது. மன்மதன் பாணங்கள் தைக்க வுடம்பெல்லாம் புண்படத் துயரமிக்க வியாதியடைந்தனன்.

விண் வாழ்க்கைத் தேவரும் பெண்ணுல் வருங்காமம் பிடித்துப் பிழைத்தவரில்லை. புண்களாகி யிந்திரன் சரீரமெல்லாமப்பாற்க்கண்களானதுங் காமத்தினுலல்லவா? வாசனை தங்கிய கூந்தல்சோரமனமுருகிப் புணர்ந்தபொற்றொடி மடந்தையரெல்லாம் பக்கத்திலிருக்கவு மருவருத்து விலக்குந்நாற்றத்தையுடைய நோய் மிக்கசமயத்திலே தெருவீதியிலே யிழுத்துத்தள்ளப்பட்டான். எலும்பெல்லாமிளகுமில்லறவாழ்க்கைத்துணை நலமாகிய மாதரன்றி யன்பில்லாத பொதுமகளிர்க ளாபத்துக் குதவுவார்களோ? ஐயோ பாவம் பாவம் பிரமணனென்செய்வான். அதன்மேல் சேரதேசத்தை விட்டுப்பாண்டிவள நாட்டில் வந்து பின்னுந் தேக்கிலை நீர்போலக் காமப்பற்றெழியாதவனுய்ப் பசியாலும் நோயாலும் வருந்தியுடம்பெல்லாம் ஈமொய்க்கும்படி புண்பட்டுத்திரியும்போதும்

மயில்போலு மாதர் தலைக்கடையிற்போய் நின்று அவரிட த்திலிருந்துவரும் வாடையை யேற்று நாசியால் நுகர்ந்து களி கூர்வானென்றால், மன்மதன் யாரைத்தான் விடுவான். மணஞ்செய்த மங்கையர் மனங்கொதிக்கப் பிறர் மனைவியரை விரும்பிச் சென்ற கால்விரல்களும் அவர் முந்தியைத் தொட் ட கைவிரல்களுமழுகிச் சீரமெல்லாந் துவாரம்படப் புண்ப ட்டு விலைமாதர் வீதியிற் செல்லாதவனாய் வலையர் புலையர் மள்ளர் சேரியிற்சென்று கள்ளூமூனும்யாசித்துண்டு புறங்க டையி லுறங்குவான். இம்மையிலோர் வினைசெய்தால் அவ் வினைப்பயன் மறுமையிலே யநுபவிப்பானென்பார், இவன் செய்த கொடிய பாதகச் செய்கையின்பய னிம்மையிலே ய நுபவிக்கவந்துவிட்டது. ஆதலாலிவைகளையுணர்ந்து இக்கொ டுந் தீச்செயலின் விலகாதார் தீயநோய்க்கும் மாயநரகுக்கு மாளாவார்.

ஒருநாள் இப்பாதகனைப் பார்த்தவர் மறுநாட் பார்ப்பத ற்குப் பயப்படுவார். ஆதலினொரு நாளிருந்தவூரில் மறுநாளி ராமற் பலவூர்களையுங்கடந்து வேறுநாடுசேர நினைத்துப் புற ப்பட்டு வினைவசத்தா லிருண்ட ஒருகானகத்திற் புகுந்து பசி யால் வாடி யுணவு கிடையாமற் றாகத்தால் நாவுலர்ந்து தண் ணீரில்லாத பாலைவனத்திலே சுழல்கின்றான். கொடுத்துண்ணா த கொடிய பாவிகளுமிங்ஙனமே வருந்துவார், அந்தச்சமயத் திலிந்த மாபாதகனைத் தீண்டிய பாவந்தீர்தற்குக் கடலிலே

மூழ்குவான்போலச் சூரியன் மேற்றிசையின் மறைந்தனன். உடனே தூர்த்தப் பிராமணன் செய்தபாவமெல்லாந்திரண்டு அவனை வந்து வளைத்ததுபோல இருள் வந்து நாற் புறத்தினும் வளர்ந்தது. அன்றும் அதன் முன்னிரண்டு நாளும் பிச்சை கிடையாது பசியாலிளைத்துக் காமுகனாகிய பிராமணன் சைவமல்லாத கொடிய பரசமயம் புகுந்தா ரறியாது நெறி மயங்குதல்போல வழிதடுமாறித் தனித்து நின்று பெண்கள் கிடையாமல்வருந்தி யானை புலி கோட்டான்முதலியவைகுமிறுங்குரல்கேட்டுப் பயந்து நித்திரையின்றி வாடினான். அவன் வியாதியும் வினையும் விடிந்தனவென்று சொல்ல அற்றை நாளிரவு விடியச் சூரியோதயமாயிற்று. அதன்மே லவ்விடம் விட்டுநடந்து சலித்துக்கால் தள்ளாட இடறிவிழ்வானாய் நடந்து மரங்கடோறு முட்டிக் கண்ணிருண்டு காதடைத்துத் திருக்குற்றாலத்தலத்துக்கு ஒருயோசனைதூரமுள்ளசமீபத்தில் வந்து சேர்ந்து கொதிக்கின்ற பரற் கற்களிலேவிழ்ந்து புழுப்போலத்துடித்து நொந்து வாடிப் பல பல நினைத்து வாய்குளறிச் சாக்கிரஞ் சொப்பனம் சுழுத்தி கருவி கரணங்களெல்லாமொடுங்கித் துரியாவத்தையிலழுந்தி துரியாதீதங் கடந்து உயிர் பிரியுஞ்சமயத்திலே, அப்பிராமணன் பூருவத்திற்செய்த தவப்பிரயோசனமோ ? திரிகூடமலையிலே நெருங்கியுள்ள செண்பகப் பூஞ்சோலையிற் படிந்த தென்றற் காற்றுவந்து அவன் சரீரத்திலே தோய்ந்தது. அக்காற்றின் மான்மியத்தை யென்னென்று சொல்லுவேன்.

உயிர் பிரிந்த தூர்த்தப் பிராமணன் இயம தூதர்களெதி ரே விரைந்து வந்து வலையை வீசி வளைத்துப் பாசத்தாற் க ட்டிப் பட்டமரந் தளிமொடுத்தாற்போல இரத்தந்துளிக்கப் புடைத்துத்தென்றிசைக்குக்கொண்டு செல்லுவார். அப்போ து சிவபிரான் கணநாதர்கள் வந்து நில்லுமென இயமதூதரை நிறுத்தித்தள்ளிப் பிராமணன் மேனியிலொழுகு மிரத்தங்க ளைத்துடைத்துப் பாசத்தை யறுத்துப் புட்பங்களாலலங்கரி த்து உபசரித்துத்தேவமாதர் சாமரம்வீசத் தேவதுந்துபி மு ழங்கத் தும்புருநாரதர் பாடத் தேவர்கள் புட்பமாரிபொழிய த் தெய்வ விமானத்திலேற்றிச் சிவபிரானெழுந்தருளியிரு க்குந் திருக்கயிலாச மலைக்குக் கொண்டு சென்றார். உடனே விமானம் விட்டிறங்கிப் பிராமணன் சிவபெருமான் றிருவடி யின் கீழே விழுந்து பணிந்து ஆனந்த வெள்ளத்திலழுந்தி மா ன்மழுத்தரித்த திருக்கரங்களுங் காளகண்டமும் புரிசடையுந் திரிநேத்திரங்களுமுமையொருபாகமுந் தரிசித்துக் கண்களி ப்பப் புளகாங்கித முற்று நின்றான். அவனை அவ்வெம்பிரா ன் கருணைக்கண்ணாற் பார்த்து “நீயுயிர்விடுங்காலத்திலே நம து செண்பகப் பூஞ்சோலையிலுள்ள நல்ல தென்றற்காற்று வ ந்து உன்சரீரத்திலே படுதலால் உன்னுடைய கொடியபாவங் களெல்லாவற்றையுங்கெடுத்தோம்.இனியென்றுங்கெடாமலெ மது கணத்தவர் பதவியிலிருப்பா” யென்று திருவாய்மலர்ந்து கட்டளை யிட்டனர். அவ்வாஞ்ஞையைச் சிரமேற்றாங்கிப்

பிராமணன் பிரம விஷ்ணு பதவியுமுவர்ப் புறச்சென்றுசிவக ணத்த வருடன் கலந்து பேரின்பப் பெருவாழ்வு பெற்றிருந் தனன்.

தென்றிசையிலே சென்ற யமதூதுவர் யமனை வணங் கிக் காமியாகிய பிராமணன் சிவகணங்களாற் கயிலாசத்துக்கு ச்சென்று சிவ சந்நிதானத்தை யடைந்து பேரின்பம் பெற் றான். யாங்கள் சிவகணங்களாற் பட்டபாடு சொல்ல முடியா தென்று நடந்ததெல்லாம் விடாமற் சொல்லினர். அது கேட் டு யமதருமன் சித்திர குத்தரை வரவழைத்து "வெறிகொண் ட பிராமணன்மேற் கணக்காலேற்பட்ட குற்றங்களெல்லாஞ் சொல்லு" மென்று கேட்டான். அவர் அவன் கணக்கைப்பா ர்த்துச் சொல்லுவார்.

"அத்திரிகோத்திரத்திற்பிறந்து சகலசாத்திரங்கள் கற் றுங் குலாசாரத்தைவிட்டுச் சூத்திரர்க்குத் தாழ்ந்த கீழ்க்குல த்தார்போற்றேன்றிக் கற்புடைமாதரைக் கட்டழித்தான். அ ன்புடையார் அடைக்கலப் பொருளைத்திருடினன். அழகுள்ள பெண்கள் தலைக்கடையிலேநின்றான். நட்புடையார்க்கு வஞ் சகஞ்செய்தான். சாலை சத்திரந் தருமமாதியவற்றைக் கெடுத் தான். சிவாலயத்திலே பொன் திருடினன். மாலையுங்காலையுஞ் சந்திமறந்தான், காலந்தோறுங் கள்ளுக்குடிப்பதை மறக்கமா ட்டான். இம்மட்டோ? குருவையுந்தெய்வத்தையு நிந்தைசெ ய்தவன். விரதமுற்றகன்னியர் விரகங்கொண்டவன். தரும

யோகதவங்களையழித்தவன். புலைச்சியரைப்புணர்ந்தவன். பிராமணர்க்குக்களையாகவும் *மூவகையக்கினிக்குத் தண்ணீராகவும் மந்திரங்கட்கு மறவியாகவும் உள்ளவன். பிறரெல்லாஞ் சிரிக்குமூடனுனவன். பிறந்தநாள் பிதுர்நாள் வருடப்பிறப்புநாள் சிவராத்திரி முதலிய புண்ணியகாலத்திலும் மூன்று சந்தியாகாலத்திலும் பெண்களை மறவாதிருந்தவன். அலைவில்லா தகுடிகளையலைத்தவன். மலர்நிறைந்தமரங்களைவெட்டினவன் இரும்புபோலினகாதநெஞ்சுள்ளவன். கள்ளுக்குவண்டுபோல்பவன். கோபத்துக்குத்தீப்போல்பவன். பாவத்துக்குச்சகோதரன். புண்ணியமிருந்தவூரிலிருந் தறியாதவன். இவனுடைய கொலைகளவாதியவை கூறத்தக்கனவோ?" என்றுசொல்லுதலும் செங்கோற்கடவுளாகியயமன்கேட்டு இந்நரகபாதகனை நல்வழியிலே செலுத்துஞ்செய்கை யாதென்று மனத்திலே நினைந்து சர்ப்பாபரணத்தைத்தரித்த சடையுடைய தம்பிரானது பரமரகசியமோ? இதை அவரிடத்திலேதான்கேட்டறியவேண்டும். முறைதவறினுல் இந்தவேலை விட்டுவிடத் தக்கதென்று உறுதிசெய்து சூலாயுதத்தைக் கையிலே யெடுத்துத் தாங்கி யெருமைக்கடாவாகனத்திலேறினுன்.

உடனே அவன் சேனைவீரர் பாசந் தண்டம் தூணம் கைவாள் கைவலை வேல் மழு வச்சிராயுதம் உலக்கை கணையம் மு

* மூவகையக்கினி—காருகபத்தியம் தெக்கணுக்கினியம் ஆகவநீயம். இவைமுறையே சதுரவடிவமும் முக்கோணவடிவமும் வில்வடிவமுமாம்.

தலிய ஆயுதங்களேந்திப் புறத்தேவந்து சூழ்ந்தனர். காலன் காலமிருத்து உக்கிரன் துன்முகன் ஆகிய நீலநிறமுள்ளதூது வரும் பெருமுழக்கமிட்டு ஒருபுறம் வந்து சூழ்ந்தனர். யமபட்டணமாகிய வைவச்சுதபுரத்திலுள்ளாரெல்லா மெழுந்தொருபக்கம் வந்து சூழ்ந்தனர். தானவர் முதலானவர் கப்பங்கொண்டுவந்து குவித்து வணங்கினர். கிங்கரர் மல்லர் வீராவேசத்தால் நடித்தனர். பெருவியாதி முயல்வலி பீனிசம் மகோதரம் குட்டமுதலிய வாதபித்த சேற்றுமங்களும் சேனைகளாகிப்பக்கத்திலே வந்துசூழ்ந்தன. பாவிகளை வெட்டித் துண்டஞ் செய்து கட்டியடித்து நெருங்கிவந்து ஏவல் கேட்பவராய் நரகாதிபர்கள் வந்து யமன்பாதத்தைப் பணிந்தார்கள். இங்ஙனமாகிய சேனைக்கடலிடத்தில் வெள்ளை சாமரமாகிய தெளிந்த அலைதுள்ளப்,பரந்தவோசைபோல் வாத்தியகூட்டமுழங்கத் தன்னூர்தியாகிய தோணியின்மேலே யமதருமராசன் சென்று *வைதரணிநதித்துறையையடைந்து செல்லுகின்ற சேனையை வரிசையாகிய பல கருவைநோக்கும் ஒள்ளியகயல் மீனைப் போலப்பார்த்துக் கூட்டங்களெல்லா நீங்குக என்று நிறுத்திக் காலனையுந் தூதனையுமழைத்துக்கொண்டு திருக்கயிலாசமலையைச்சேர்ந்து நீலமலையினின்றிறங்கிய மேகம்போல எருமைக்கடாவினின்று மிறங்கி வணங்கியெழுந்து தெற்குக் கோபுரவாயிலிலே போய்த் தேவரெல்லாம் பணிந்து நிற்கும்

* வைதரணி—யமபுரத்துநதி.

பொற்படியிலே வந்துநின்று தன்வரவினை வாயில்காப்பாளர்க்குத்தெரியப்படுத்தினன். அவர்முறையே யொருவருக்கொருவராய் ஏழுவாயில் காப்பாளருக்குஞ்சொல்லப், பூதசேனுதிபதி தெரிந்து நந்திதேவருக்குத் தெரிவிக்க, அவர் சர்வலோகைகநாயகராகிய சிவபெருமான்றிருச்செவியிலே விண்ணப்பஞ்செய்தலும், அவர் உடனே யமதருமனை யிங்கேயழையென்று கட்டளையிட்டனர்.

அக்கட்டளையின்படி நந்திதேவர் சிவகணங்களால் வரவழைக்கப் பலவாயில்களையுங்கடந்து யமதருமராசன் சிவபிரான்றிருக்கோயிலைத் தரிசித்துப் பிரம விஷ்ணுக்கள் காணக்கூடாத பாக்கியம்பெற்றேனென்று சந்தோஷித்துநின்றான். அக்கோயிலிலே கின்னரர் தந்திரர் கின்னரகானம் பாடவும் பன்னகர் கிங்கரர் கருடர் சித்தர் வித்தியாதரர் அவரவருக்குரிய பணிகளைச்செய்து துதித்து நிற்கவும் இந்திராதிதேவர்கள் பொன்மாரியும் பூமாரியும் பொழியவும் தேவப்பெண்கள் சாமரம் வீசவும் புவலோகமுதலிய எல்லா வுலகத்தவருஞ் சிவலோகஞ் சேருதற்காகவந்து திருவடிவணங்கி நிற்கவும் சிவகணங்கள் சேவைசெய்யவும் அணிமா முதலிய எட்டுச் சித்திகளுங் குற்றேவல் செய்துநிற்கவும் ஈசானன் வெற்றிலைப்பை தாங்கிநிற்கவும் ஏழுசமுத்திரங்களு மிரத்தினங்களைக்கப்பமாகக்கொண்டு வந்தளக்கவும் பன்னிருசூரியர் தீபப்பணி செய்துநிற்கவும் சந்திரன் கண்ணாடி தாங்கவும் மேகஞ்

சலந்தெளிக்கவும் வாயுதூர்க்கவும் அக்கினிதேவன் ஆலஞ்சு
ற்றவும் தருமம் வாழ்த்தவும் ஆறுசமயமும் பஞ்சபூதங்களு
நான்குவேதங்களுந் துறவறமு மவரவர்க்குரிய பலத்தைவே
ண்டியநேககோடி மந்திரங்களையுச்சரித்துநிற்கவும் பிரம விஷ்
ணுக்கள் மகுடங்கள் திருவடி சூடவும் முப்பத்துமுக்கோடி
தேவர் போற்றவும் கங்கை சரசுவதி சிந்து யமுனை கோதா
வரி நருமதை காவேரியாகிய நதிகள் சாமரம் வீசவும் எல்லா
வுலகத்தையும்பெற்ற வுமாதேவி யொருபக்கத்திலிருக்கவும்
முருகக்கடவுள் நடுவேயிருக்கவும் கயமுகாசுரன் போரை
வென்ற இளமதயானையாகிய விநாயகக்கடவுளொருபக்கம்
விளையாடல்செய்து நிற்கவும் மாணிக்கம் மரகதம் கோமேத
கம் முத்து பவளம் வயிரம் நீலம் புருடராகம் வயிடூரியம் ஆகி
ய நவரத்தினங்களாற் பதிப்பிக்கப்பட்டு ஆணிப் பொன்னாற்
செய்ததூண்கள்தாங்கியமேருவேபோலுமுயர்ந்தமணிமண்ட
பத்திலே சிம்மாசனத்தின் மேல் சடையாகிய செவ்வானத்
திலே தவழுஞ் சந்திரனையுடைய பவளமலைபோலவும் ஒரு
இடையும் *இரண்டு தோலுடையும் மூன்று கண்ணும் நான்
கு புயமும் ஐந்து திருமுகமும் சடைமுடிமேற்கங்கையாறுஞ்
சூரியனிடத் தெழும் பிரகாசம் விளங்குங் கிரீடமுஞ் சந்திர
ப்பிரபை வீசுஞ் சங்கக்குழையும் நாககுண்டலமுந் தோன்ற
மண்ணும் விண்ணும் நிறைந்துள்ள சிவபிரானுடைய அபய

---

* இரண்டுதோல்—புலித்தோல், யானைத்தோல்.

வரத மான் மழுத்தாங்கிய கரங்களையும் வேதங்களை யருளிச்செய்த திருவாயினையுஞ் சர்ப்பாபரண கங்கணங்களையுந்தரிசித்து அற்புதமெய்தித் திருவடியினையு மொலிக்கின்ற வீரக்கழலையு மிடத்தும்வலத்துங் காணுந்தோறும் முன்னுதைத்ததை நினைத்து, அச்சமுந் திடமுங்கொண்டு பிரம விஷ்ணுக்கள் தலைமாலை யசையும் புயங்களை நோக்கிப் பிரமையடைந்துதேவர் கூட்டமாகிய சமுத்திரத்தினடுவே ரத்நங்களிழைத்தஆசனமாகியவுதயகிரிமீது கோடிசூரியரோருருக்கொண்டு தித்தாற்போ லெழுந்தருளியிருக்கும் அந்தச்சிவஞானச் செஞ்சோதியைக் காணுந்தோறுங் கண்கள்கூசி அச்சோதியினது அழகாகிய கடலினது அருளாகிய துறையிலே மேகம் போலத்தொழுது வீழ்ந்து ஆதியாய் சரணம் அநுபூதியாய் சரணம் அகிலாண்டமீன்ருள் பதியாய்சரணம் வேதியா சரணம் அருட்பரமானந்தச் சோதியாய் சரணமென்று தோத்திரஞ்செய்தான்.

அங்ஙனந் தோத்திரஞ்செய்த இயமனை வேதநாதராகிய சிவபெருமான் கடைக்கணித்து "எழுக நீ வந்த காரியஞ்சொல்க" என்று திருவாய்மலர்ந்தனர். மீட்டும் யமன் வணங்கிப் புளகங்கொண்டு வஸ்திரத்தை யொதுக்கி வாயைப்பொத்தி நடுநடுங்கி "நின்மலமூர்த்தியே யுமது திருவுளத்துக் கேருவிண்ணப்பமொன்றுண்" டென்றுசொல்லுவான். "ஆத்திரேயனுகிய பிராமணன் உலகத்திலே பிராமணராகிய பயிருக்குப்

பெருங்களையாக முளைத்துத் தோன்று முன்னமே பாதகத்தி னுருவமாகி யொழுக்கத்தை நீக்கினான். ஸ்நானஞ் செய்தறி யான். மாதர் முலைத்தடாகத்திலே மூழ்குவான். புலைப்பெண் களையுந்தீண்டி அவர் மனையிலே புகுந்து கள்ளூமூனுமுண்ட வன். தானம் சந்தியாவந்தனம் சாமவேதகானம் நித்தியாக் கினி மநுநூற் கல்வி கேள்வி மானம் செபதவம் மந்திரமௌன யோக ஞானமறியாதவன். இப்பாவியோ? நாங்களறியாத பத வியிலே போயிருப்பவன். யௌனப் பெண்கள் காமத்தாலே பொல்லாங் கென்பவைகளையேசெய்த இப்பாதகனைத் துன்ப த்திநீக்கிக் கயிலாசமலைக்குச்சிவகணத்தவர்வரவழைத்தனர். அவர் செய்வதெல்லாம் அடிகளுக்குத் திருக்கூத்தும் ஆனந்த முமாகுமானாற் சுவர்க்கம் நரகமென்னும் விகற்பம் ஏற்படுத் துவானேன்? தள்ளத்தக்கவை யெல்லாங் கொள்ளத் தக்கன வாகக்கொண்ட அப்பாவியைமீட்டு, அடியேனுடைய ஏவல ரையடித்துக் கணநாதர் தள்ளுவரென்றாற் புண்ணியம் பாவ மேது? வீண்காரியஞ் செய்வாரையலைத்துத் தண்டிக்குமிந்த வேலையடியேனுக்குப்போதும். இனிக்கயிலாசத்திலே யுமது தொண்டர்களுக்குப் பணிவிடை செய்திருப்பே''னென்றான்.

அதுகேட்டுத் *தக்கனுடையயாகமுந் †தண்டேசுரநாய னார் செய்தபாவமும் ‡மார்க்கண்ட முனிவர் வாழ்நாளழிவும்

---

*தக்கன்யாகம் - சிவபிரானை நிந்தித்துச் செய்த யாகம். †தண் டேசுரநாயனார் செய்த பாவம் - சிவபூசைக்கு வைத்திருந்த பாற்குட

§திரிபுரத்தார் வாழ்க்கையும் போக்கும் செயல்களால் விதிமுறையை நிலைநிறுத்துந் தமது திருவிளையாட்டாலே யமனைப் பார்த்துத் திரிநேத்திரம் படைத்த சிவபிரான் சொல்லுவார். "பூருவஞ் சிவக்ஷேத்திர மான்மியஞ் சொல்லும்போது திரிகூடாசலத் தலமான்மியஞ் சொன்னோம். அதில் சந்தன விருக்ஷங்கள் வேலியாகச் சூழப்பட்ட சண்பகப் பூஞ்சோலைமான்மியஞ் சாற்றினோம். அதிலே தவழுந் தென்றற்காற்றின் மான்மியஞ் சொல்லாது வைத்திருந்தோம். இனி அதனைச்சொல்லுவாம். அதுகேட்டால், இந்த ஆத்திரேயன் மான்மியந் தெரிந்து கொள்வாய். திரிகூடமலையிலே பிறந்து தேனருவியிலே தோய்ந்து பொங்குமா கடலிற் படிந்து வடவருவி யமுதத்திலே யூர்ந்து, சண்பகப்பூஞ்சோலையிலே தவழ்ந்து சங்கக்கோயிலினடந்து பின்னரெம்மருங்கும் விளையாடியுலாவுந் தென்றற் காற்ருனது புடார்ச்சுனபுர மென்னுந் திருக்குற்ருலத்திலேபிறந்தவர் உயிர் வருந்தாவிதம் நாமிருந்து அவரது வலக்காதிலே வேதப்பொருளை (பிரணவத்தை) யுபதேசிக்க, நமது மனைவியாகியபார்வதியும் மடியிலேதாங்கும் அவ்வுயிர்களிளைப் பாற்ற வந்து வீசும். தீர்த்தத்திலுயர்ந்த வடவருவியுந் தலத்

---

க்களை யுடைத்த தமது பிதாவினைக் கொலைசெய்தபாவம். ‡மார்க்கண்ட முனிவர் வாழ்நாளழிவு - 16-வயதென்று வரையறுக்கப்பட்ட ஆயுளை என்றும் பதினருக அருளுதல். §திரிபுரத்தவர் வாழ்க்கை- சிவநிந்தைசெய்த அசுரர் வாழ்வு.

திலுயர்ந்த திருக்குற்றாலமு மூர்த்தியிலுயர்ந்த திரிமூர்த்திவ டிவாஞ் சிவலிங்கமு முறையே சாலோக சாமீப சாரூபங்களைக் கொடுக்கும். ஆராய்ந்து சொல்லுங்கால் அத்தலத்திலே யுலா வுந் தென்றலே யம்மூன்றையுங் கொடுக்கும். அத்தன்மையா ன தென்றல் ஆத்திரேயனிறக்கும்போ தவன் சரீரத்திலே வந்து படுதலா லவன்செய்த பாதகங்களெல்லாஞ் சூறைக்கா ற்றி லகப்பட்ட பஞ்சுபோல மாய்ந்தன. உடனே சிவதரும ங்கைகூடிற்று. ஆதலாலேயவன் சிவகணத்துளொருவனுயிரு க்கும்பதவியைப் பெற்றான். இந்தக் காரணத்தாலெமது திரு க்குற்றாலத்துத் தேனாறு பாயும் நான்கு பக்கத்திலு மூன்று யோசனை தூரங்கலந்து வாழ்கின்ற சராசரங்களாகிய ஆன்மா க்களிடம் நீ போவதை விட்டுவிடுக உன்னுடைய தூதருக்கு மிதனைச் சொல்லுக" என்று கட்டளையிட்டனர்.

அதனைச் சிரமேற்றாங்கி முன்னமிதனை யறியாது செய் த செய்கையை நினைந்து விஷ்ணுவாலும் வேதங்களாலுந் தெரியாத பரமரகசியத்தை யறிந்தேனென்று மகிழ்ச்சி கூர் ந்து கயிலாசபதியாகிய எம்பிரானைத்தொழுது விடைகொண்டு கடாவாகனத்திலேறித் தருமராசன்வந்து தன்னகரத்திலுள் ளார்க்கு நன்னகரத்திலுள்ள தென்றன் மான்மியத்தைப்போ தித்துத் தன்றூதுவர்களையுங் கணங்களையும் வரவழைத்துத் திருக்குற்றாலத்தலத்து நாற்புறத்து மூன்று யோசனை தூரம் வரை யிருப்போர் வருவோர் யாவரு மென்ன கருமஞ்செய்

தாலுங் தருமமென நினையுங்க ளென்றுத்தரவு செய்தனன். ஆத்திரேயன் செய்த பாதகந் தீர்த்த கதையிதுவென்று தெரிய மந்தமாருதத்தின் மான்மிய மருளிச் செய்த சூதமுனிவரை நோக்கி "யினிச் சிவத்துரோகந்தீர்த்த மகிமை சொல்லியருள வேண்டு" மென்று சௌனகாதிமுனிவர் கேட்க அது சொல்லத் தொடங்கிச் சூதமுனிவர் தக்கன் யாகஞ்செய்தலை முதலிற் கூறுவாராயினர்.

ஒன்பதாவது மந்தமாருதச் சருக்கம் முற்றிற்று.

---

## பத்தாவது
## தக்கன்வேள்விச் சருக்கம்.

தாமரை யாசனத்தில் வீற்றிருக்கும் பிரமதேவன் முதலாவது சிருட்டித்தொழில் செய்யநினைத்துக் கொங்கைத்தானத்திற் றருமனையும் மார்பிற் பிருகுவையும் மனத்தின் மரீசி புலத்தியன் அத்திரி கிருது அங்கிரா சனபதி புலகனையும் வலப்பாகத்திற் றக்கன் முதலாகிய பத்துப்பிரமாக்களையு முறையே பெற்றனன். அப்பத்துப் பிரமாக்களுள்ளே பின்னவனாகிய தக்கனெழுந்து பிதாவாகிய பிரமதேவனிடம்போய் "வேறுபாடில்லாமலுயிர்க்குயிராய் நிற்பவனுஞ், சிற்குணனும், எல்லாத் தேவர்கட்கு முன்னவனு, முடிவில்லாத முதல்வனு மெவ" னென்று கேட்கப் பிரமதேவன் சொல்வான். "நினைத்தற்கு முணர்த்தற்குமரியான் பிரமனுந் திருமாலுங்

தேடநின்ற ஒப்பற்ற சிவபிரானென்றனன். "சிருட்டியுந் திதி யுநீங்களிருவரு முன்னர்ச் செய்திருப்பப் பின்னர்ச் சங்காரஞ் செய்கின்ற ருத்திரனை முதல்வனெனச் சொன்ன காரணம் யா"தென்று தக்கன் வினவலும் "எங்களை யாளுடைய பிரமமாகிய அவனே யுலகத்தை யொடுக்குநாளி லெங்களையுமொடுக்கிப் பின்னரெங்களைச் சிருட்டித்தலாலன்றோ? நாங்களிருவருஞ் சிருட்டியுந் திதியுஞ் செய்வோ"மென்று பிரமதேவன் சொல்லைத், தக்கன்கேட்டு "அங்ஙனமானால் விஷ்ணுவை யுன்னைப் பஞ்சபூதங்களை யுயிர்த்தொகுதியை நான்கு வேதங்களும் பிரமமென்று சொல்வதெவ்வா"றென்று வினவப், பிரமன் "வேதங்களெல்லா நம்பரமனைப் பிரமமென்று சொல்லுதல் சத்தியம். வேந்தனையு மிறைவனென்று சொல்லுதல் போலவனையோரைப்பிரமமென்று சொல்லுதலுபசாரமாம்" என்றான். அதுகேட்ட தக்கன் "நீ பிரமமென்று சொல்லும் உருத்திரனும்: செய்கையும் உருவு முடையவனாதலின் அவனுக்குத் தோற்றமு முடிவுமெய்தாதோ?" வென்று கேட்கப் பிரமதேவன்-"அவனெங்குமுள்ளவன் இல்லாதவன் உருவில்லாதவன் உயிர்களின்பொருட்டுச் செயல்புரியத் தானே யருளுருக்கொள்வன். உயிர்கள் செய்புமிருவினைக்கீடாகச் சிருட்டிப்பதற்கு என்னுடைய வடிவுமாவன். உயிர்களுக்கு வினைப் பயன்களை யுண்பித்தற்கு விஷ்ணுவடிவுமாவன். ஒடுக்குதற்காகச் சூலமேந்திய வுருத்திர னுருவுமாவன். மறைத்துவைப்ப

தற்காக மகேசனுருவமாவன். அநுக்கிரகத்தின்பொருட்டுச் சதாசிவவடிவமாவன்; அவனே மேலான மூர்த்தி. அருவாயுருவா யருவுருவாவன். அவ்வுருவில் யாங்களிருவருமாகி யெங்களுக்கு வேருகி நிற்பன். எள்ளுமெண்ணெயும் பூவுமணமு மணியுமொளியும்போலெங்குந் தானேயுள்ளும்புறமுமாகி நீங்காது நிற்பன். விஷ்ணுவும் யானும் பிரமமென்று மதிமயங்காத விதந் தனது திருமேனி முழுது மெம்போல்வார் வெண்டலைமாலைகளை யணிந்தான். இவைகளை யறிந்துமறியார்போல மயங்கி நான்பிரம நான்பிரமமென்று யாங்கள் கலகஞ் செய்யுங் காலத்தில் வந்து விலக்கி நாங்களடிமுடிதேட நடுவேநின்றுன். மூவராக நினைத்து என்னை விஷ்ணுவை யந்தச் சிவபிரானுக்குச் சமமாகச் சொல்லுவர்; அவரெல்லாரும் பாவராய்த்தங்களைக் கெடுப்பதன்றி யெங்களுக்கும் விரோதிகளாவர். அவருடைய அன்பரென்றெங்களை நினைப்பவருக்கே யாங்கள் கருணைசெய்கின்றேம். யாரையாவது இறைவரென்று யார் வணங்கினுலும் அவ்வணக்கம் அந்தச்சிவபிரானுக்கேசேரும். நதிகட்கெல்லாஞ் சமுத்திரமே யாதாரம்போல எவ்வகைப்பட்ட சமயங்களுக்குமிறைவன் முக்கண்மூர்த்தியாகியஅவனே. யிதனை யனந்தவேதங்கள் சொல்லியும் யானெடுத்துக்கூறியு நீ யறிந்தாயில்லை மைந்தனே! அந்தப்பிரமப் பொருளாகிய சிவபிரானையே துதித்துத் திருவருள்பெறுக" வென்று சொல்லினன்.

இங்ஙனம் போதித்த இதோபதேசத்தைத் தக்கன் கேட்டுச் சிந்தித்து உயர்ந்தநாயகன் சிவபெருமானுலவரையே வணங்கி விஷ்ணு முதலாயினர்க்கு நானுயர்ந்தவனாவேனென்று மனத்திலே யமைத்துவைத்துக்கொண்டு பிரமதேவனை நோக்கி "ஐயா! நான் தவஞ்செய்தற்குத் தக்க இடமொன்று எது"வெனக் கேட்டலும் அவன் கூறுவான் "மகாமேருமலைக்குச் சமீபமாக மானதவாவியுண்டு அதிலேபோய் ஸ்நானஞ் செய்து சிவபிரானை மானதபூசை முடித்து வணங்கித் தவம் பண்ணி அவர் திருவடியைச் சேருக" என்றனன்.

உடனே தக்கன் ஆங்கெழுந்துபோய் ஸ்நானஞ்செபந் தவம் பூசைமுற்றியாயிரவருடந்தவஞ்செய்தலும், அந்தத்தவத்தினுக்கிரங்கி யெம்பெருமா னெதிரே யிடபாரூடராயெழுந்தருளிவந்து தக்கனை நோக்கி "புன்னுடைய மிகுந்த பெருமையுடைய தவத்தை மகிழ்ந்தனம், உனக்கு வேண்டிய வரங்களைக் கொள்க" என்று திருவாய்மலர்ந்தருளுதலுந் தக்கன் றரிசித்து வணங்கித் தோத்திரஞ்செய்து சுவாமீ! அரிபிரமேந்திராதியர் பதவியிலும் நாகருலகத்தும் பூவுலகத்துமெட்டுத்திசையிலு மெனதாக்கினை நடக்கவும், உம்மை வணங்கு மிந்திரன் முதலிய எல்லாத்தேவர்களு மென்னுடைய ஏவல்கேட்கவுஞ், சுற்றம் வாழ்வு மைந்தர் செல்வ முதலியவைகளுங் கெடாது விருத்தியாகவும் வரந்தரல்வேண்டும்; இஃதன்றி யுமதிடப்பாகத்திலிருக்கும் அம்பிகை யென்புத்திரியாகத்தோன்

றவும் நீ ரவனை யொரு பிராமணன்போல் வந்தருளி வதுவை செய்யவும் வரம் அருளிச்செய்க" என்று வணங்கிக்கேட்டான். அவ்வரங்களெல்லாம் அருள்வடிவாகிய வள்ளற்றன்மை வாய்ந்த மகாதேவரருளிச்செய்து "இவையெல்லாம் நன்னெறியிலே நீ நின்றால் நிற்கு"மென்று கட்டளையிட்டுத் தமதிருப்பிடத்துக்குச் சென்றனர்.

தக்கன் பெருமகிழ்ச்சியுற்றுத் தன் பிதாவாகிய பிரமதேவனைத் தன்னிடத்துவர நினைத்தான். அதைப்பிரமதேவனுணர்ந்து இந்தவரத்தைத்தான் பெற்றான்போலும். நாஞ்சொல்லியபடி யொன்றுஞ்செய்தானில்லைப் பாம்புக்குப்பாலையூட்டிவளர்த்தாலும் விடத்தையன்றி வேறுபயன்றருமோ? சிற்றறிவுடையார்க்கு நன்மொழிகளைச் செப்பினாலு மவை கல்லிலழுத்திய மிருதுவான முளைபோலக்கெட்டுவிடுமென்று எழுந்துபோய்த் தக்கன் முன்னே நின்று உபசாரவார்த்தை சொல்ல, அவனையொரு கம்மியனைப்போலநினைத்துத் தக்கன் ஒரு வளநகரும் இருப்பிடமு மமைப்பாயென் றுத்தரவுசெய்தான். சிறியவர்க்குப்பெருமைவந்தாற் பெற்றவர் பெரியவரருமை யறிவாரோ? பிரமதேவன் யாதுசெய்வான். அவன் சொன்னபடியெல்லாஞ் சிருட்டித்தனன். பூமியிலே செய்யப்பட்ட தக்கமாபுரியிலே தக்கன் வந்திருந்து விஷ்ணு பிரமன் சொன்னபடி செய்ய இந்திரனேவல்கேட்கத் தேவர்கள் வணங்கத் தேவப்பெண்கள் சாமரம் வீச ரத்நகிரீடம் புனைந்து

சிங்காதனத்திலிருந்து அரசர்க்கரசனுய் விதிக்கும்விதியாயிருந்து அரசு புரிந்தனன்.

இங்ஙனம் அரசு புரிந்தகாலத்திலே பிரமாவின் பாதத்திலே பிறந்த வாசனை நெருங்கிய கூந்தலையுடைய வேதவல்லியைத் தக்கன் மணம்புரிந்து, இரண்டாயிரம் ஆண்மகவைப் பெற்றான். அவரனைவரும் நாரதமுனிவ ருபதேசத்தாலே மோக்ஷமடைந்தனர். அதுதெரிந்து தக்கன் நாரதரை யுலகமெல்லா முழன்று திரியக்கடவையென்று சபித்தனன். அதன் பின்னர் நீல நிறமுள்ள நீண்ட கூந்தலையுடைய பெண்கள் கூட்டத்தைப் பெற்று, அவருட் சுபுத்தியாதி பதின்மூன்று பெண்களை யமனுக்குக் கொடுத்தான். பின்னர்ப் பத்துப் பெண்களுக்குள் பிருதியை அங்கிராவுக்கும் மரீசியையச்சம்பூதிக்கும் உற்சையை வசிட்டருக்கும் வேகமையைக் கிருதுவுக்கும் கியாதியைப்பிருகுவுக்கும் சுவாவை அக்கினிக்கும், பிரீதியைப்புலனுக்கும் சனதியைப் புலத்தியனுக்கும் அனசூயையை அத்திரிக்கும் சுவதையை விதாதாவுக்கும் இப்படியே பற்பல பெண்களைப் பற்பலருக்குங் கொடுத்தனன். அவருட் சுவேதைபெற்ற இருவருள்ளே தரணியென்பவளைமேருமணஞ்செய்ய, மேனையை யிமவான் மணஞ்செய்தனன். அவருள்ளே தரணிபெற்ற மேனையை வருணன்மணஞ்செய்தனன். அரிய அமுதம்போன்ற மற்றைப் பெண்கள் பெற்ற பிள்ளைகளும் பற்பலவாகும். அப்பிள்ளைகளாற் பெற்ற ருஷிகளும்

தேவர்களும் அசுரர்களுந் தேவப்பெண்களும் கருடனும் பாம்புகளும் ஏனைய சராசரங்களு மனந்தங்கோடியாகும். தக்கன் ஆண்மக்களைப்பெற்றென்னபயனடைந்தான். பெண்மக்களைப் பெற்றதனால் உலகமெல்லாம் பெருங்கிளையாயின. தவத்திலுயர்ந்தது எது இருக்கின்றது.

இவ்வளவு வாழ்வும் பரமேசுர னருளாலெய்தியதென்று தக்கன் றெரியாதவனா யிறுமாப்புற்றுப் பெருமயக்கமடைந்தான். எவ்வளவு படித்தவராயினுங் கல்விச்செல்வச் செருக்காலுண்டாகும் வியாதி முக்கண்மருந்தை யுட்கொண்டாலன்றி விலகுமோ? தக்கனுடைய பிள்ளைகளில் அசுபதி முதலிய இருபத்தேழு நக்ஷத்திரங்களாகிய பெண்களையுஞ் சந்திரன் விவாகஞ் செய்து முகத்தழகுள்ள கார்த்திகையிடத்தும் முலையழகுள்ள உரோகணியிடத்து மிகப் பிரியம் வைத்து மற்றைப் பெண்களை மருவாது விலக்கினான். தக்க னதுதெரிந்து சந்திரனைத் தேய்ந்துபோம்படி சாபங் கொடுத்தனன். அச்சாபத்தாற் சந்திரன் றினந்தோறுந் தேய்தலுற்று, இந்திரனுடைய சபையிலே சென்று தனக்கு வந்த இடையூற்றைச் சொல்லினான். அவனதுகேட்டு "அக்கினி சாக்ஷியாக விவாகஞ்செய்த பெண்களைச் சமமாக நினையாமல் வஞ்சகஞ் செய்த சிறுமையினாலே பெருவியாதி யடைந்தனை. இதுநம்மால் விலக்குதற்கெளியதோ? யாவருக்கு முதற்பொருளாகிய விநாயகக்கடவுளுக்கு முன்னே தற்புகழ்ச்சி பேசி நீசனாகினாய்.

சந்திரனே! இந்தச்சாபம் பிரமதேவன் விநாயகரை வேண்டிச் சதுர்த்தி தினமாத்திரம் ஆகுக. மற்றைத்தினம்நீங்குக. என்று வரம் வாங்கித்தரப் பெற்றாய். இன்னும் அவனாலேதா னிது வு நீங்குவா" யென்னலும், சந்திரன் பிரமாவினிடஞ் சென்று தன் வருத்தத்தைச் சொல்லிக் கலையெல்லாங் குறைந்து ஒரு கலையோடு நின்று பிரமாவின் ஆஞ்ஞையாலே திருக்கையி லாய மலையின்கட் சென்று சிவபிரான் சந்நிதி முன்பு விழு ந்து பணிந்தெழுந்து "வேத முதல்வா! தேவர்களை யிரக்ஷி த்த நீலகண்டத்தை யுடையாய்! நெற்றிக் கண்ணுடையாய்! ஓலம் ஓல" மென்று முறையிட்டுத் துதித்தலும், அவ்வெம் பெருமான் திருவுள்ளமிரங்கி யபயங்கொடுத்துச் சந்திரனை யெடுத்துத்தமது திருமுடியிலே தரித்துக்கொண்டு மாதந் தோறுங் குறைந்தவாறே வளர்தலுந் தேய்தலுமாகுக" என் று தக்கன் சாபத்தைவிலக்கினர்.

இவைகளெல்லாந்தக்கனுணர்ந்து "நான்செய்த சாபத் தைச்சடையுடைய சிவனோ? தவிர்ப்பவ" னென்று பிதற்று ரை பேசலும், புலகன் கேட்டுச் சிவபிரான் சந்நிதானத்தை யடைந்தவனைக்காத்து உன் சாபத்தையு நிறுத்தி யுன்மக்கள் வாழ்வுங் காத்தருளினர். இது குற்றமோ? வென்று தக்கன் கோபத்தைமாற்றினான். தக்கன் தவமும்வாழ்வும் மக்கட்பே றுஞ் சொன்னோம். இனி யுயர்ந்த புகழையுடைய உமாதேவி யை மகளாகப்பெற்றுப் பரமேசுரனுக்குக் கொடுத்ததும் யா கத்தின் விளைவுஞ் சொல்லுவோம்.

வெள்ளியங்கிரியி லெம்பெருமானிடத்தி லெம்பெருமாட்டியாகிய வுமாதேவி யரசு வீற்றிருக்கும்போது அவரைவணங்கிச் "சுவாமீ! யுலகமெல்லாம் நீர் நடாத்துந் தன்மையை விரித்தெனக்குச் சொல்லவேண்டு"மென்று வினவினள். அவரதுகேட்டுப் புன்முறுவல் பூத்துச்சொல்லுவார், "*சகள †நிட்களமாகியெல்லாவற்றையும் உற்பத்திநாசஞ்செய்வோ"மென்றலும், உமாதேவி "அகளமாகிய வுமக்குத் திருமேனியெது" வென்று வினவினள். சிவபிரான் "அருளே வடிவ"மென்றனர். உமாதேவி "யுமதருள்யானு யிருத்தலா லெல்லா மென்னுடைய செயலே" யென்றனள். அதுகேட்டு எல்லாம் வல்லராகிய நம்பெருமான் சருவான்மாக்களி னறிவையும் மாற்றினர். உடனே யவையெல்லா மறிவுமயங்கச் சூரிய சந்திரரொளி கெடச், சகத்திலுள்ளோர் சடமாகிவீழ்ந்தனர். பிரமவிஷ்ணுக்களுமயங்கினர், திரிலோகமுமிருளாயிற்று. இங்ஙனஞ்சருவான்மாக்களுங் கலங்கிக் கருமமிழந்து குற்றப்படுதலாற்பார்வதிதேவிபயந்து "என்னுடைய அறியாமையாவும் பொறுத்தருளுக"வென்று சிவபிரானுடைய திருவடியிலே வீழ்ந்து வணங்கினள், அவளது வருத்த நீங்கத் திருவுள்ளமிரங்கி யெம்பெருமானுர் உயிராயெங்கு நிறைந்து நின்றனர். உடனே யெல்லா முன்போலெழுந்து திருவருளாலுணர்ச்சி பெற்றுக் கருமங்களைச் செய்தன. "ஒரு கணப்பொழுதுக்

* சகளம்—உருவுடமை, †நிட்களம்—உருவின்மை,

குள்ளே பலகோடி யுகங்கழிதலா லுயிர்கள் கருமத்தை யிழ ந்திருந்த குற்றமென்னாலாயது. ஆதலினதனைநீக்கியருள்வா" யென்று பார்வதி மீட்டும் வணங்கலும், கருணாநிதியாகிய சிவ பிரா னுமாதேவியை நோக்கி" நீ நம்மைப் பிரிந்து தவஞ் செய்து இக்குற்றத்தைப் போக்குவா" யென்றனர். அப்பொ ழுதே யுமாதேவிபிரிந்து காளிந்திநதியிலே வலம்புரிச்சங்கம் போல மிதந்துசென்று பூமிமேல் விரதாதிகளைச்செய்து தக் கனுக்கு மகளாகத்தோன்றி யூழிகாலந்தவஞ்செய்தும் பாவநீ ங்குதலரிதானால் உலகத்திலுள்ளோர் சிவநிந்தைநீங்குத லெ ளிதோ? பின்னர் மழுவாயுதத்தைத் தாங்கிய வள்ளலாகிய சிவபிரான் பிராமணவுருவங்கொண்டு வந்து உமாதேவியை விவாகஞ்செய்து மறைந்துதனியேசென்றனர்.

அதுதெரிந்து தக்கன்கோபங் கொண்டிருந்தனன். உமா தேவி மீட்டுந் தவஞ் செய்துகொண்டிருக்க, அப்போது எம் பிரா னன்புற்றுச்சிவகணங்கள் தொழுவந்து தேவியை விடை மேலேற்றிக் கயிலாயத்துக்குக்கொண்டுபோயினர். தாய் தந்தைக்குத் தெரியாமற் பெண்ணைக் கொண்டுபோயினனெ ன்று தக்கன் எம்பிரான்மேல் மிகச்சினந்து இகழத் தொடங் கினன். அதனைத் தேவர்களறிந்து தக்கனுக்கதனாற் றீமை விளையும் நமக்குந்துன்பம் வருமே யென்றுபயந்து ஆராய்ந்து ஆதியாகிய கடவுள் வரத்தாற்பெற்ற அரசுடைமையாலவன் பால் நாம் போகாதிருத்தல் கூடாது. அவரிடம் அவனைச் செ

னுத்தினுற்குற்றந்தீருமென்றுதேறித் தக்கனிடம்வந்து "உன்னுடைய மருமகனுகிய பரமேசுரனைக் காணும்பொருட்டு வருக" என்றழைப்ப, உடனே யவனுஞ்செல்ல அரிபிரமேந்திராதி தேவர்கள் திரளாய்க் கயிலாயமலையை நோக்கித் தக்கன் பின்னே யன்பினுற் றுதித்து வந்தனர்.

எல்லாரும் வெள்ளியங்கிரியிற் செம்பொற்கோயில்வாயிலைச் சார்தலும், பூதர்களுள்ளே விடாமற் றடுத்தனர். கண்களும் பாதங்களும் சிவக்கச் சிறுவிதியாகிய தக்கன் நின்றுன். எம்பிரானை வணங்குவோ ரெல்லாம் யாதொருதடையுமின்றி யுள்ளே சென்று யுகாந்தத்திலே கொதித்து மேலெழுஞ் சமுத்திரம் வெள்ளியங்கிரி முன்னர்த் தாழ்தல்போல் உமாதேவி சமேதராக எழுந்தருளியிருக்கு மெம்பெருமானைத் தாழ்ந்து வணங்கினர். அவ்வெம்பெருமான் விஷ்ணுவைவார்த்தையினுலும், பிரமனைத்தலைபசைப்பினுலும், இந்திரனைப்புன்சிரிப்பானுந், தேவர்களைப் பார்வையானுமுபசரித்து மீட்டும் விஷ்ணுவை நோக்கி "யுலகங்களெல்லாம் வளமுள்ளனவா (க்ஷேமமா) என்றனர்." அவரதுகேட்டுப் பிரமனுக்கு மெனக்குந் துன்பந்தவிர்ப்பவராகிய நீவிரிருக்க நிறைவேயன்றிக் குறைவொன்றுமில்லை என்றனர். ஏனையோரையு மவரவரதிகாரத்துக்குத் தக்கவாறு வினவிக் குறிப்பால் எம்பெருமான் விடைகொடுத்தருள அவர்கள் பெற்று மீண்டுவருமளவுந் தலைவாயிற்கடையிலிருந்த தக்கன் வாயில்காக்கும் பூதவீரரைநோக்கி "யென்

மகளையும், மருமகனையும் பார்க்க வந்த என்னைத்தடுத்து என்னேவல்செய்யும் அரிபிரமேந்திராதி தேவர்களை யுள்ளேவிடுத்தீர். எனக்கடித்தொண்டராக நீங்களிருந்தும் இவ்வளவு பேதஞ் செய்தீ"ரென்றான். பூதவீரர் அவனை நோக்கி "நீயும் எம்பிரானைப்பணிவாயாகி லுள்ளேபோகலா" மென்றனர். "மகளைக்கொடுத்த மருமகனை யடியவர் போல வணங்கமாட்டேனென்னை நீங்கள் தடுத்தமையால் நுங்கள் கடவுளுக்குப்பூசையுலகமெல்லா நடவாவண்ணந் தடுப்பே"னென்று தக்கன்கோபித்துச்சென்று பிரமா விஷ்ணு இந்திரனைநோக்கி "நீவிர் சிவபிரான் கோவிலிற்சென்று வணங்குவீராகி லுங்களரசும் வாழ்வு மாற்றுவே" னென்னலும் அவர் "நல்லது உன்னுடைய உத்தரவுப்படி நடக்கின்றோம் கோபிக்கவேண்டா" வென்று சொல்லிப்போயினர்.

அதன் பின்னர், யாவரையுங் காக்கின்ற தருமநெறி நீங்கிய தக்கன் சந்திரனைத் தரித்துத் தோலையுடையாக வுடுத்திய சிவன் என்னை மாமனென்று நினையாமல் தானே பெரிய அரசனாக விருந்தானென் றகங்கரித்து ஏனையோரையுந் தன் கருத்தின்படி நடக்க வுத்தரவுசெய்து நீங்காத குற்றத்தைப் போர்த்துக் கொண்டிருந்து பிரமதேவன் செய்யும் யாகத்திலேபுகுந்து, சிவபிரானுக்கு *அவிப்பாகங்கொடாமற்றடுத்து நந்திதேவராலேசபிக்க யாககுண்டத்தைத் தூர்த்தானாகி அக

* அவி - யாகத்திலே தேவர்களுக்கமைக்கப்பட்ட உணவு.

ந்தையானது செல்வத்தைக் கெடுப்பதென்ப துணராதவனு
னுன். நந்திதேவர் சாபத்துக்குப்பயந்து யாவரும் யாகஞ்
செய்தாரில்லை. தருமமென்ற துணையைத் தவிர்ந்து உலகமெ
ல்லாந் தவித்தன. அப்போது தக்கன் அஞ்சுகின்ற சபையா
ரை நோக்கி நான் யாகஞ்செய்வேனென்று எரிகின்ற சாபத்
தீக்கு முன்னே வைக்கோற்றாறுபோல்வானுகித் தேவர்களை
யழைத்துச் சொல்லுவான்.

கயிலாய மலையையுடைய சிவனுக்கு நாடானது மயக்கஞ்
செய்கின்றகாடு. அவன்கையிலெடுப்பது ஓடு. பெண்கள் வீடு
தோறும் பிக்ஷையேற்று வருந்துவான். பசிக்கு ஆற்றமாட்
டாமல் விடத்தை யுண்டல்லவா அவன் கண்டங் கறுத்தது.
அவனிடத்திரக்கம் வைத்து என்பிதாவாகிய பிரமதேவர்
என்மகளாகிய சதி(பார்வதி)யைக் கொடுக்கச்சொன்னதனுற்
கொடுத்தேன். அவளாலன்றோ? பாக்கியம் பெற்றுன், அத்
தன்மையான சிவனென்னை மாமனென்று சிறிதுமதிக்கமாட்
டான். இம்மட்டோ? தாய்தந்தை சுற்றத்தார் குலம் குடியில்
லாதவன். சுடுகாட்டிலே கூத்தாடுவான். சடைமுடி தாங்கித்
திரிதலாலரசனுமல்லன். குருவில்லாதவன். ருஷிபத்தினிகள்
கற்பைக்கெடுத்தலாற் கற்றவனுமல்லன்.ஒழுக்கமில்லாதவன்;
அவனைத்தேவர்களே! நீங்கள் சூழ்ந்துவணங்குகிறீர்கள். இர
ண்டு மனைவியர்க்காக மற்றையிருபத்தைந்து மனைவிமாருக்கு
ம் வஞ்சகஞ் செய்த சந்திரனைச் சாபத்தீயால் வருத்தினேன்.

இனியாகத்தி யொன்று செய்து சதியை மணந்த மருமகனுகி ய அவனது வலிமையையுந் தேவர்கள் மடமையையும் நீக்கு வேனென் றெழும்போது, பக்கத்திலிருந்தார் சகுன விரோத மாகத் தும்மவுங் காகந் தடை படுத்தவும் நில்லாதவனுய்ச் சென்று, கங்காநதியி னொரு பக்கத்திற் போயிருந்து பிரமன் முதலாகிய தேவரனைவரு மவரவர் தம்பதிசமேதராய் வரவே ண்டுமென்று, ஓலையெழுதியனுப்பினுன். உடனே தேவதச் சன் வந்து வணங்கித் தக்க னுத்தரவுப்படி யிரத்தினங்கள் பதிக்கப்பட்ட வாயில் மதில் சிகரம் அரண்மனை சபை தெய் வங்களிருக்குங்கோயில் ருஷியாச்சிரமந் திண்ணை யன்னசத் திரம் மடைப்பள்ளி சாலை சோலை யோமகுண்டம் யாகசாலை ஐந்நூறுயோசனைதூர நீளமும் நூறுயோசனைதூர அகலமு மாக மலைகளெல்லாஞ் சலித்துநிற்கவுங் கடல்களெல்லா மேங் கவுந் தேவர்கள் வியப்படையவுஞ் செய்தான்.

இந்த யாகசாலையினிடத்துத் தக்கன்றிருமுகங் கண்ட வுடனே கந்தருவர் கின்னரர் அசுரர் இயக்கர் கிம்புருடர் கரு டர் யோகர் ஆகாயவாசிகள் அமரர் வித்தியாதரர் பூதர் அரக் கர் மாந்தர் தாராகணத்தர் பாதாளர் வேதாளர் முனிவர் சித் தர் பன்னிருசூரியர் பதினெருருத்திரர் பத்துப்பிரமாக்கள் ஒன்பதுவகை ரத்நகிரீடமும் புனைந்த மனுக்கள் எட்டுத்திக் குப்பாலகர் ஏழுநதிகள் ஆறுகாலங்கள் பஞ்சதருக்கள் நான்கு வேதங்கள் மூன்றுலோகத்திலுமுள்ள மற்றவர்கள் இருபக்க

மும் ஒருமுகூர்த்தகாலத்துள்ளே தத்தம் மனைவியர்களுடன் வந்துகூடினார்கள். அரிபிரமேந்திராதியரு மவரவர் மனைவியுடனே வந்தார்கள். அரம்பை யுருப்பசி மேனகை முதலியோரும் வந்தனர். அதுகண்டு தக்கன் விஷ்ணுவை நோக்கி யிந்த யாகசாலையை விக்கினம்வாராது காத்துக்கொள்ளுமென் றுத்தரவு செய்தான். அந்தநாட் செல்வம்போலுந் தக்கனுக்கு வேறுண்டோ? அவனுடைய உத்தரவு காணுமுன்ன மெந்த வுலகத்திலுள்ளாரு மெழுந்துவந்து கூடினார்கள். உலகத்தரசர் தொகைக்குள் ஈசானரொருவரும் பிள்ளைகளிற் சதி (உமாதேவி)யும் மருமக்களிற் சிவபெருமானும் யோகியரில் பராசர் வசிட்டர் அத்திரி சுவன் ததீசி அகத்தியர் துருவாசர் பிருகுமே யங்குவராதிருந்தவர்கள். தக்கன் பிரமனுக்கு மற்றைத் தேவர்கட்குஞ் செய்யு முபசாரஞ்செய்து புத்திரி மருமகர்களுக்குச் செய்யு மரியாதைகளுஞ் செய்து யானைக்கூட்டத்தில் மதயானை புகுந்ததுபோல யாகசாலையுள்ளே சென்றான்.

அதன்பின் ஆகவனீயங் காருகபத்தியந் தெக்கணாக்கினியென்னு மூன்று அக்கினியுங் கொழுந்துவிட்டெரிய வடவரைபோலும் யாகத்தம்பமுயர்ந்துநிற்கக், காமதேனு அவிசொரிந்துநிற்பப் பாரிசாதம் யாகப்பொருள்களெல்லாங் கொடுத்து நிற்ப வெவ்வேறு திரவியங்களைத் தேவர்கள் கொணர்ந்து குவிக்க இந்திரனேவலாற் சிலதேவர்கள் திசைகளிற் காத்துநிற்ப இரசவர்க்கங்களெல்லாஞ் சந்திரன்கொடுத்துநிற்ப

மருகர் மக்கள் யாரு மவரவர்க்குரிய பணிவிடை செய்துநிற்ப இருபக்கத்துந் தேவப்பெண்கள் பூந்தட்டேந்திச்சூழ இந்திராணி பணிவிடைகளில்வருங்குறைகளைத்தவிர்த்துநிற்ப விஷ்ணு யாகசாலையைக் காத்துநிற்ப யாகமாகியதெய்வம் உயர்ந்து விளங்கிநிற்ப இந்திரன் ஆசாரியனாக இருக்கத் தசப்பிரமர்களிலொருவன் உன்னததானத்திலிருந்து கிரியை நடாத்தத் தக்கன் மான்றோல் போர்த்துக் கையில் வெண்ணெய்பூசி யாக கருத்தாவாகி யிருந்தனன். சரசுவதி வேதஞ்சொல்ல இலக்குமி யெல்லாப் பொருள்களையுமெடுத்துக் கைநீட்டக் கொள்ளக் கைச்சடைப்பாரல்லாமற் கொடுக்கக் கைசடைப்பவரில்லை.

இத்தன்மையாகிய கருமம் யாகசாலையிலே நடக்கும்போது எம்பெருமானில்லாமல் யாகஞ்செய்யுந் தக்கனறியாமையை நோக்கி அவனுக்குச் சன்மார்க்கத்தை விளைவிக்க நினைத்துச் சுவன், துருவாசன், ததீசி முதலிய ருஷிகளாங்குச்சென்றனர். அவருள் ததீசிமுனிவர் தக்கன் முகத்தைப்பார்த்துச் சொல்லுவார் “ எல்லாருக்குந் தருமஞ்செய்தலே யுறுதி. தருமத்தினு மேன்மை மோக்ஷமடையும் யாகஞ் செய்தலே; அத்தகைய யாகஞ் செய்தலி லுன்போல முயற்சிவல்லவர் திரிலோகத்தினுங் காணேம். இந்திரனுங் கற்பகவிருக்ஷமு மேவல்கேட்க விஷ்ணு வேள்வியைக்காக்கத் தேவர்கள் துதிக்க ஞானமாகுமகஞ்செய்கின்றாய். பிரமாவின் பிள்ளையாகிய

நீ செய்கின்ற எச்சத்துக்கு (யாகத்துக்கு) ஒரு எச்சம் (ஒப் பற்றகுறை) ஈசனில்லாத''தென்றனர். அதுகேட்டுத்தக்கன் "ஈசனொருவனுக்குப், பதினொருவர் உருத்திரர் உள்ளா" ரென்றான். "இவர்களோ? நாதவிந்துவா மூலவுருத்திரனுக்கு ஒப்பாவா''ரென்று, ததீசிமுனிவர் சொல்லக்; குற்றமறுத தக்க"னிவரே யுருத்திரராவ''ரென்றான். "உமையொருபாகனு க்குச் சொல்லும் உருத்திரப்பெபபரை அவனது சாரூபம் பெ ற்றவருக்கும், அக்கினிவடிவாகிய சிவகணத்தோருக்குஞ்சொ ல்லுவர். பொன் வெள்ளி செம்பு இரும்பு ஈயம் இவைகளைப் பொன்னென்றால் எல்லாஞ் சொர்னமாகுமோ? ஆடிப்பாடித் திரிகின்றவரைப் புலவரென்றா லவருந் தேவராவரோ? ஆதி மத்தியாந்தரகிதராகிய சிவபிரானே கடவு''ளென்று ததீசிமு னிவர் சொல்லினர். தக்கன் கோபங்கொண்டு "சரீரத்திலுந் தலையிலு மிரண்டு பெண்களைத் தாங்கியவனோ? யோகி மாட் டிலேறித் தெருவழி நடப்பவனோ ஈசன் விடத்தை யமுதாக வுண்பவனோ வெட்கமில்லாமல் நிருவாணியாய்த் திரிபவனோ ஒருகாலைத்தூக்கிக் கூத்தாடுபவனோ? தேவனாவான். பன்றிக் கோடும் மீன்விழியும் ஆமையோடும் பாம்பும் பிறவும் அணி யுங் *கருத்தனோ கையிலோடேந்துவானோ புலி யானைகளின் தோலைச்சுற்றிச் சாம்பரைப்பூசி மயானத்திற் பேயோடாடு வானோ கண்ணுக்கு எதிரே வேறுவடிவங்காட்டு மாறுபாடு

---

* கருத்தன் - மனமுடையவன்.

டையானே? நின்மலனான கடவு" ளென்றான். அதற்குவிடை ததீசி முனிவர் கூறுவார்.

"எல்லா வேதங்களையு முணர்ந்துங் கல்லாதவராய்க்கருவத்தா லுன்னைப்போலச் சிவபிரானை நினையாமற் றாருகாவனத்து ருஷிகள் தவஞ்செய்தனர்; அவர் பத்தினிமாருந் தம்மைப்போலக் கற்பிற் சிறந்தாரில்லையென்று அகங்கரித்திருந்தனர்; அவர் கருவத்தைக் கெடுப்பதற்கு சிவபிரான் விஷ்ணுவை மோகினியாகிச்செல்லும்படி செலுத்தித் தாந் திகம்பரர் (வஸ்திரமில்லாதவர்) ஆகிச்சென்றனர். உடனே யம்முனிவரும் அவர் மனைவியரும் தவமுங் கற்புந்தோற்று நின்றனர். பின்னர் அம்முனிவர் கோபங்கொண்டு ஆபிசாரம் (பகைவரைக் கொல்லச்செய்யும் யாகம்) செய்து தம்மேலே வரவிடுத்த முயலின்மேல் மிதித்து நடித்தனர். புலியை யுரித்துத் தோலையுடுத்தினர். சர்ப்பத்தை யாபரணமாக அணிந்தனர். மழுவையும் அக்கினியையும் மானையும் உடுக்கையுங் கைகளிலே தாங்கினர். வெண்டலைகளை மாலையாகமுடித்தனர். பூதங்களைச் சேனையாக்கிக்கொண்டனர். உலகங்களைப்பெறுதற்கு உமாதேவியை வாமபாகத்தில் வைத்தனர். தமது விரிந்தகண்ணையுமாதேவிபொத்த அவள் கையிலேசூடுதாக்கவேர்வையுண்டாகியெழுந்தசலமானதுபூமியையழித்துவர, அதனை *மூன்று நதிகளாகச் செலுத்தினர். அவைகளிலொன்றுதான் பகிர

*மூன்று நதி—கங்கை யமுனை, சோணை.

தன் கொண்டுவந்த கங்கைநதி. யுகாந்தகாலத்திலே பிரளய வெள்ளம்பொங்கி யெல்லாவற்றையு நீற்றியபோது மயானமாகிய வெளியிடத்திலே நின்று அந்நீறைப்பூசி உமாதேவிகாண ஆனந்த நிருத்தனம் புரிவர். தருமமே யிடபமாகி யுகந்தொறும் வந்து தாங்க, அதிலேறுவர். சோமகாசூரன் வேதங்களைத் திருடிச்சமுத்திரத்திலேயோடி யொளித்தபோது மீன் வடிவங்கொண்டுபோய் அவ்வேதங்களை மீட்டுக்கொண்டு வந்தும் திருப்பாற்கடல் கடையும்போது மந்தரமாலையாகிய மத்தை ஆமைவடிவெடுத்துத் தாங்கியும் தேவர்களுக் கமுதங்கொடுத்தும் மண்ணுலகங் கீழேவிழாதபடி பன்றிவடிவங்கொண்டு கொம்பாலே தாங்கியுமுள்ள விஷ்ணுமமதையையடக்கி அவர் வடிவாகிய, மீனின்கண்ணையும் ஆமையோட்டையும் பன்றிக்கொம்பையுந் தரித்துக்கொண்டனர். ஓரவுணன் யானையாகி உயிர்களாகிய கடலைக் கலக்கித் திரிதலும் அதன்வலியடக்க அதன்றோலையுரித்துப் போர்த்தினர். பிரமதேவ னகங்காரங்கொள்ள அதை யடக்கும்பொருட்டு அவனொரு தலையைக்கிள்ளி அதனைப்பிக்ஷாபாத்திரமாகக் கையில் வைத்தனர். சூலாயுதத்தை வயிரவற்குக்கொடுத்து ஒருகாலம் விஷ்ணுவாதிதேவர் கருவத்தைப் பங்கஞ்செய்தனர். இந்திரன் செருக்கையடக்க வேறுவடிவங்கொண்டுவந்து கோபத்தினாற் சலந்தராசுரனையுண்டாக்கலும், அவன் மூன்றுலகத்திலும் விஷ்ணுமுதலியோர்வருந்த யுத்தஞ்செய்து தருக்கினன்;

அவனை யொரு பிராமணன்போல வந்து, ஒரு சக்கரத்தை விடுத்துக்கொன்றனர். இறந்த சலந்தரனுடைய வடிவத்திலே புகுந்து அவன் மனைவி பிருந்தையை விஷ்ணு தழுவும்போது கள்ளத்தைக்கண்டு விஷ்ணுவைச்சபித்துப் பிருந்தை யுயிரை விட்டனள். அதன்மேல் விஷ்ணு மோகத்தாலே சுடுகாட்டிற் சென்று பிருந்தையினது மார்பிலே புரண்டனர். அது தெரிந்து தேவர்கள் வேண்டுகோளாற் பார்வதி யொரு விதையைக்கொடுத்து அந்த எலும்பிலே போடும்படி சொல்ல அப்படியே தேவர்கள் போடுதலும், பிருந்தையென்னும் ஒரு செடி முளைத்து விஷ்ணுவினுடையசரீரத்திலேபட்டபின்னர் அவர் மோகந் தீர்ந்தனர். அந்தச் செடிதானிப்போது துளசியென்று சொல்லப்படுவது. செகத் காரணமாகச் செய்யுந் திருவிளையாடலுக் கேற்ப எல்லா மாங்காங்குத் தரிப்பார் விடுப்பார் அல்லாமல், அவருக்கு வடிவமும் பேரும் தொழிலும் ஆபரணமுஞ் சேனையும் உடையும் உணவும் பிறவுமுண்டுமோ? ஆதலாற் சராசரங்க ளெல்லாவற்றையுந் தாய்தந்தையாயிருந்து தந்த சிவபெருமானை நீயும் வணங்கியே வானவர்க் கரசாகி யுன் பிதா முதலாகிய எல்லாரையு மேவல்கொண்டாய். அவ்வெம்பிரானுக்கு அவிப்பாகங்கொடுத்து நெடுங்காலம் செல்வம்பெற்று வாழக்கடவை" யென்றனர்.

தக்கன்கேட்டு, "அவனுலென்னுகும் உண்ணச்சோறில்லாமல் விடத்தையுண்டான். பிக்ஷை யெடுப்பதற்கு என்

பிதா அவனுக்கு ஒடுகொடுத்தான். நீங்காததரித்திரத்தை நீக்கி யென்புத்திரியாகிய சதியை யான் விவாகஞ்செய்து கொடுத்ததனு லவன் மனைவாழ்க்கை பெற்றான். புலித்தோலை நீக்கிப் பொன்னுடையும் பொன்மகுடமும் புனைவித்து இரத்நாபரணங்கள் பூட்டி மாப்பிள்ளைக்கோலஞ் செய்வித்த என்னை யொரு அற்பமாக எண்ணி யிகழ்ந்தனன். அதனாலந்தச் சிவனையு மருமகனாக நினையேன். சதியையு மகளாகக் கருதே" னென்று யாதொரு பற்றுமில்லாமற் சொல்லுதலும், ததீசி முனிவரவனைப்பார்த்துத் "தக்கனே! நீசெய்யும் வேள்விக்குப்பலன் கொடுப்பவர் யாவர்? வேதங்கள் யாரைப்பிரமமென்றுரைக்கும். அறிவில்லாதவனே! அரசனில்லாமற் சேனைவெற்றி கொண்டு வருமோ? என்றுசொல்லத் தக்கன் "முயற்சியே பயனைத்தரு" மென்றுவற்புறுத்த, முனிவர் "தலைவனில்லாமற் சடமாகிய முயற்சி பலன் கொடுக்குமோ" வென்று மறுத்துரை வழங்கத், தக்கன் முனிவரை நோக்கி "உன்னைக் கேட்பார்க்கன்றோ! நீயிங்ஙனஞ் சொல்லவேண்டுவ" தென்று கோபித்துப் பேசினன். உடனேமுனிவர் பெருஞ்சினங்கொண்டு "சிவனருளில்லாமற் சீவர்களுக்குச் செய்கையுண்டோ? அவனை நினையாது நீ செய்யும் யாகத்தம்பம் யுத்தகளத்திலே யுயிரிறந்த குறைத்தலைப்பிணமாகும். சிவபிரானில்லாமற்செய்யும் யாகம் ஒரு கன்னிகையைச் சருவாபரணங்களாலலங்கரித்துப் புருஷனில்லாமற் செய்யும் விவாகத்துக்கொப்

பாகும். விஷ்ணு வென்பவரும் எங்கள் சிவபிரானுக்குச் சத்தி. மற்றைத் தேவர்களெல்லாரும், பசுக்கள் (உயிர்கள்) அன்றோ? பசுபதியை நீக்கிப் பசுவை வைத்துப் பலன் பெறுவாயானல் ஒருபெண் மற்றொரு பெண்ணைச்சேர்ந்து பிள்ளையைப் பெறுதலுங் கூடும். அட்டவசுக்கள் முதலிய தேவர்கள் காசிபர் முதலாகிய ருஷிகளாலுமாவதொன்றில்லை. இங்கெல்லாரும் எள்ளினிளங்காயை யரிக்கும் * உளுக்கள்போல அரிப்பக்கூடி உயிரைக் கெடுத்திருந்தீர்கள். உங்களைப் பசுபதியாகிய அவர் வந்து, பசுக்களை (மாடுகளை)ப்போல வருந்தும்படி தண்டிப்பார். பலயுகங்கடந்த முக்கண்ணுடைய எம்பிரானை யகந்தையால் நீக்கிய தக்கனே! நீயுமழிந்துபோவாய். நின் யாகசாலைக்குட் புகுந்தவர்களுங் கெட்டுப்போவர். யாகமுங் கெடுக" என்று சபித்துத் ததீசி முனிவர் ருஷிகள் இருப்பிடத்துக்குச்சென்றனர்.

அம்முனிவர் போனபின் தக்கன் தேவர்களோடிருந்து பின்வரும் விளைவை யுணராதவனாய் வேள்வி செய்தனன். சருவ வியாபகரான நம்பிரா னறிவித்தாலன்றித்தீங்கு நன்கு தேவர்க்குந்தெரியக்கூடுமோ? மண்ணுலகமும் விண்ணுலகமு மேவல் கேட்டு வணங்கிச் செய்யும் யாகத்தின் சிறப்பும் காசிபர் முதலிய மருமக்கள் செருக்கு மவர்மனைவியர் மகிழ்ச்சியுந் தேவர்கள் பெருமையுங்கண்டு நாரதமுனிவர் வெள்ளியங்

* உளு-மரத்தைத்துளை செய்து பொடியாக்கும் ஓர் செந்து.

கிரிக்கண் வந்து கோயில்வாயில் பலவுங்கடந்து திருவோலக்க மண்டபம் பிற்படச்சென்று ஞானவிளையாடல் செப்புங்கருணையாளராகிய நம்பெருமானொருபக்கமிருந்து, கவறு (சூதாடுங்கருவி)விசிவிளையாடு முமாதேவியைத் தரிசித்துக் கீழ்விழுந்து தாழ்ந்து வணங்கிச் சிவபிரானையு மங்ஙனமே பணிந்து வாய்புதைத்துத் தக்கன் செய்யும் யாகத்தின் முறையை விண்ணப்பஞ்செய்தனர். அதுகேட்டபார்வதி தன்றந்தைசெய்யும் வேள்வியினுசையா லெழுந்து வீழ்ந்து நாயகராகிய நம்பெருமானை வணங்கினுள். எவ்வளவு சிறப்பு நாயகனிடத்திலிருந்தாலும் பெண்களுக்குப் பிறந்த இடத்திலாசை நீங்குவதில்லை. தாயாகிய பார்வதி பணிந்து யாகசாலையைப் பார்த்துவரவேண்டுமென்று கேட்க எம்பெருமான் புன்சிரிப்புச்செய்து "பெண்ணே! யுன்றகப்பன் உன்னை யழைக்கவுமில்லை. வென்னை மனத்திலுநினையான். நீபோனுலுன்னை மதிக்கமாட்டான்! போவது நீங்குவா"யென்று மறுத்தும், பின்னரும் "என்றுய் தந்தையரைப்பார்த்துத்திரும்புவே"னென்று வேண்டித் திருவடியிலே தாழ்ந்துவணங்கினுள். அவள் வேண்டுகோளுக்கிசைந்து மேலே நடக்குங் கருமத்தையுணர்ந்து "அப்படியே செய்க" என்று சிவபெருமான் கட்டளையிட்டனர். உடனே பார்வதி பரிசுத்தமாகிய பொன் விமானத்திலேறிப் பலவித வாத்தியங்கள் முழங்கத் தேவப்பெண்கள் சூழச் சிவகணங்களார்ப்பச்சென்று, சிறுவிதி (தக்கன்) யாகசாலைக்குப்பக்கமே

போய் அங்கே யோமகுண்டமாகிய நிலத்திலே சமித்தாகிய உரத்தையிட்டு நவதானியவிரையை விரைத்து, நெய்யாகிய தண்ணீர்வார்த்துத் தீவினைப்பயிரை விளைவிப்பவனாகிய தக்கன் முன்னே புதிய நல்வினைபோலச் சென்றனள்.

இங்ஙனமாசையுடன் சென்ற மகளாகிய உமாதேவியைத் தக்கன் தன்மகளென்றும் பாரானாய்த் தன்னிடத் தோடிவருங் கன்றுக்குப் பாலூட்டாத பசுப்போலப் பராமுகஞ்செய்திருந்தான். மிருதுவாகிய அமுதத்தைக் கண்டால் நஞ்சம் விலகிப்போவது வழக்கந்தானே. தீயவனாகிய தகப்பனிருந்த மார்க்கத்தை நம்பெருமாட்டி திருவுளத்திலெண்ணுமலப்புறுஞ்செல்லுதலும், தக்கனுக்குத் தெரியாமலவன் மனைவிமாரும் ஏனைப்புத்திரிகளும் வந்து பார்வதியைத்தழுவி மகிழ்ச்சி கூர்ந்தனர். பெண்கள் பாசவர்க்கம் விலக்கினாலும் விலகுமோ? உமாதேவியைப் பெற்றவளாகிய தக்கன் மனைவி அவளுக்குச் சிறப்பான மரியாதை செய்தால் தக்கன் யாதுசொல்வானோ ? வென்று பயந்திருந்தனள். உடன் பிறந்தாரெல்லாரும் விருப்பினராயும் வெறுப்பார் போலிருந்தனர். அது கண்டு வாட்டமுற்று அப்பெண்கள் குழாத்தை நீங்கித் தக்கன் யாகசாலைக்குமுன்பு வந்து "பிதாவே! விஷ்ணு பிரமன் இந்திரன் சந்திரன் முதலியதேவர்களை யெல்லாம் யாகசாலைக்கண் வரவழைத்தாய் எம்பெருமானை மறந்தாய் போலு" மென்று வினவினள்." பாற்கடற்பாயலையுடைய விஷ்ணுவும்,

அமுதமுண்ணுந் தேவர்களும் அவர்களுக்குத் தலைவனாகிய இந்திரனும் தேவர்களுக்கமுதங்கொடுத்த சந்திரனும் இருக்கப்பட்ட இடத்திலே விடத்தையுண்டவன் வருதற்கருகனோ" என்றுதக்கன் சொல்லுதலும், அம்பிகை சொல்லுவாள் "பிரமன் பயந்தோட அமரர்களுமோட விஷ்ணு வெளியமேனிகரியமேனியாக விடமெழுந்தபோது, நடுங்கியெல்லாரும் வந்து குறையிரந்துவேண்டுதலா லவர் துன்பநீங்கும் பொருட்டு எம்பெருமா னவ்விடத்தை யுண்ணுதலாலன்றோ? அவர்களமுதமுண்டு சீவித்திருந்தனர்" என்றனள், தக்கன் கேட்டுச் சபைதோறு நாடகமாடி வீடுதோறும் பிக்ஷையேற்றுண்டு குலமில்லாதிருந்தவனை யாகத்துக்குச் சேர்க்கமாட்டேனென்ன, அம்பிகை "யுன்னுடைய மகளைக் கொடுத்துவிட்டுக் குலம்பேசலாமோ?" வென்னத், தக்கன் மீட்டும் "நீங்களிருவரும் வரக்கூடா" தென்று சொல்லினன்,

அழகிய கிருபைக் கண்ணையுடைய நாயகனை மூர்க்கன் குற்றங்கூறி யிகழ்தலாலே பார்வதி தகப்பனென்ற பழைய ஆசையை மறந்துவிட்டனள், கற்புடையமாதருக்குக் கணவரையன்றித் தாய் தந்தை சுற்றம் வேறுண்டோ? உமாதேவி பின்னுந் தக்கனை நோக்கிக் கயிலாசத்திலேயோது மந்திரவேதங்கள் எம்பெருமானுக்குக் குதிரை. யாகசாலை காக்கு மிந்திரனாதியர்-படைவீரர், தேவர் முனிவர்-தொண்டர், சூரியன் சந்திரன் அக்கினி-கண்கள். பூமி-யிரதம், ஆகாயந்-திருமேனி,

ஆதலின், அவரல்லாதுலக முண்டுமோ? உனக்கு யாகமேது யாகஞ்செய்யுமிடமேது நீ தான் யாருடைய மகன் உன்தாய் தந்தையர்யாவர்? இவைகளை யறியாய்போலும். எம்பெருமானுக்குப் பத்திசெய்த தவத்தாலன்றோ? எல்லாருக்குந் தலைமைபெற்றாய். நீதியுள்ளவர் செல்வம்பெற்றால், அந்நீதிவழியேநின்று நீடூழிவாழ்வர் அறிவில்லாதவர் செல்வம்பெற்றால், அளவில்லாத அகங்காரப்பேயும் தக்காரை யெதிர்காணிற்கண் தெரியாத நோயும் பிடித்திடும்; அவற்றை நீக்கவேண்டுமானால் தரித்திரம், தண்டனை யென்னுமிரண்டுமே மருந்தாக வேண்டும். சிட்டரைத்தாங்குந் தேவனாகிய எம்பெருமானை நீ யிகழ்தலாலே துட்டநிக்கிரகஞ்செய்ய, அவரே தோன்றுவர். முனிவர் வார்த்தையையும் என்போல்வார் சொல்லுஞ் சொல்லையுங்கேளாய். அளவிடப்படாத செல்வத்தையந்தோ மதத்தினாற்கெடுக்கின்றவனே! யாராவது நம்பெருமானை யிகழ்வாரென்றா லந்தப்பாவிகளை யுடனே கொல்லல்வேண்டும்; அது கூடாதென்னில் அவர்மேற் பழிசுமத்தி யிறத்தல்வேண்டும்; அதுவுமுடியாவிட்டா லந்தவூரைவிட்டுப் போவதே வேண்டும்; இவைகளிலொன்றுஞ் செய்யாதவர் சிவத்துரோகமடைவர்" என்று சொல்லிவிட்டு விமானத்திலேறித்தேவப் பெண்கள் சூழக் கயிலாசபதியினிடம் வந்து தெண்டனிட்டிறைஞ்சி யொருபக்கங் கூந்தல்சோர மனத்திலே கோபமூள முகம்வேர்ப்பக் கண்கள்சிவப்ப வெட்கி நின்றனள்.

இவ்வாறிவ ளிங்குவருமுன்னரே யிவளொடுகூடச் சென்ற சிவகணங்கள் தக்கன் ஆபிசாரஞ் செய்து பூதங்களை யெழுப்பித்துரத்தும்படி செய்ததும் பிறவும் பார்த்து நாரத முனிவர் கயிலாசமலைக்கு வந்து கருணைக்கடலாகிய கண்ணுதற் கடவுளை வணங்கிச் "சுவாமீ! மமதையாலறிவு கெட்ட தக்கன் மகளாகிய உமாதேவியைமதித்தானில்லை. யும்முடைய கருணையையு நினைத்தானில்லை. உமாதேவியுடன்சென்ற கணங்களையடித்துத் துரத்தினன், தேவர்களுக்கு அவி (அமுதம்) கொடுத்து உம்மை யிகழ்ந்தன" னென்றனர். அந்த வார்த்தை திருச்செவி சேர்தலும், பரிசுத்தரான எம்பிரானுக்கு இதழ்துடித்தது. புருவநெறித்தது. நெற்றிமேலேறியது. கண்சிவந்தது, பஞ்சபூதங்களுநடுங்கின, உலகங்களுமச்சமுற்றன, இந்தக்கோபத்துக்கிலக்காக மன்மதனிங்கில்லை. புன்னகை வந்திடத் திரிபுரங்களுமில்லை. யென்று கண்டவர் சொல்லும் பெருங்கோபத்தையடக்கி அவ்வெம்பிரான் ஒரு குறிப்போடும் பார்த்தனர்,

பத்தாவது தக்கன்வேள்விச்சருக்கம் முற்றிற்று,

---

## பதினோராவது
## தக்கன்வேள்வி யழிந்தசருக்கம்,

திருக்கயிலாசமலையிலே சிவபிரான் சினக்குறிப்பாற்பார்த்த திசையினின்றும் ஆயிரந்தலைகளோடும் வலிய இரண்டா

யிரம் புயங்களையசைத்து,நடக்கும்போது அண்டங்களெல்லா நிலைகுலையச் சரீரம் வேர்த்து வீரபத்திரர் அண்டத்தையளாவிய அனந்தங் கிரீடங்களையணிந்து சூரியன் வேறோர் வடிவங் கொண்டாற்போலப் பிரகாசம் விளங்க உடைவாள் ஒளியை வீச ஒருபொன்மலை மேலேயநேகந் தாமரைமுகிழ்த்தல் போலக்கைகளைக் குவித்துக்கொண்டுவந்து, காற்றுந்தீயும் யமனுந் தனித்தனி யொன்றல்லாம லிவ்விரண்டில்லையே பிரமன்றலை நான்கல்லாம லைந்தில்லையே திசைகளெட்டல்லாம லொன்பதில்லையே யழிப்பதற்குக். கடலிரண்டில்லையே குடிப்பதற்கு. மேருமலையு மிரண்டில்லையே வளைப்பதற்கு. அண்டப் பித்திகை (சுவர்) ஒன்றல்லாம லிரண்டில்லையே யுடைப்பதற்கு. வேறுயாது? பணிசெய்ய அடியேனை யழைத்தது மழுவாயுத மேந்திய கையையுடையா" யென்று நம்பெருமானைப் பணிந்து நிற்றலும், பரமேசுரன் கட்டளை யிடுவார். "வீரபத்திரனே! அண்டப் பரப்பாதிய எல்லாம் நாம் படைத்தவை. அவைகளை யழித்திடாதே. யன்பில்லாமற்செய்த சிறுவிதி பெரிய யாகத்தை யழித்து அவன் சிரத்தையு மறுத்து வருக" என்றனர். உடனே வீரபத்திரர் வணங்கி விடைபெற்றுச்சென்றனர். அப்போது உமாதேவி கோபாவேஷத்திற் பத்திரகாளி தோன்றி யநேகங் கணங்களுடனே கூடவந்து சேர, வீரபத்திரர் தம்மிடத்திலிருந்து பல கோடி வீரரைச் சிருட்டித்து முன்னும் பின்னும் பக்கமும் நெருங்கிவரச்செய்

து யானைத்தோலும்புலித்தோலும் போர்த்து விஷ்ணுவாகிய பன்றிக்கொம்பு மீன்கண்ணுமாபரணமாகவிளங்க நாரசிங்கத் தின்றோல் உத்தரீயமாகப் பொலியச் சர்ப்பகங்கணத்தின் மணியொளிகள் பிரகாசிக்கச் சந்திரர்கூட்டம்போல வெண்டலைமாலைகள் மார்பிலே யசைய ஆயிரம் பணமுடியையுடைய கச்சு இடையிலே யிறுகியசைய வீரக்கழல் இடியொலிபோல வொலிக்க நெற்றிகள் தோறுங் கண்கள் தீயைக்கக்கக் கங்கையுங் கடல்களுங்கலங்க நீண்ட குடைகளுங் கொடிகளுஞ் சூரியனொளியை மறைப்ப இடபக்கொடியாகிய நிலவாலிருளெல்லா மோடக் கால்களைத் தூக்கி வைக்குந்தோறும் பாதலமு மீதலமுமதிர வலிமையுடைய புயங்களெட்டுத்திசைகளை மறைப்ப மகுடங்கள் அண்டப்பித்திகை முகட்டை யுடைக்கச் சேனைகள் கண்டவர் மனந்தோறுங் கொடிய அக்கினியைப்பரப்ப வலப் புயங்களும் வலத்தோள்களுந் துடிப்பக் கண்களில் வருந்தீப்பொறி வடவாமுகாக்கினியையுஞ்சுட நக்ஷத்திரக்கூட்டம்போலப் பூமாலைகள் மார்பிலே நெருங்கத் தமது சேனைவீரர் பிலமதிரும்படி நடக்கும் விசையினாலே யட்டகுல பருவதங்களைத் தூக்கக் கயிலாசமலையினின்று மிறங்கித் தனித்தனி யண்டங்களைச் சுமப்பதாகிய கோடி பூதங்கள் பூண்டரதத்தின்மேலேறினார்.

கப்பணம் பிண்டிபாலம் கணிச்சி முட்கரங் கோடாரி சரிகை தோட்டி வச்சிரம் அரிவாள் தண்டம் உலக்கை கைவாள்

சூலம் சக்கரமுதலிய ஆயுதங்கள் கார்காலத்து மின்னலைப் போலப்பிரகாசிக்க, முருடு சல்லரி பேரி முரசு மத்தளம் தடாரி கரடிகை திமிலை மொந்தை கைம்மணி படகம் பம்பை பணவம் தக்கை திண்டிமம் எக்காளம் சின்னம் கார்காலத்து மேகம்போலமுழங்க, நந்திதேவர் கணங்களின் கூட்டத்தோடு சேனையைப்புறத்திலே காத்துவரச் சண்டன் மணிமானென்னுஞ் சேனைகாவலரிருவரும் வலத்து மிடத்துங் காவல்செய்யக் கணநாதரும் பூதர்களு மிடசாரி வலசாரி சுற்றித்திரியப் புலி மான் சிங்கம் குதிரை குரங்கு கரடியின்முகங்களையுடைய பேய்க்கூட்டங்கள் மலையினுந்தாவிச் செல்வனவாய்ப் பாதங்களாற் கடலைக் கலக்குவன. ஆதிசேடன் முதுகுளுக்க நின்று கூத்தாடுவன. மேகங்களையு மிடிகளையுங் கையாற் பிசைவனவாயுண்பன. தேவர்கண் மிகக்கலங்க ஆகாயமண்டலங்களைக்கிழிப்பன. மேற்றிசையானையைக் கீட்டிசையானை மேலெறிவன. காற்றினைச்சுழற்றுவன. அக்கினியையள்ளி யுண்பன. ஆகிச்சூழ, ரதத்தின்மேலே யமனுக்குமோர் யமனென வீரசிங்கம்போன்ற வீரபத்திரர்வந்தனர். காளியுடன் அவளுடைய ஏவற்பெண்களும் பேய்களும் புலிக்குட்டிகள்போன்ற குள்ள வடிவாகிய சிறுபேய்களுஞ் சுற்றிவரச் சிங்கஞ்சென்றது போலக் கணநாதரும் வந்தனர். இங்ஙனம் வந்தசேனையினிடத்துண்டாகும் புழுதி தக்கன் யாககுண்டத்தைப் போய்த் தூர்த்துவிட்டது. பூதவீரர் முழக்கத்தால் மலை திசை

ஆகாயம் கடலதிர்ந்தன. தக்கன் குடிமித்தலை யதிர்ந்திடவான வர் குழாங்களு மதிர்ந்தன.

அப்போது பகலிலே நக்ஷத்திரங்கள் காணப்பட்டன. சூரியனைநோக்கி நாய்கள் குரைத்தன. நரிகள்கூடி யாகசாலையிற்போய் அமுதத்தை யுண்டன. தக்கனுதியர்க்கு இடத்தோள்கள் துடித்தன. மனம் பறையடித்தன. தக்கன் யாகஞ்செய்து உயர்ச்சியடைவது காண்பேனென்று பக்கத்திலே வந்து நின்ற பிரமன் வீரபத்திரர் சேனையைப்பார்த்துப் பயந்து பிழைத்தேன் பிழைத்தேனென்று வான்வழியாகப்போயொளித்தான்.

வீரபத்திரர் சேனை கடல்போல வருமாரவாரங்கேட்டுத்திருமால் மயக்க மடைந்தனர். முனிவர் மனஞ்சடைத்தனர். இந்திரன் முதலிய தேவர்களு மேனையோருஞ் சோர்வடைந்தனர். எல்லாவுலகத்தையும்பெற்ற மாதாவாகிய உமாதேவியையும் பிரம விஷ்ணுவுக்குயர்ந்த சிவபிரானையு மறந்து தக்கன் செய்யும் யாகத்திலே வந்ததே துன்பமென்று, தேவர்கள் கூடிப்பேசிச் சலித்துப்பயந்து சொல்லுவார், விநாயகக்கடவுளைப்பூசியாது அமுதங்கடைந்து முன் பட்ட பாடுதெரியுமே உமாபதியை யிகழ்ந்து செய்யும் யாகத்திலே மதிகெட்டுப்போய் வந்தோம். இது பெரும் பிழையென்று வருந்துஞ்சமயத்திலே திசையெல்லாந் துந்துபிவாத்திய முழங்க, இந்திரனுதியர் திருமாலுடன்கூடி இனிச்செய்யலாவதே

திருக்கின்றதென்று ஆலோசித்திருக்க, அவருக்கெதிரே பூதப்படைகள்வந்துதாக்கின. பெருமுழக்கமிட்டுவரும்பேய்கள் தேவர்கள் மேலே இரத்தக்கோலமிட்டதுபோல அவர்கள் வாயைக்கிழித்து இரத்தத்தைச் சிந்தின. தேவப்பெண்கள் காதுகளையறுத்துத் தொங்கவிட்டன. கோபங்கொண்டெழுந்த பூதப்படைகள் தக்கன் யாகசாலையை நெருப்பை வைத்துக் கொளுத்தின. யாகாக்கினியை யவித்தன. சொர்னத்தாலாய சுவரை யிடித்தன. குடங்களையுடைத்தன. கிளைகளிற் பூக்கள் மலர்ந்த கற்பகதருவை வேரோடுபிடுங்கின. திசைகளெல்லாநடுங்கின. இங்ஙனஞ்செய்யும் பூதங்களை யாலையிற் கரும்பைப்போல நெருக்கித் தேவர்களலைத்தனர். அதுகண்டு துர்க்கைவந்து தேவசேனைமேல் சமுத்திரத்திலே கப்பல்களைத்தாக்குஞ் சுறுமீனைப்போல மோதினள். பத்திரகாளியுஞ் சூலத்தை யசைத்துத் தேவர்கள் தலையையு மூளையையுந் தகரும்படி யறுத்துத் தயிர்கடையு மத்தைப்போலத் தண்டாயுதத்தாலே கலக்கினள்.

இறவாததேவர்கள் போருக்காற்று துடைந்தோடினர். தேவர்கள் கொடிப்படை நாசமடைதலும், யமன் ஆக்கினி நிருதி வருணன் குபேரன் இந்திரன் வாயு வொன்றுகூடித் திரண்டு யுத்தத்துக்குவந்தனர். அவரோடெதிர்த்து நந்திதேவரு மணிமானுஞ் சண்டனும் பூதவீரர்களும் வில் வாள் தண்டு கொண்டு கருங்கடல் மேல் அக்கினிக்கூட்டம் புகுத

ல்போலப் புகுந்து போர்தொடங்கி, யிந்திரனோடு நந்திதேவர் பலகணங்களுட னெதிர்ந்து யுத்தஞ்செய்தனர். சூரியன் அக்கினி நிருதி யமனாகிய நால்வரோடுஞ் சண்ட னெதிர்ந்து சண்டைசெய்தனன். சந்திரன் வருணனாதியருடன் மணிமானெதிர்ந்து யுத்தஞ்செய்தனன். பம்பை படலிகை முதலிய வாத்தியங்களும் யானைகளு முழங்கின. வில் முட்கரம் மழு வாள் முதலிய ஆயுதங்களா லிருதிறத்தாரு மலைந்தனர். தேவர்கள் பூதப்படைகளின் கால் தலை கை தோள் முதுகு மார்பு இவைகளையறுத்துச் சூரியசந்திரர்களை மோதும் இராகு கேதுக்களைப்போலக் கொதித்தனர். பூதப்படைத்தலைவரானவர் சித்தர் தேவர் இயக்கர் விஞ்சையர் கின்னரர் கருடர் கிம்புருடர்களைக் கையாலடித்துக் காலாலுதைத்து ஆகாயத்திலே யெடுத்தெறிந்தனர்.

இந்திரன் கருநிறத்தோடெழுந்த மேகம்போல வில்லைத் தாங்கி யிடியைப்போல நாணோசைசெய்து மழையைப்போலப் பாணங்களைத் தூவிக் கணங்களைத் துரத்தி நந்திதேவர்மேற் போர்செய்து ஒன்று பத்து நூறாயிரமாகப் பாணங்களைச் செலுத்த அவைகள் நந்திதேவரது மழுவாயுதத்தால் விளக்கில் வீழும் விட்டிலைப்போலமாய்ந்தன. அதன்மேலிந்திரன் மலைபோலுந்தண்டாயுதங்கொண்டுமலைந்தனன். அதை நந்திதேவர் மழுவாயுதத்தாலடிக்கத் தரையினிற் கோபங்கொண்டெறிந்த மட்பாத்திரம்போல அது பொடிப்பொடியாயிற்றது. இந்திர

ன் வச்சிராயுதமெடுத்துப் பூதவீரரோடுசண்டைசெய்ய அவ ரும்போர்செய்து இளைத்தனர். அதன்பின் நந்திதேவரைநோ க்கி"வலிமையுடையாயானுலினி நிற்பா"யென்று வச்சிரத்தை வீசினுன். வேதமுழங்கினுற்போலத் தேவர்கள் கர்ச்சித்தார் கள். நந்திதேவர்விடுத்த மழுவினுலே யிந்திரன் வச்சிராயுதம் யாகாக்கினியிலேயிட்ட சமித்தைப்போலச் சாம்பராய்ப்போ யது; அதுகண்டு இந்திரன் கோபங்கொண்டு வலிமைதங்கிய பெரிய யானையைப் பாயும்படி செலுத்தலும், அதன்வா லைப்பிடித்து நந்திதேவர் திசைதோறுங் காற்ருடிபோலத் திரி ந்தனராய் அந்த யானையோடு இந்திரனைச்சுழற்றியடித்தலுங் கலங்கிக் குயிலுருவங்கொண்டு அவன் பறந்தோடினன். ஓடி விண்ணில் மறைதற்குமுன்னரே யதன் சிறயையு நந்திதேவர் அறுத்தெறிந்தனர். நமன் அக்கினி நிருதி சூரியன் இந்நால் வரோடுஞ் சண்டன் போர்புரிந்து அக்கினியினது எழுகைக ளிற் சிலவற்றையறுத்துச் சூரியன் பல்லையுடைத்துக் கோ பாக்கினியிலே மூழ்கி வெற்றிகொண்டனன். வருணன் வாயு குபேரன் சந்திரனிந்நால்வருடனே மணிமான் யுத்தஞ்செ ய்து அவர் சேனையையுஞ் சேனைகாவலரையு மாயுதங்களையுங் கொன்று பருந்துங் காகமுஞ் சூரியமண்டலத்தை மறைத்தி டும் பந்தருக்குள்ளே நின்று வீரகர்ச்சிதம் பண்ணினுன்.

வித்தியாதரர் சேனையையுந் தேவர்சேனையையும்பேய்க் கணங்கள் மார்பிலடித்து உதைத்துக்கன்னத்திலறைந்து இடி

த்து எற்றியிதித்துப் பற்றி யிழுத்துக்கடித்து உயிரையுண்டு மேகக்கூட்டங்களைப்போலத்திரிந்தன. எட்டுத்திசை காவலரும் இங்ஙனம் வலிதொலைந்துபோதலும், கெடாத புழுதிமொய்த்து மேலெழப் பூதவீரர் தக்கன்யாகசாலைபுட்புகுந்து அமுதம்வைத்திருந்த குடங்களை யண்டங்களை யுடைத்தல்போலுடைத்தனர்; அதுதெரிந்து வேள்விகாவலராகிய விஷ்ணு எதிரே போர்செய்யவந்தனர். அப்போது தக்கனெவ்விடத்திருக்கிறான் யாகசாலை யெங்கிருக்கிறது அதிற்புகுந்த தேவர்களெங்கிருக்கின்றனர் பாருங்கள் உள்ளேபோமின் அவனைக்கட்டிக்கொண்டுவாருங்கள். என்று யுத்தத்திலே கோபித்து வீரபத்திரர் சொல்லுதலும், பூதவீரர் சொல்லுவார். இந்திரன் யானையை விட்டுவிட்டோடினன். யமன் எருமைமாட்டைவிட்டுப்போயினன். தேவர் முதலிய யாவரும் ஓடியொளித்தனர். வேள்விகாவலனாயிருந்த விஷ்ணு யுத்தஞ்செய்ய வந்தனனென்றார். எம்பிரான் றிருவடியை வணங்கிக் கண்களைப்பிடுங்கி யருச்சித்ததும் ஐயனே யருளுகவென்று சக்கரம்வாங்கியதும் பின்னுமவரருளாற் கிரீடம் பெற்றதுந் திருமால் மறந்தான்போலும், அவன் எங்கிருக்கிறானெங்கிருக்கிறானெனத்தேடி யெதிர்ந்து நீ தக்கனைக்கொண்டுவந்து விட்டுவிடுகிறாயோ? அல்லது யுத்தஞ்செய்கிறாயோ? வென்னலும், விஷ்ணு கோபித்துக் கொடிய யுத்தத்துக்குக் கருழன்மேலேறி வந்து வில்லைவளைத்து இடிபோலச் சிறுநாணொலிசெய்

து பாணவருஷங்களை மேகம்போல வீரபத்திரர் தேரின் மேலும் பத்திரகாளி மேலுங் கணங்கள்மேலும் பூதங்கள் மேலு நந்திதேவர்மேலுஞ் சண்டன் மேலுஞ் சொரிந்தனர். அதுகண்டு வீரபத்திரர் முகுந்தா அசுரர் தயித்தியர் சேனையைப்போலப் பூதப்படைகளை யிலேசாக நினையாதே பொருகின்ற சண்டையில் மயங்காயென்றால்வருக. என்றொரு வில்லைப் பிடித்துப் பாணங்களைவிட்டனர். விட்டபாணங்களாகியகூற்றுகள்போய்ப் பகைவருயிர்களை யுண்ணப், பிணமலைகள் குவிந்தன. துடித்த வுடல்களினின்றும் இரத்தவெள்ள மொழுகின. கணங்கள் பாடக் குறைத்தலைப்பிணங்கள் கூத்தாடின. திசைகள் நடுங்கின.

அம்மட்டோ நின்மலராகிய வீரபத்திரர் விடுத்த பாணங்கள் தக்கன் சேனையை யழிக்கும். தேர்களைக்கெடுக்கும். தேவர் தானையைத் தானைத்தலைவரைத் துணிக்கும். தாவிச்சென்று யானையை யுருட்டும். குதிரைகளைக் கொல்லும். ஆகாயமுங்கடலுந் திசைகளு நீங்காதோடும். தேவர்களுடைய தலையாதி யவயங்களோடு வரங்களையுங் கெடுத்துச்சூறையாடும். அன்றியும் நீண்டவிரோதிகள் சேனைநெரிபடப் பலத்தைக்கோபித்து, அவர்களோடிய வுலகந்தோறு முலாவித்திரிவன அவர்களிறந்துகிடக்கும் உடலைக் கிழித்து, மாமிசத்தையுண்டு அவருயிரைத் தேடித்திரிவனபோலும். பகைவராயுடலெடுத்த தேவர்கள் பேய்வடிவங்கொண்டு யுத்தகளத்

திலே யாயுதங்களெல்லாங்கெட வீரபத்திரர் சேனையாகிச்சூ
ழ்ந்தனர். இவ்விருவகைப் பேய்க்கூட்டங்களும் பெருமுழக்
கமிட்டு யுத்தகளத்திலே காக்கைகளுலாவி யாகாயத்திலிட்ட
பந்தற் சிறப்பை விரும்பித்திரிந்தன. வீரபத்திரர் பாணம்
நொடிக்குள்ளே எல்லா அண்டங்களையும் வெடிபட முடுக்கு
மானாலும் இடிதகைதெழுந் துலகெல்லாம் பகைவராவியைக் குடி
த்து, வணங்குவார்க்கருள்சுரந்து மீள்வன. தக்கன் யாகத்தில்
ஒருபசுவைக்கொன்றான் பகைவர் கையு,மெய்யுங் கட்டுத்தறி
யாக யுத்தகளமே யாகஞ்செய்யுமிடமாக, நெய்கள்தூவி, பலி
(அமுதம்) உண்ணுந்தேவர்கள் வாய் நெருப்புக்கக்கி யவிந்து
போக வீரபத்திரர்சேனை யநேகம் பசுக்களை (உயிர்களை) க்
கொன்றது. தேவர்கள் தோற்றோடுதலும் திருமால் அறுநூ
று பாணங்களைப் பிரயோகித்தனர். அவைகளை நின்மலரா
கிய வீரபத்திரர் கொல்லு கொல்லென ஒரு பாணத்தினுனி
யாலழித்தனர். சுடும்படியாயிரம் ஆயுதங்களைத்திருமால்பின்
னும் விடுத்தலும், வீரபத்திரர் அந்த ஆயுதங்களை யிழுக்கும்
படி காந்த நிகராகிய ஒருபாணத்தை விடுத்தனர். அதன்மே
ல் திருமால் பதினாயிரம் பாணமாகிய இருளாற் போர் செய்த
னர். பரிசுத்தராகிய வீரபத்திரர் ஆயிரம் பாணங்கள் சூரிய
னைப்போல விளங்க எவினார். திருமால் மழைபோல அளவற்
ற பாண மழையைப் பின்னும் பொழிதலும்,வீரபத்திரர்ஒரு
பாணத்தைச் சூறுவளிக் காற்றுப்போல விடுத்து அவைகளை

மாற்றித் திருமால் தேரையுங் குதிரையையுங்கொன்று தேரி லுள்ளவனைப் பாரிலுள்ளவனுக்கினர். உடனே சேமததேர் மேற் றிருமால் குதித்தேறி யெதிர்த்து வெற்றியுண்டாகிய பாணங்களாற் பொருதனர். சந்திரனை மாலையாகத்தரித்தவீர பத்திரர் ஒருதொடையினு லொரு பாணத்தைவிட்டு அவர் வில்லையு மம்பையுந் துண்டப்படுத்தினுர். பின்பு திருமால் தண்டாயுதமொன்றேந்தி யுதயகிரி மலையினும் பலமுள்ளதெ ன்றுசொல்ல விடுத்தனர். அதை வீரபத்திரர் மற்றொரு தண்டங்கொண்டடித்து தகர்த்துத் தள்ளினர். அதன்மேல் திருமால் சக்கரத்தை யெடுத்துச் சகல அண்டங்களு நடுங்க, வல்லபானு லிதைத்தாங்குவாயென்று விடுதலுங், தேவர்க ளாரவாரித்தனர். பூதர்கள் வருந்தினர். சக்கரம் வருதலாற் பூமியந்தரம் நெருப்பெழக் கொதித்தெழும்போது வீரபத்தி ரர் உங்காரம் (பெருமுழக்கம்)செய்து காமிக்கப்பட்டபொரு ளைப் பக்குவமுடையவன் தடுப்பதுபோலத் தடுத்து அலைகள் வற்றும்படி குடித்துத் திரிலோகத்தினு முழங்கி மலைகளைப் பொடிசெய்து நேரே வருகின்ற அந்தச்சக்கரத்தை மாலையா கப்புயமாகிய மலையிலே தமது தலைவராகிய சிவபிரானைப் போலத் தரித்துக்கொண்டனர். இங்ஙனஞ் சக்கரம் பறி போயபின்னர் திருமால் வாளாயுதங்கொண்டு மேகமின்னலு டன் வருதல்போல வருதலும், வீரபத்திரர் அண்டங்களு மெட்டுத்திசைகளும் வெடிபட ஆர்த்தனர். அதுகேட்டு

இடியோசையால் விழுஞ் சர்ப்பத்தைப்போலப் பயந்து திருமால் கீழேவிழுந்தனர். அவரை வீரபத்திரர் கருணையினலே கொன்றாரில்லை. அவருஞ் சமுத்திரத்திலே போயொளித்தனர்.

வீரபத்திரர் வீரகர்ச்சிதத்தாலே திருமாலவசமாகி வீழ்ந்தால், அவர் ஆயுதப் பிரயோகஞ்செய்தா லுலகம் தாங்குமோ? சண்டனு நந்திதேவரு மணிமானும் யமனையுங் குபேரனையும் வாயுவையும் அக்கினியையும் வருணனையும்நிருதியையும், யுகாந்தகாலத்து மேகம்போல வாய்வழி ரத்தங்கக்கக் கலக்கினர். ஒப்பற்ற சிவபரஞ்சுடரை நினையாத ஒரு சூரியனைக் கண்ணைப்பறித்தனர். சந்திரனை நிலத்தொடு தேய்த்தனர் அக்கினியின் கையையு நாவையு மறுத்தனர். தேவர்முதலானவர் அவயவங்களெல்லாங் குறைந்து படுகளத்திலே கிடந்து பதைபதைத்தனர். எல்லாமுடைய நாயகனுகிய சிவபிரானை யிகழ்ந்தவ ரெவர்தாம் பிழைப்பவர். பாணமுங் கைவேலும் உடைவாளுங் கயல்மீன்களாக யானைகள் முதலைகளாகத் தாங்கிச்சென்று ரக்தவெள்ளமானது பிணங்களாகிய கரையைக் கடந்து தேராகிய கலிங்குவாயில் வழிபாகச் சுழித்துச்சென்றது. உடனே யுத்தகளத்தைவிட்டுத்தேவர்கள் படைமுறிந்தோடலும், பூதவீரர் வெற்றிச்சங்கமூத யாகசாலையுள் வீரபத்திரருடன் கணங்களும்புகுந்தன. அங்குத்தூண்களிற் கட்டிய பசுக்களை யவிழ்த்துத்துரத்தினர். உணவை விரும்பியதே

வர் முனிவரை யுதைத்தனர். மிகவைத்திருக்கின்ற அமுதகு டங்களை முனிவர்தலையிலே போட்டுடைத்தனர். குவியலாகக் குவித்திருக்கின்ற யாகப்பொரு ளெல்லாவற்றையுங் கடலி லே கவிழ்த்தனர். சிலபேய்கள் எம்பெருமானை யிகழ்ந்து செய்த வேள்வியைப் பார்த்ததேவர் கண்களைப்பிடுங்கின. யாகமென்று கேட்ட அவர் காதுகளையும் அவியேற்ற கைக ளையும் அதையுண்ட நாவினையும் அறுத்தெறிந்தன. சரசுவதி யிலக்குமி யிந்திராணி தேவப்பெண்கள் திதி (அசுரர்தாய்) முதலியபெண்கள் நாணமதிகப்படுதற்கோ திட்டிதோஷ நீங் குதற்கோ அவர்கள் மூக்கையுந் தனத்தையும் பிடித்துப் பத் திரகாளி யறுத்தெறிந்தனள்.

திசைமுழுவதும் வீரபத்திரர் யாகதண்டமாகிய யுத்த த்தை நடாத்தி, யாகபூமியிலுள்ளா ரேவல்செய்ய முனிவர் துதிப்ப முண் முருக்கம்பூப்போலப் பிரகாசிக்க யாகாக்கினி யை வளர்த்து அதன்முன்னிருந்த தக்கன் குடுமியை யொரு கையிலே பிடித்து ஒரு கையினில் வாளாயுதத்தைத் தாங்கி அடே தக்கா உன் மக்கள் மனைவி பத்திரகாளியால் மூக்கு முலையு மிழந்ததை மதிக்கமாட்டாய். போர்க் காற்றாதோடிய தேவரையுந்திருப்பமாட்டாய். இங்கே யுன்வினைவிடிந்ததோ? யாகமுடிந்ததோ? மழுவாயுதமேந்திய நின்மலரான சிவபிரா னுனக்கெளியவரோ? ஞானசத்தியாகிய வுமாதேவி யுனக்கு மகளாகவும் சிவபெருமான் மருமகனாகவு நீமுன்னே செய்த

தவப்பயனு லுலகத்தையரசுபுரிந்து வந்தாய். அவ்வெம்பெருமானை யிகழ்ந்து தனிப்பட்டாய் பாவியே! அற்பரானவர் முடிமே லபிடேகந்தங்குமோ? உன்னைப்பெற்ற பிரமனு மவனைப்பெற்ற விஷ்ணுவு முடியடி தேட நின்றோ னென்னைப்பெற்றபிதா; அவரை யிகழ்ந்த உன்வாயைத் தலையோடு துண்டப்படுத்துகிறேனென்று வெட்டித்தள்ளினர். அப்போது தக்கனுக்குச் சகாயமாக வந்திருந்தவர் சிலரோடி மறைந்தனர் நமக்குயர்ந்தா ரிலரென்று கருவங்கொண்ட தக்கனுமிறந்தனன்.

மந்திரமுறை தெரியாதவர் பூசைபோல, இந்திரனும் தேவர்களாலும் யாகமுடியாமலிருந்தது. அதைத்தக்கன்தலையை யறுத்து, இரத்தத்தாலாகுதிசெய்து தந்திரத்தால் வீரபத்திரர் முடித்தனர். மரணமில்லாதவராக யாகத்தி லவியுண்ணவுந்த தேவர்கள் மீட்டுந் தேவராக இரணகளத்திலே யவி (மரணம்) உண்டனர். அதனால் ஆலகாலத்தையுண்ட தம்பிரானைப் பரவு மடியா ரல்லாதவருலகத்தில் நினைத்தகாரிய முடியுமோ? யுகாந்தகால ருத்திரனை யொத்த வீரபத்திரர் இங்ஙனம் பகைவர்களை நாசப்படுத்திக் கயிலாயத்தின்கட்சென்று நம்பெருமானை வணங்கலும், அவர் திருவுள மகிழ்ந்து சிறுவிதிமகஞ் சிதைத்தோன் என்னும்பெயரும் வரமுங் கொடுத்தருளினர். அப்போது கயிலாயபதியாகிய சிவபிரானை யவர்பாகத்திலே பிரியாதிருக்கு முமாதேவியெழுந்து பணிந்துசொல்

லுவாள். "எல்லாரும் வணங்குஞ் சருவேசுரனுகிய வும்மை நினையாதிருந்த தக்கன் மகளென்று என்னைச்சொல்லும் அவமான மொழித்தருளவேண்டு" மென்னலும், அவர் திருவுளமகிழ்ந்து, "ஆசையுடைய இமவான் புத்திரியாவா" யென்றருளிச்செய்தனர். உடனே யவளும் ஆங்குச்சென்றனள். பிரமன் எம்பிரானிடத்திலே குறைபாடுகளைச்சொல்லி யிறந்தவரை யெழுப்புந் திருவருள்பெற்று மீண்டுவந்து தேவர்கள் கை கால் தலை முதலியவைகளையெடுத்து முன்போலப்பொருத்தலு மவரவருறங்கி யெழுந்தாற்போலு மெழுந்தனர். அவ்விடத்தெல்லாரு மவரவர் தலையைப் பழையபடி பெற்றுப் பிழைத்தனர். தக்கன் தலைமட்டுங் காணுமற்போக ஆட்டுத் தலை யொன்று கிடந்ததை யெடுத்துப் பொருத்த அத்தலையைப்பெற்றுத் தக்கன் தேவர்களுக்குள்ளே கழிபட்டவனுயினுன். ஊழ் நேரேவந்து விலக்கினுலுமவரவர் வினைவிடமாட்டாது. தக்கன் யாகமாகிய நல்வினையைச் செய்ய அதே சோகத்தை விளைவிக்குந் தீவினையாய் வந்து சூழத் துன்பக்கடலின் மூழ்கினுன். பரமேசுரனன்றி யவரவர் செய்யும் வினை யுயிர்களுக்குப் பயனறிந்து கொடுக்கற்பாலதோ? சிவமார்க்கத்தையுணர்ந்து முணராத தக்கன் செய்கையாலிறந்ததுந் திரண்ட தோளினையுடைய வீரபத்திரர் வெற்றியுஞ் சொன்னேம். தவமார்க்கமில்லாத அவன் யாகசாலை புகுந்து வருந்திய தேவ ரவமார்க்கத்தையடைந்து, பாவத்தைச்சேர்ந்த காதையு மினிச்சொல்லுவாமென்றனர் சூதமுனிவர்.

பதினோராவது தக்கன்வேள்வி யழிந்த சருக்கம் முற்றிற்று.

பன்னிரண்டாவது.

## தேவர்கள் சிவத்துரோகமடைந்த சருக்கம்.

சந்திர சடாதரராகிய சிவபிரானை யிகழ்ந்த தக்கன் யாகத்திலே போயிருந்த தீவினையினாலே தேவர்களைச் சந்திரனில்லாத மாலைக்காலத்திருள்போலவந்து சிவத்துரோகம் வளைய அத்தேவர்கள் சேற்றுநிலத்திலாழ்ந்த யானைக்கூட்டம்போலப்பாவப்படுகுழியிலே யழுந்தினர். அப்போது அவருக்குயுத்தத்திலே பயந்தோடிப்போன அசுரர் நரிக்கூட்டம்போலவந்து தாக்கி அவர்களது செல்வங்களைக் கவர்ந்து சென்றனர். கற்பக விருக்ஷங்களையும் பொன்னாட்டையுஞ் செல்வங்களையுங் காமதேனுவையுஞ் சிந்தாமணியையுந் தெய்வப்பெண்கள் போகத்தையுமிழந்து வறுமைப்பட்டனர். படியாத அற்பரிடஞ்சேர்ந்த வித்துவான்களைப்போலத் தேவர்களுடன்குடை அரசுவாழ்வு வெள்ளையானை பொற்சிவிகையையு மிழந்து இந்திரன் காலால் நடந்து திரிந்தனன். மான்மழுத்தாங்கிய நம்பெருமானை நம்பாதவர்க்குப் பூமி யந்தரஞ் சுவர்க்கமாகிய மூன்றிடத்தும் புகலுண்டோ? இந்திரபதவியை நீங்கிய இந்திரன் முதலிய வெல்லோரு மந்திராலோசனைக்குரியர்சூழ்ந்துபாயவழியாக ஆலோசித்து, நூல்களுக்காதாரமாகியவன் பிரமதேவனே யென்று அவனுடைய சத்திய வுலகின்கட் சென்று, மதுரமான அமுதமுண்ணும் வாழ்க்கை யிழந்ததனால் இராக்காலத்துத் தாமரைப்பூப்போலே முகம்வாடிப்போய்

நான்குமுகங்களையுடைய பிரமதேவன் தலைக்கடையிலேபகற்
காலத்துத் தாமரைப்பூப்போல முகமலர்ச்சியடைந்து, எட்டு
க்கண்ணு நான்கு முகமு நான்குவேதங்களை விரித்துச்சொல்
லு நாவும் எட்டுப்புயங்களும் உள்ளும் புறம்பும் நூல் தரித்த
மார்பமும் நான்கு கிரீடத்தின் பிரகாசமுங் குண்டலமுங் கம
ண்டலந் தரித்தகையுந் தாமரைப் பூமாலையும்விளங்க நாவிலே
சரசுவதி வீற்றிருப்ப அநேக பேதம்படவுயிர்கள் தோன்று
நிற்ப வேத வேதாங்கங்களு மேனைய கலைகளுந் தளிர்க்கத்தா
மரைமண்டபத்தினடுவே ரத்நதீபம்போலப்பிரகாசிக்கும் பிர
மதேவனைக்கண்டு துன்பந்தவிர்ந்தோ மென்று வணங்கினர்.
ஆகாய முதலிய பஞ்சபூதங்களா லுயிர்களுக்கெல்லாஞ் சரீர
ம் அந்தக்கரணம் விளங்கச்செய்து புவன போகங்களும்வினை
க்குத்தக்கவாறு பொருத்திக் காலங் கருமம் நடைபெறச்சிரு
ட்டிக்குந் தாமரையாசன மூர்த்தியே சரணம் தேவநாதனே
மண்பொதுத் தந்தையே! வேத வேதியர் பற்றுக்கோடா
யுள்ளவனே! கருதுவார்க்குக் கனிபோல்பவனே! சரசுவதி
துணைவனே! நான்கு திசையுடைய நிலத்துக்குச் சூரியன்போ
ன்றொளிருந்தேவனே! சரணமென்று பின்னும் பணிந்தனர்.

இங்ஙனம் பணிந்த தேவர்களுக் கெதிர்முகங்காட்டி யெ
முக என்றுபார்த்து நீவிர் வந்தகாரணம் யாதெனப் பிரமதே
வன் கேட்டலும் இந்திரன் வாய்புதைத்து நின்று சொல்லு
வான் "நிதிக் குவியல்களைக்கொண்டு வந்து குவித்து எங்களை

வணங்கும் அசுரர்களுக்குத்தோற்ரும். காமதேனுவுங் கற்பகமு மிழந்தோம். சூரிய சந்திரர் வழங்காததிசைகளிலுஞ் சுற்றித்திரிந்தோம். ஆகாய கங்கையில் விடியற்காலம் ஸ்நானமு மறந்தோம். சந்தியாவந்தனமுந் தவறினேம். தேவப்பெண்கள்போகத்தையும் பிரிந்தோம். வேதார்த்த நிச்சயமும்போய் வீணாள் கழித்தோம். வசையாகிய ஆபரணமணிந்த அசுரராகிய சுருமீன்கள் தாக்க இசையாகிய தோணி கவிழப்பட்ட வியாபாரிபோலத் துன்பக்கடலிலழுந்தினேம். விரும்பப்பட்ட பொருள்கிடையாமலந்தோ! நல்ல மதுரங்கலந்த விஞ்ஞானத்துக் கலந்தோம். எங்களுக்கிவ்வாறு இடையூறு வந்தன" என்னலும், பிரமன் சொல்லுவான் "யான் செய்யும் யாகத்தைத் தடுத்துத் தக்கன் நல்லதற்கா யாகஞ் செய்தான். சிவபிரானுக்கு அவிப்பாகங் கொடுப்பதையுமொழித்து, அவரையு மிகழ்ந்தான். இம்மட்டோ? தன்னுடைய மக்களையெல்லாம் யாகத்துக்கு வரவழைத்தான். அவருட் சிறந்த மகளாகிய சதி (உமாதேவி) யை யெல்லாவுலகமுமீன்றதாயென்று தெரியான். அந்த முறையை யெடுத்துச் சொல்லவுங் கேட்டானில்லை. மதத்தினுலழிந்துபோனுன். சொன்னுலுங் கெடுமதி கண்ணுக்குத் தெரியுமோ? தேவர்களே! யறிவில்லாத அவனப்படியாகியது நிற்க. உங்கள் புத்தியும் வீணய்ப்போமோ? சிவபிரானை யிகழ்ந்த மார்க்கத்தில் எவரேனு நிற்பரோ? நீங்களோ நின்றீர்கள். மூலகா

ரணராகிய அவ்வெம்பெருமான் விடமுண்டதனாற் சாவாதிரு
ந்தீர்கள். திரிபுர சங்காரஞ்செய்ததனாற் கற்பக நாட்டிலிருந்
தீர்கள். அவர் செய்ந்நன்றியைமறத்தலால் நல்வினையாகிய மக
முங்களுக்குத் தீவினையானது. பரமேசுரன் விஷ்ணுவைப் ப
டைக்க அவரென்னைச் சிருட்டிக்க அந்த நாள் முதலுலகத்
தை நானு மென்பிதாவுமீன்று காத்துவருகின்றோம். ஆத
லாலவரைத் தவிர வேறு பற்றுக்கோடு நமக்கேது? அவரை
த்தெரிந்துவணங்கமாட்டீர். வேதங்கள்சொல்லியுஞ் சுவர்க்க
மீதிருந்தும் மேன்மையுடைய மெய்ந்நெறியைக் கடந்தீர்.
இனிக்குற்றம்பொருந்தக்கடவீர். சிவத்துரோகம் உங்களை
விடுமோ? பாவமும் பழியுங்கொடுக்கும். பகைவராற் கொல்
லச்செய்யும். தாபமுஞ் சோபமுமுண்டாக்கும். குலத்தையுங்
குறைக்கும். ஆகக் கூடியவற்றை யழித்திடும். நரகத்திலே
யழுத்தும். நீலகண்டராகிய நம்பெருமானை நிந்திக்குங் கீழோ
குஞ் சிவாகமஞ் சிவபுராணங்களை யிகழ்வோரும் மெய்யன்ப
ரையும் அவர்வேடங்களையு நிந்திப்பவருங் கும்பிபாகமாகிய
கொடுநரகத்திலே வீழ்வர். இம்மட்டோ? செழியபுனற்சடை
யுடைய எம்பிரான் சிவமார்க்கத்தை விட்டுத் துன்பமெய்த
அன்னிய மதத்திற் பிரவேசித்த பாதகர் நரகத்திலழுந்தி யம
தண்டத்தின் கழுந்தாலடிபட்டுக் கற்பகாலங் கழிப்பர். ஆத
லாலுங்களைச் சிவத்துரோகம் பிடித்தலைப்பத் தானவர்க்குத்
தோற்றுப் பாம்பின் படத்தைக்கிழிக்கு மயில் ஓந்தியினாலே

சுழலுவதைநிகர்த்தீர். சிவத்துரோகம் என்னுலும் என்பிதா வாலு நீக்க நீங்குமோ? நீங்காது.

வேதமார்க்கத்திற் றீராத பாவத்தை யான்போக்குவன். என் விதியினுற் றீராத பாவத்தை விஷ்ணுபோக்குவர். அவராற் போக்கக்கூடாத பாவத்தைச் சிவபிரான்போக்குவர். அவராற் றீர்க்கமுடியாத பாவமெவராலுந் தீர்க்க முடியாது. பசுக்கொலையினும் பிரமாணக்கொலை கொடிது; அதினுங் கொடியது ஸ்திரீயைக்கொல்வது. குருத்துரோகத்திற் சனத்துரோகமும், அதினுந் தெய்வத்துரோகமும் ஒன்றுக்கொன்று நூறுபங்கு கொடியது. இவைகளெல்லா நீங்குமானுலுஞ் சிவத்துரோகந் தீரவேமாட்டாது." என்று பிரமதேவன் சொல்லித் தேவர்களைப் பார்த்துப் பின்னுஞ் சொல்லுவான். "பழமையாக எல்லா அண்டங்களிலுமுள்ள சிவாலய சேவைசெய்வீராகிலன்றுபோகும் உங்கள் தீவினை. அது முடியாதென்றால் நான்கு விதமுண்டு அவைகளுளொன்று செய்யத்தீரு" மென்று அந்நான்கும் அதனுளொன்றும் விவரமாகச் சொல்லுவான் "இந்தப் பூமிக்குமே லிலக்கயோசனை தூரஞ் சூரியமண்டலம்; அதன்மேலவ்வளவுதூரஞ் சந்திரமண்டலம்; அதன்மேலவ்வளவு தூரம் நக்ஷத்திரமண்டலம்; அதன் மேல் புதன், சுக்கிரன், செவ்வாய், வியாழம், சனியாகிய இவ்வைவர் மண்டலமும் இரண்டிரண் டிலக்கயோசனை தூரமேன் மேலுயர்ந்தன; அவற்றின்மேற் சத்தருஷிகள் மண்டலம்

ஒருலக்கயோசனை தூரமுள்ளது; அதன்மேல் ஒரு லக்கயோச னை தூரமுள்ளது துருவமண்டலம். இதுவரை புவலோகத்தி ன்தூரம் பதினைந்திலக்கயோசனையாயிற்று. அதிலிருந்து சுவ லோகம்வரை யெண்பத்தைந்திலக்கயோசனைதூரமாம்; அத ன்மேல் மகலோக மிரண்டுகோடி ; அதன்மேற் சனலோக மெட்டுக்கோடி; அதன்மேற் றவலோகம் பன்னிரண்டுகோடி; அதன்மேற் சத்தியலோகம் பதினாறுகோடி ; அதன்மேலெ ன்னுடைய பதவி முக்கோடி ; அதன்மேல் விண்டுபதவி முக் கோடி ; அதன்மேற் சிவலோக நாற்கோடி ; அதன்மே லண் டச்சுவர் ஒருகோடியோசனை தூரம், ஆக,கட்டுத்தொகை யை ம்பதுகோடியோசனை தூரமாம். அதன் கீழே பூமியின் கனம் எண்பதிலக்கயோசனைதூரம்; அதை யெட்டுநாகமும் ஆதிசே டனு மெட்டுயானைகளுந்தாங்கி நிற்கும் ; அதன்கீழே பொ ன்னிறமுள்ளவர் வசிக்குமிடம் இருபதிலக்கயோசனைதூரம் ; அதன்கீழே பன்னகர் அவுணர் முதலோரிருக்குமிடம் அறு பத்துமூன் றிலக்கயோசனைதூரம் ; அதன்கீழே கூர்மாண்ட ரிருப்பிடம் ஒன்பதிலக்கயோசனை தூரம் ; அதன்கீழே கும் பியென்னு நரகம் தொண்ணூற்றொன்ப திலக்கயோசனை தூர ம்; அதன்கீழே யிருட்பூமி யிருபத்தெட்டுக்கோடியே யிருப த்தொன்பதிலக்கம் ; அதன்கீழொரு ஆமையிருப்பிடமொரு கோடி; அதன்கீழே புகைக்கூட்டம் ஐந்துகோடி ; அதன்கீ ழே யக்கினிச்சுவாலை பத்துக்கோடி ; அதன்கீழ் காலாக்கினி

ருத்திரர் கோயில் கோடி; அதன்கீழே யண்டச்சுவர் கோடி; அதன்கனங் கோடியோசனை தூரம். ஆகப் பூமியின் கீழள வு ஐம்பதுகோடி யோசனைதூரமாகும். பூமியினடுவில் நாவல், தேக்கு, குசை, கவுஞ்சம், இலவு, இறலி, புட்கரமென்னுந் தீவுக ளேழும் முறையே ஒன்று, இரண்டு, நான்கு, எட்டு, பதினாறு, முப்பத்திரண்டு, அறுபத்துநான்குயோசனை தூரமாம். அவற் றைச் சூழ்ந்த உப்பு பால் தயிர் நெய் கருப்பஞ்சாறு தேன் சுத்தநீர் என்னுங் கடல்களேழும் மேற்கூறிய என் முறைப் படி யளவுள்ளதூரமாகும். ஆக இரண்டுகோடியே யைம்பத் தினன்கிலக்க யோசனைதூரமுள்ள தீவுகளையுங் கடல்களையுஞ் சூழ்ந்த சொர்னபூமி பத்துக்கோடி யோசனை; அதனைச்சக்கர வாளகிரிசூழ்ந்து நிற்கும்; அதன்கனம் பதினாயிரம்யோசனை; அதைச் சூழ்ந்தபெரும் புறக்கடல் கோடியே மூன்றிலக்கம்; அதைச்சூழ்ந்த இருட் பூமிமுப்பத்தைந்துகோடியே முப்பத் துமூன்றிலக்கம்; அதைச்சூழ்ந்த அண்டச்சுவர் ஒருகோடி யோசனைதூரமாகும்; ஆகவே பூமிமத்தியளவு ஐம்பதுகோடி யோசனைதூரமாம். இந்த ஐம்பதுகோடியோசனை தூரமுள்ள நிலவுலகத்தைச்சூழ்ந்து ஆங்காங்குள்ள சிவாலயங்களை வணங் குவிரோ ஐம்பதுகோடி யோசனைதூர மாகாயத்தின்மேலேறி யிடபாரூடராகிய சிவபிரானைவணங்குவீரோ? ஐம்பது கோடி யோசனைதூரம் பாதாளத்திலே யிறங்கி யங்கே சிவபெருமா னைத் தரிசிக்கின்றீரோ? இவை அன்றி ஈசனை நினைந்தொரு

பக்கத்திலிருந்து தவஞ்செய்கின்றீரோ? உமது கருத்தியா"
தென்று கேட்டனன்.

அது கேட்டுத் தேவர்கள் பிரமாவை நோக்கி "மேற்
கூறிய மூன்றிடத்தும் போய்ச் சிவத்துரோகந் தீர்க்க எங்க
ளால் முடியாது. பலவிதமான சிரமமிருக்கிறது. தவஞ்செய்
து நம்பெருமானைக் காணுமுபாயத்தை யருள் செய்யவேண்
டு" மென்று கேட்டனர். பிரமன் சொல்லுவான் "தவஞ்
செய்பு நல்ல இடம் கடல்சூழ்ந்தநிலவுலகமேயாகும்; அதினு
மலைச்சாரலினிடமல்லால் வேறிடமாகாது. பூமியின்கணுள்ள
ஏழுதீவின் வேந்தர்: மனுபுத்திரனாகிய விரதன் அங்கிதீரன்
மேதாதி புட்டு சோதிட்டு துதிமான் சுவன்னன் என்பவர்.
அவருள்ளுஞ் சம்புத் தீவிலுள்ள அங்கிதீரன் புத்திரராகிய
பாரதன் கிம்புருடன் அரி கேது பத்திராச்சுவத்தன் இளாவி
ரதன் இரமியன் பொன்னன் குரு ஆகிய ஒன்பதுபேருமொ
ன்பது கண்டங்களை யாளு மரசர்களாம். சம்புத்தீவினடுவே
மகாமேரு விளங்கும்; அம்மேருமலைபி னானுதிக்கிலுஞ் சூழ
நாலுமலைகளிருக்கும். அதற்கப்பால் தென்பக்கத்தில் மூன்று
மலையும், வடபக்கத்தின் மூன்றுமலையும், மேற்குங் கிழக்குந்
தனித்தனி யொவ்வொரு மலையுமாகத் தோன்றுமலைகளுமெ
ட்டாம். மேருமலையின் கீழும் பக்கமும் பதினாறாயிரம் யோ
சனை தூரமாம். உயர மெண்பத்து நாலாயிரம் யோசனை தூர
மாம். ஏனைய மலைக ளிவ்வளவையிற் பாதி யுள்ளனவாம்,

மேற்கூறிய எட்டுமலைகளைச்சாருமிடத்தினு மேருமலையின் சுற்றுப்பக்கத்திலுமே நவகண்டங்களுள்ளன. கேளுங்கள் தேவர்களே! வடகடற் பக்கமுள்ள சிருங்கமலையின் மத்திய தேசமே குருகண்டம்; அதற்கு இப்புறம் சுவேதமலை வரையுள்ளதேசம் இரமிய கண்டம்; அதிலிருந்து இப்புறம் நீல மலை வரையுள்ள இடம் இரணிய கண்டம்; அதன்பக்க மேரு மலையைச்சூழ்ந்த இடம் இளாவிரதகண்டம். மேல்கடற்பக்க முள்ள கந்தமாதன மலையினிடம் கேதுமாலகண்டம். கீழ்கடற்பக்கம் மாலியவான் மலையிடம் பத்திரிகண்டம். மேருவின் றென்பக்கம் நிடதமலையினிடம் அரிகண்டம்; அதன் தெற்கு ஏமகூடமலையின் பக்கம் கிம்புருடகண்டம்; அதன் தெற்கு ப்பனிமலையையுஞ் சேதுவையு நடுவிலுடைய இடம் பரத கண்டமாம்.

புண்ணியம், புண்ணியபாவம், பாவம் இம்மூன்றையுங் கருமபூமியிற் செய்வோர்கள் அதன்பலனைச் சுவர்க்கத்திலும் பூமியிலு நரகத்திலு மனுபவிப்பர். இம்மூன்றிற்சுவர்க்கசேட பலனைக்கரும பூமியிலே வந்தனுபவிப்பர். பரதகண்டம் உழவு வாணிபம் வித்தை விவாகம் சிற்ப முதலிய கருமஞ் செய்தலாற் கருமபூமியாயிற்று. அதிலிருப்பவர்க்கு உணவு நெல். சரீரம் நான்குமுழம். வயதும் நானூறு. யுகந்தோறு நூறு நூறு வயதுகுறையும். ஆகலாற் கலியுகத்துக்கு வயது நூறு. கருமசேடங்க ளனுபவிப்பார்க்குங் கதிகளை விரும்புவார்க்குங்

தருமமுந் தவமுஞ் செய்யத்தக்க இடம் பரத கண்டமே. போக பூமியிலே யநேக காலஞ் செய்யுந்தவப்பலனைக் கரும பூமியிலொருதினஞ் செய்யுந்தவங் கொடுக்கும். உமாதேவி யை யொருபக்கத்தி லுடையார் ஆலயம் பற்பல அண்டங்க ளினும் பற்பலவாக இருக்கும். மகாமேருமலையின்வடதிசையி லண்டச்சுவரை யடுத்திருக்கும் வடகயிலாசமலையும், அதன் சிகரமும், உருத்திரர் நாராயணர் பிரமர் கந்தர் கணபதிகள் பூதர் அரிகரபுத்திரர் தேவர் கூட்டத்தின் முழக்கமும், நிரு மல சதாசிவமூர்த்தி மான்மியமும் சொல்ல முடியாது. அக் கயிலாசமலை கற்பகோடிகாலங்கள் கடந்து மேன்மேல் வளர் ந்துதலையிலே சந்திரனைத் தரித்த பெருமானையன்றி யேனைத் தேவரெல்லா மிறப்பதும் பிறப்பதும் பார்த்துப் பார்த்து நகைத்து நிற்கும். அந்தக்கயிலாசமலை முதல் துளுவதேசம் வரை ஐந்து. துளுவதேசத்தி லொன்று. தொண்டைநாட்டி ல் முப்பத்திரண்டு. நடுநாட்டிலிருபத்திரண்டு. சோழநாட்டில் நூற்றுத்தொண்ணூறு. மலைநாட்டி லொன்று. கொங்கு நாட் டிலேழு. சிங்களத்தி லிரண்டு. பாண்டிநாட்டிற் பதினான்கு. பூருவச் சிவஸ்தலங்கள் உள்ளன. இந்த இருநூற்றெழுபத்து நான்கு சிவஸ் தலங்களுக்குள்ளே தெக்கிணகயிலாசந் திருக் குற்றாலத் தலமாகும். மேற்கூறியவையன்றிப் பிறசிவஸ்தல ங்களு மாங்காங்குப் பற்பலவுள்ளன. சம்புத் தீவிலுள்ள பரதகண்டமாகியபெண்ணுக்குக் கால்நீட்டுந்திசைவடதிசை.

தென்றிசையே தலை. பருப்பதம் கேதாரமென்னு மிரண்டு மலைகளுங் கொங்கைகள். தமிழ்நாடே முகம். செண்பகாரணியஞ் சூழ்ந்த திருக்குற்றாலத்தல மபிடேகத் தலமாகும். இஃதன்றி உலகமுழுவதும் பெற்ற மாதாவாகிய பராசத்தி எல்லா அண்டங்களுஞ் சிறுவீடாகத் தனியே நின்று விளையாடு முதற்பதியா யுயர்ந்ததுந், தாணுமாலயப்பூங்கொட்டிலுக்கு மூலவீடுமாய்க் கற்பகாலங்களைக் கடத்துந்தோணியுமாய்க்குணங்குறிகள் கடந்த ஞானசிற்பரன் வாழுமிடமுமான பரமரகசியத்தானமுமாகும். இம்மட்டோ? அத்தலம் பராசத்திக்குஞ் சிறந்த தானம். திரிமூர்த்திகளுந் தேவர்களுந்தோன்றுமிடம். பார்வதி யறம் வளர்க்குமிடம். பிறந்தவர்கள் பிறவியை மறக்குமிடம். வடவருவி யென்னுங் காமதேனு தருமார்த்த காம மோக்ஷமென்னு நான்கு பாலையுங் கொடுக்கு மிடமாகும். பதினுயிர வருடமொரு புண்ணியக்ஷேத்திரங் கொடுக்கும் பயன் முழுவதுங் காசிக்ஷேத்திர மொரு வருடத்திலேகொடுக்கும், கேதாரம் ஆறுமாதத்திலே தரும். காஞ்சியிரண்டு மாதத்திலே தரும். சிதம்பரமொருமாதத்திலே யுதவும், திருக்குற்றாலம் ஒருநாளிலே கொடுத்தருளும்,

இத்தகைய திருக்குற்றால க்ஷேத்திரமென்னு நன்னகரத்தலமானது தாய் தந்தைக்கன்னமிடாதவர், சுற்றம் வருந்த வாழ்கின்றவர், பிள்ளைபசித்துத் துடிக்க உண்போர், தம் மனைவியை விட்டு அயலார் மனைவியை யிச்சித்துச்செல்வோர்

பிறர் குடிக்குத் தீங்கு சொல்பவர், சபையிலிருந்து ஓரவழக்குப் பேசுபவர், நாய் வளர்த்துக் கொலைபுரிவோர் ஆகிய இவர்கள் பாவங்களெல்லாம் போக்குமென்று இருக்கு வேதஞ் சொல்லா நிற்கும். அடுத்தவர்க்கு நன்மைசெய்யாமற் றீமை செய்வோர், பிராமணரைப் பசுவைக் கொன்றவர், கொடுப்பவரைத் தடுப்பவர், கற்புடைப் பெண்கள் கற்பைக் கெடுத்தவர், குருவை வணங்காதவர், கெடுப்பவர்க்குச்சகாயமாக இருப்பவர்,தருமஞ்செய்வாருக்குக்கேடுசெய்பவர் ஆகிய இவர்கள் பாவங்களை, மலையை வில்லாகத்தாங்கிய நம்பெருமானிருப்பதற்கு வளந்தங்கிய திருக்குற்றாலம் நீக்கு மென்று யசுர் வேத மியம்பாநிற்கும். அன்னமிட்டார்க்குக் கேடு நினைப்பவர், அடைக்கலப்பொருளைப் பொருளுடையார் வயிறெரியத்தொடுகின்றவர், விரோதப்படுத்திச் சுற்றத்தாரைப் பிரிக்கின்றவர், பெரியோரைப் புறங்கூறுபவர்,கன்னமிடுபவர், களவுசெய்பவர், கள்ளுண்பவர், காமத்தாற்கெடுபவர் ஆகிய இவர்கள் பாவங்களெல்லா மெல்லார்க்கு முதற்பொருளானரது திருக்குற்றாலமென்று சொன்னாலுந் தீருமென்று அதர்வவேதஞ்சொல்லாநிற்கும். இவ்வுலகத்திற் றீராத பாவங்களெல்லாமுயர்ந்த புண்ணியக்ஷேத்திரத்திலே தீரவேண்டும். பற்பல புண்ணியத்தலத்துந் தீராத பாவங்கள் சிவஸ்தலங்களை வணங்கினாற் றீரும். அங்ஙனந்தீரினுஞ் சிவத்துரோகமட்டுந் தீராது. அதுவுந் திருக்குற்றால நன்னகரத்தலந் தீர்க்குமென்று

சாமவேதஞ் சாற்று நிற்கும். இந்தப்படி நான்கு வேதமுந் துறைதோறு முழங்குதலாற்றேவர்களே! நீங்கள் நன்னகரத்துச் செண்பகாரணியத்திற் போய்த் தவஞ்செய்து உங்கள் குற்றத்தைப் போக்கிச் சிறுமதியையுந் தரித்த சடையையுடைய சிவபிரான் றிருவருளாற் றெய்வக் கற்பகமும், பொன்னுலகமுந், தேவமாதர் புதுப்போகமும் பெற்று முன்போல வாழ்வீராக" என்று பிரமன் கூறுதலும், தாங்கள் நினைத்தபடி சொன்னதனாற் களிகூர்ந்து விடைகொண்டு வண்டுக்கூட்டம்போல வானோர் கடலாகிய தடாகத்தின் மலர்ந்த உலகமாகிய தாமரைப்பூவிற் புண்ணியமாகிய தேனூறிப்பெருக்கெடுக்குந் திரிகூடப்*பொகுட்டை (தாமரைக்கொட்டையை) ச் சேர்ந்தனர். பிரமனைத் தரிசித்துத் தேவர்கள் உறுதிபெற்ற காதையைச் சொன்னோம். அவர்கள் திரிகூடமலையிலே தவம்புரிந்து சிவத்துரோகம் நீங்கத் திருக்குற்றாலநாதரை நேரே தரிசித்து வணங்கி வானுலகிற் குடியேறு மான்மியத்தை யினிச்சொல்லுவாம்.

பன்னிரண்டாவது தேவர்கள் சிவத்துரோகமடைந்த சருக்கம் முற்றிற்று.

---

## பதின்மூன்றாவது
## தேவர்கள் சிவத்துரோகந் தீர்ந்த சருக்கம்.

தேவர்கள் வானருவிக்கு நிகராகிய தேனருவித் துறையிலே தீர்த்தமாடித் திருக்குற்றாலமாகிய திரிகூட மலையின்

* பொகுட்டு - மலை.

கண் வந்து பொன்னுலகிலுண்டாம் போகங்களையு மறந்தவ
ராய் ஆகாயம் வரை யுயர்ந்த அம்மலை மேலுள்ள கற்களெல்
லாஞ் சிவலிங்க வடிவமெனத்தெரிந்து, அதிசயித்துச் செண்
பகாரணியத்தின் வளங்களைப் பார்த்துக் கற்பகச்சோலையின்
வளத்தை மறந்தனர். குறவர்கள் தினைவிளைக்குங்காட்டி லெ
திரே சென்று அசுரரைவதைசெய்யும் பூதங்களைக்கண்டு, ஞா
னத்தையடையும் யோகியரிருக்குங் குகையையடைந்து, மற்
றவர்கள் தவஞ்செய்யுமிடத்துக்குச் சென்று, அப்பால் சந்த
னம் அகில் குரவ மரங்களை வேலியாகவுடைய சண்பகச்சோ
லையை யடைந்து மகிழ்ந்து முன்னுளிற் றக்கன்யாகத்தீயால்
வெதும்பப்பெற்ற சரீரம் தென்றற்காற்று வரவரக்குளிர்ச்சி
யுற்றனர். அதன்மேல் பாளையாகிய சடைகள் நெருங்கப்
பழுத்த ஓலையாகிய காவிவஸ்திரந் தரித்து நெடுநேர மொற்
றைக்காலானின்று, நெய்யரி (பன்னடை) யாகிய மரவுரிபுனை
ந்து பாதத்திலுள்ள நீரைத் தலையிலேறச்செய்து தவந்தரை
யும் யோகியரையு நிகர்க்குந்தென்னைமரங்களைக்கண்டு,சந்தோ
ஷங்கொண்டனர். இளமையாகிய பச்சைப்பாளை மணக்கி
ன்ற பருவமுள்ள தென்னங்குரும்பை காய்த்துக் குளிர்ந்த
மேகத்தாற் பொதியப்பட்ட தோற்றமானது நிலைபேறுடை
ய வானுலகில் வாழுந்தேவர்கள் வந்தனரென்று நெருங்கிய
மண்ணுலகத்து மாதர் கொங்கையை மேற்போர்வையான்
மறைத்தலை நிகர்த்திருக்கும். புண்ணிய விருக்ஷங்களாகப்

பொலிந்த பூஞ்சோலை வேலியாக வாழைகள் நின்று தென்றற் காற்றாலசையுங் காட்சி விண்ணரம்பைமாரை மணந்தவர் வந்தாரென்று மண்ணரம்பைகள் விசிறியசைத்தலைப்போன்று விளங்கும், வண்டுகள் குங்குமமலரில் வீழ்ந்து தேனுண்டு தாதளைந்து செந்நிறம் படைத்தெழுந்த காட்சி சிறப்புவிளங்கிய *அக்கினியிலே திருநாளைப்போவார் முற்காலத்திலே மூழ்கித் தெய்வவடிவம் பெற்றெழுந்ததைப் போன்று விளங்கும், சோலைகளுயர்ந்து பலமலர் துளிக்குந்தேன் பொன்னுட்டிற் பிரவேசித்துக் கீழேயொழுங்காக இறங்குந்தோற்றங் குளிர்ந்த மழைத்தரைக்கு நிகராக விளங்கும். சண்பகமரக் கிளைகள் மலர்களைப் பொழிவன மேகம் பொன்மழை பொழிவதைப்போலும்; அல்லது பூமழை பொழிவதைப்போலும், இலவமரத்தின் பூவிதழ்விரியுங் காட்சி யிங்குவந்திருக்குமித் தேவர்களோ தக்கன் யாகத்தி லவியுண்டாரென்று சொல்லவாய் திறத்தல்போலும். அதன் பக்கத்திலே தேமாந்தளிர் களசையுங் காட்சி தம்மிடத்தில் வந்தவரைத் தூறு சொல்லக் கூடாதென்று சோலை யவ்விலவிதழ்வாயை மூடுதல்போலும். இந்தச் சிறப்புற்ற செண்பகவனமாகிய பெண் தேவர்கள் வந்தாரென்று மாவடுவாகிய கண்ணாற்பார்த்து முரு

---

* அக்கினி - தில்லைவாழ்ந்தணர் நடராசப்பெருமான் ஆஞ்ஞையினாலே தென்மதிற்புறத்துக் கோபுரவாயிலுக்குமுன்னே வளர்த்த நெருப்பு.

க்கமலராகிய வாய்திறந்து முல்லைமலராற் புன்சிரிப்புச்செய்து பாடும் வண்டோசையாற் றுதித்துத் தளிர்க்கையினாலே பூந்தேனாகிய அருக்கியங்கொடுத்தது.

இவ்வளங்களை யெல்லாந் தேவேந்திரன்பார்த்து ஆயிரங் கண்கள் பெற்ற பயனடைந்தனன். தேவர்கள் பார்த்து இமையா நாட்டம் பெற்ற பேறடைந்தனர். இச்சண்பகவனத்தின்சிறப்பை நோக்கும்போது தேவகுருவாகிய வியாழபகவான் சொன்னது ஆயிரத்திலொன்றே யென்று பேசினர். பூக்களின்மேலே வண்டோடாத சண்பகச்சோலை யெங்குந் தேவரே பூவின் (பூமியில்) மேவித் தவமாகிய தேனையடையும் வண்டுகளாயினர். திரிமூர்த்தியாய்ச் சிவபிரான் சிருட்டி, திதி, சங்காரஞ் செய்யுமிடமாகிய அந்தத் தலத்தை யெவர் வலஞ்செய்யாதவர்? அதிலெவர் தவஞ்செய்யாதவர்? தேவர்களெல்லாருந் தவவடிவங் கொள்வாராய் வருணன் மேகவருஷத்தையும் இந்திரன் இந்திரதநுசையும் வாயு தென்றற் காற்றையும் அக்கினி முனிவரதுயாகத்தீயினையுஞ் சார்ந்திருந்தனர். யமன் தருமவடிவும் நிருதி வேடவடிவுமாகியிருந்தனர். கந்திருவர் சித்தர் விஞ்சையர் கிம்புருடர் மற்றவர்களும் மனிதராயும் மிருகமாயும் பறவையாயும் விருக்ஷங்களாயு முனிவராயுஞ் செடியாயும் புல்லாயும் அவரவர்க்கியன்ற வுருக்கொண்டு தனித்தனி தவஞ்செய்திருந்தார்கள். அசுரர் பயத்தாற்றானிங்ஙனமாறுவேடம்பூண்டனர்.சங்கவீதியையுடையதிரி

கூடநாதரை நினைந்து வானோர்பலரும், தாமரை கோமுகம் சொத்திகம் வீரம் சிங்கம் முத்தம் சுகம் பீலி பத்திரம் ஆகிய *ஒன்பது வகையாசனத்திருந்து, காமம், குரோதம், உலோபம், மோகம், மதம் மாற்சரிய மென்னு மாறுடற் பகையை விரட்டி மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் பஞ்சேந்திரியங்களை யொடுக்கி மனம் புத்தி சித்தம் அகங்கார மென்னுமந்தக் கரண நான்கையுமடக்கிக் காமம் வெகுளி மயக்க மென்னு மூன்று குற்றத்தையு மாற்றி யிடைகலை பிங்கலை யென்னு மிரண்டு காற்றினையுஞ் சுழுமுனை வழியிலே செலுத்தி யோகமாகிய நீராற்றவமாகிய பயிரை வளரச் செய்வர். இயமம் ஆசனம் தியானம் தாரணை பிராணாயாமம் நியமம் நியதி பிரத்தியாகாரம்ஆகிய அட்டாங்கயோகஞ்செய்து,மூலாதாரம் சுவாதிட்டானம் மணிபூரகம் அநாகதம் விசுத்தி ஆஞ்ஞையாகிய ஆறுதாரத்தில் மூலத்திலுள்ள குண்டலியையெழுப்பி மேலே விளையாடுதலைப் பார்த்தும் காய் கனிகள் தின்றும், புனலருந்தியும் பச்சிலையுண்டுங் கிழங்கு சருகுகளை நுகர்ந்தும் வாயு பக்ஷணஞ் செய்தும் சாந்திராயண விரதம் மாதப்பட்டினி யிருந்தும் அயனத்திலொருநாள் வருடத்திலொருநாள் போசனஞ்செய்தும் வெயிற்காலத்திலே பஞ்சாக்கினி மத்தியிலேயும் குளிர்காலத்திலே நீரின் மத்தியிலேயு

---

* ஒன்பது வகையாசனத்தினிலக்கணம் யோகநூலிற் காண்க, ஈண்டு விரிக்கிற்பெருகும்,

நின்று தவஞ்செய்தும் கல்லெனவும் புல்லெனவுந் தரையிற் கிடந்துங் கயலென நீரிலுலாவியும் புற்றென வளர்ந்தும் சரீரம் விற்போல வளைந்தும் ஆலின் வீழெனச் சடைவிழச்செய்தும் இடியைக்கண்டு கலங்காமலும் தீயைக்கண்டு பயப்படாமலும் ஊசிமேலொருகாலைவைத் தொருவிரலை யூன்றிக் கண்களை மூக்கினுனியிற் செலுத்தி நிலத்திலொரு கையை யூன்றித் தலைகீழாகக் கால்கள் மேலாக நின்றுங் கைகளைச் சிரசின்மேற் குவித்தும் விடாமல் மெய்த்தவஞ் செய்தனர்.

அத்தன்மையாகத் தேவவருடம் பதினாயிரம் வரை தவங்கள் செய்து சரீரமெல்லாம் வருந்தி வாடிக் கவலை கூர்ந்தார் தேவர்களென்றாற் சிவத்துரோகந் தொலைக்கவல்லவர்யாவர். மேற்கூறிய நீண்டகாலந் தவஞ்செய்துந் திரிகூடநாதராகிய சிவபிரானைக் காணாதவராய்த் தேவர்கள் திகைத்து வாடி மனநொந்து சொல்லுவார். "உடலெல்லாமுருகினோம். உளமெலாமறுகினோம். அக்கினியிலேகலந்தோம். வெயிலிலேகருகினோம். சிவபிரா னெழுந்தருளினாரில்லை. உலகெலாமிரக்ஷிக்குமவ ரருளில்லாதவரோ? கேட்டவரங்களைக் கொடுக்குமவர் பகைவர் முப்புரத்தைப் பொடிசெய்து புவியெல்லா நிலைநிறுத்தினார். நமதிடத்திலன்பில்லாராய் வருகிலார் பிரமாவின் வார்த்தையும் பிசகுமோ? இடையறாதவேகத்தையுடைய யானைத்தோலை யுரித்துத் தரித்தருள்செய்தவரும் சர்ப்பாபரணத்தை யணிந்தவருமாகிய ஏகநாயகர் நாமே

ல்லாமெலிய வராதிருந்தனர். ஏழையேமாகிய எங்கள் வினையிதுவோ ? செங்கையிலே மான்மழுத்தரித்தவர் செண்பகச்சோலையுடையவர். எங்குமாம் வடிவுள்ளார். எங்குமாம் விழியுள்ளாராகிய கங்கைச்சடையினர். நமதுதுன்பங்கண்டும் வருகிலார்; அவரது திருமேனியைப் புகழ்வோமென்று தேவர்களெல்லாம் அவரவர்கள் மனந்தோறும் அறிவென்னுஞ்சுடர் தூண்டப், பிளவுபட்ட சடைக்காட்டினையுடைய பொன்மலையுந் திரிகூடமலையின் முளைத்த கற்பகமும் சிவப்பமரு நல்ல கனியும் போல்வாராகிய அவ்வெம்பெருமானைத் தோத்திரஞ் செய்யத்தொடங்கி, மகாதேவரே! திரிகூடப்பரஞ்சுடரே! திரிமூர்த்திகளுக்கு முதற்பொருளாய் முளைத்த முதலே! கருணையங்கடலே! குணமலையே! யெம்பெருமானே! தூயவர்க்குத் தோன்றாத்துணையாயுள்ளவனே! யெல்லாவுயிர்க்குந் தூரமுஞ் சமீபமுமான செண்பகாடவியுடையவனே! தாய்தந்தையானவனே! வணங்காதசர்க்கு நோயானவனே! வணங்குவார்க்கு மருந்தானவனே! நிலம் நீர் தீ காற்று ஆகாயமானவனே! சங்கவிதியுடையவனே! பெண்ணொரு பாகமும் தலையிற் பிறைச்சந்திரனும் நெற்றிக்கண்ணுமுடையவனே! நரிக்கும் வேடனுக்குங்கெடாத பதவிபளித்தவனே! வேதக்குதிரையுடனே நரியை நடாத்தும் பரமகாரணமூர்த்தி! பிரம விஷ்ணுக்களறியாதவனே! யுன்னைப்புகழ்வார்க்குத்தான் கருணை செய்வாயோ? அங்ஙனமானல் புட்பகந்தன் முதலிய இகழ்வார்க்குக் கதிகொ

டுக்க வில்லையோ? ஈயறியாத பூந்தேனே! எழுத்தறியாத வே தப்பொருளே! காயில்லாதசெழியகனியே! கற்பகப்பசுங்கொ ழுந்தே! தாயறியாத கருவிலிருந்துயிர்களுக் குணவுகொடுக்கு மொப்பற்றதுணையே! கங்காநதியைச் சிரசிலே நீ தாங்கியது ம் பகீரதனுக்காகவன்றோ? மானை யொருசெங்கையினிற் றாங் கியமகானே! முற்காலம் நரகாசுரனையும்! நமனையுங்கொன்று உலகெல்லாந் துயரமகற்றினை யன்றோ? நஞ்சத்தையுங் கண்ட த்தினிற் றாங்கினாய். வெண்டலைமாலைகளின் வஞ்சகத்தையும் பொறுத்தவனே! நாராயணனும் பிரமனுங்காணாத அமுதே! பலாவிருக்ஷ நிழலிலமர்ந்தபெரியோனே! யெல்லாருக்கு முன் னையன்றிப் புகலிடமுண்டோ? எங்கள் துயரத்தைக்கண்டரு ளாத விதமென்னோ? உனது திரிகூடமலையைத் தரிசித்தவர் க்குந் தீராத வினையுண்டுமோ? தோண்டுவாரைத்தாங்காத நில முண்டுமோ? நீயறியாத செயலென்னையிருக்கிறது? இன்று நீ யெங்கள் முன்னரெழுந்தருளாயோ? எங்கள் துன்பம் மலை யினுங் கடலினும் பெரியது. எங்கள் பிழையைப்பொறுத்தல் உன்மேற்கடனன்றோ? இதுசமயம் நின்னருட்கண் பார்ப்பா" யென்று தேவர்கள் பரிதபிக்குமந்தச் சமயத்தில் கங்கையுங் கொன்றையும் வில்லமுஞ் சந்திரனுந்தரித்தசடையும் வேதம் பழுத்தவாயுந் திரிநேத்திரங்களுந் தேவர்கள் தரிசிக்க இடப வாகத்தின்மேல் திரிகூடநாதரெழுந்தருளினர்.

வாடிய பயிர்கள் மழைமுகத்தைக் கண்டது போலவும் வாடித்தேடிய தரித்திரர் புதையலைக் கண்டதுபோலவும் சித்

திர சபாநடேசரைத்தேவர்கள்கண்டு கண்ணு மனமுங்களித் துப் பரவசராய்த்துதித்து வாழ்த்திப்பரமானந்த வெள்ளத்து ள்ளே மூழ்கி யானந்தக்கூத்தாடிப் பாடிச்சிரசிலேகரங்களைக் குவித்து ஒன்ருகி யிரண்டுமாகியொன்றுமிரண்டுமாவாய். திரி காலங்களு மில்லது முள்ளது மெல்லாமுமாவாய்; அவையல் லது மாவாய். ஆதியந்தமு மலையுமணுவுமாவாய். குறும்பலா வுடையானே! நமஸ்காரம் சிருட்டி, திதி;சங்காரந்,திரௌபவ, மநுக்கிரகஞ்செய்யு முன்னையன்றி யுலகமுண்டுமோ? கருவி செயல் காலம் இடம் ஆகி அவைகளாற் செய்யும் பொருள் களுமாகி அவற்ருேடு கலந்து நிற்பாய். பிரிந்து நிற்பா யுன்னை யாரறிதற் பகுப்புடையார். அடியார் காணவும் வணங்கவு நினைக்கவுந் திரிகூடமலையிலே பொருந்தவு முரியோனே! நின் னைக் கண்ணிற்காண நீ யாணே பெண்ணே தூரமோ சமீப மோ கறுப்போ சிவப்போ வென்று வேதங்களின்னுமறிகின் றில. தொண்டர் துரும்பாகப் பாவித்தாற் றுரும்பாவாய் தூணாகப் பாவித் தாற்றூணாவாய் இரும்பு போன்ற கடின மனத்தார் காணுதற் கெளியையோ?என்று துதித்தனர். இங் ஙனந் துதித்த தேவர்களைத் திருக்குற்றாலநாதர் கருணையாற் பார்த்து “ உம்முடைய பெரியதவத்தையுந் தோத்திரத்தை யு மினிது மகிழ்ந்தனம், உங்களுக்கு வேண்டும் வரங்களைக் கேண்மி" னென்ன வருளுதலும், தேவர்கள் சொல்லுவார். “சுவாமீ! யெங்களுக்கு மிலேசாக வெளிவந்தவும்மை யன்பரு

க்கே யன்பரென்றுவேதஞ்சொல்லுங்காரணம்யாது? உம்மை யிகழ்ந்த தக்கன் யாகத்திற் போயிருந்ததனாலன்றோ? அரசிழந்து பதியிழந்து தரித்திரத்தாற் பதைக்கின்றோம். அந்தக் காலந்தொடர்ந்த சிவத்துரோகத்தையின்று போக்கியருளல் வேண்டும். எந்நாளு மெங்கள் பதவியையாங்கள் பெறவேண்டும். சண்பகாடவியிலே யொரு நாளிருந்தவருக்கும், அங்கு தென்றற்காற்று மெய்யிலேபடும்படி வரப்பெற்றோருக்குந் திரிகூடவடவருவியிலே யொருதரமூழ்கினோருக்கும் பிரயாகையிலே யாயிர மாசி மாதங்கள் மூழ்கும் பிரயோசனங் கொடுத்தருளவேண்டும். எந்தப்பாதகம்புரிந்தாராயினு மிந்தத்தலத்தில் வருவாரானா லந்தப்பாதகம் அவரை விட்டுச் சூரியன் முன்னேதோன்றும் பனிபோலப் போதல்வேண்டும். தேவலோக மழிந்தாலு மிந்தத்தல மழியாதிருக்க வேண்டும். சிதம்பர முதலிய பலதலங்களை நீர் பிரிந்திருந்தாலு மித்தலத்தைப் பிரியாதிருக்க வேண்டும். இந்தத் தலத்திலே புல் மரம் இலை காய் கனி நெல் அமுது ஆகிய இவைகளிலேதேனு மொன்றை யுண்டவர்க்கும் அவைகளைப் பார்த்தவருக்கும் இரத்நமுஞ் சொர்னமும் படைத்தவருக்கும் மோக்ஷத்தைக் காட்டுதல்வேண்டும், இரவானாலும் பகலானாலும் உமது பணிவிடையே யாங்கள் செய்திருக்கவேண்டும்." என்று கேட்டனர், உடனே சித்திரசபா நடன மூர்த்தியாகிய மகாதேவர் புன்சிரிப்புச்செய்து, இந்த வரங்கள் கொடுப்பது திருக்குற்

றாலத்தில் நமதந்தரங்கம் உமக்காக வெளியரங்கம் பெறக் கொடுத்தனம். இனித்தேவர்களே! விண்ணுலகமடைந்து உங்களரசும் வாழ்வும் பெறுக" என்று கட்டளையிட்டருளினர். தேவர்கள் திருக்குற்றாலத்தைச் சேர்ந்து சிவத்துரோக நீங்கிய மான்மியஞ் சொன்னபின் சூதமுனிவர் நைமிசாரணிய முனிவர்களுக்கு வில்லைக் கையிலேந்திய வேடன் நரியைத் தொடர்ந்து சங்கவீதியை வலஞ்சூழ்ந்த மான்மியத்தை யருள்வாராயினர். அதனை யாஞ் சொல்லத்தொடங்கினோம்.

பதின்மூன்றவது தேவர்கள் சிவத்துரோகந் தீர்ந்த சருக்கம் முற்றிற்று.

---

## பதினான்காவது
## வேடன்வலம்வந்தசருக்கம்.

சரியை கிரியை யோகம் ஞானமென்னு நான்கினுள் சிவாலயத்தைவலம்வருதல் திருப்பணிசெய்தல் சரியை. சிவார்ச்சனைபுரிதல் கிரியை. மனவொருமைப்பட்டு நெஞ்சினுள்ளே தியானிப்பது யோகம். சிவபிரானோ டிரண்டறக்கலத்தல் ஞானம்; அந்த நான்குசெயல்களு முறையே சாலோக சாமீப சாரூப சாயுச்சிய பதவியைக்கொடுக்கும். சரியை யாலயத்தை வலம்வருதலன்றி வேறோர் விதம் விரித்துச்சொல்லி லே மூவகையாம். அவையாவன: திருமதிலினுட்புறம் வலம்வருதல், வெளிப்புறம் வலம்வருதல், கைகுவித்தல், தோத்திரஞ்

செய்தல், தியானஞ்செய்தல், சாஷ்டாங்க நமஸ்க்காரஞ்செய்தல், அங்கப்பிரதக்கணஞ்செய்தலாம்; இவைகளுள் முறையே யொன்றுக்கொன்று ஆயிரமடங்கு விசேடமாம். இவ்வெழுவகைச் சரியையுஞ் செய்வோர் நகரம் நாடு தேயம் கண்டம் தீவு உலகம் எட்டுத்திக்கு வானுலகம் இவைகளுக்கரசராயிருந்து சிவலோகபதவியடைவர். இனி, காட்டுவேடன் கொலையும், நரியின் களவும், திருக்கோயிலின்வீதியை ஓடிச்சூழ்ந்த வலமும், ஒருவலமுமாகிய குற்றமும் ஏனைய பாவமும் நீக்கி யெம்பிரானுரைத திருக்குற்றாலமவ்வேடனுக்கு மோக்ஷங்கொடுத்த விதத்தைக் கேளுங்கள் முனிவர்களே! யென்று சூதமுனிவர் சொல்லுவார்,

மாம்பழங்களை யலையாகிய கரங்களாலெடுத்தெறிந்துபந்து விளையாடுந் தாம்பிரவன்னியாகியநதி பாய்கின்ற தாம்பிரமலை (பொதிகை) தாமரைப்பூவையும், தமிழ் வேதத்தையும், அகத்தியமுனிவன் பிரமனையும், போன்றிருக்கும்; அத்தகைய பொதிகையானது பிரமனாற் சிருட்டிக்கப்படாத புடார்ச்சுனபுரமென்னுந் திருக்குற்றாலத்திற் சிவபிரான் திருமாலாகவெழுந்தருளி யிருத்தலாலவரைப்போய்ச்சேருவதற்குத் திரிகூடமலையோடு பூமிதேவிக்கு இரண்டு கொங்கைகள்போலத் திரண்டு விளங்காநிற்கும், இன்னும் இமயமலையிலெம்பிரான் திருமணக்கோலங்காண நடக்கும் எல்லாரும் வந்து கூடுதலாலத்திசைதாழ அதைச்சமப்படுத்தும் பொருட்டுத் தென்றி

சைக்கு வந்த அகத்தியமுனிவர் மேக்குநோக்கப்பட்ட பிறைச்சந்திரனை யணிந்தவரது திரிகூடத்தை வடக்கு நோக்கியிருந்து தவஞ்செய்யாநின்ற மலையுமாகும்.

இத்தன்மையாகிய பொதிகைமலைப்பக்கத்திற் சிறுகுடியாகவிருக்கும் நீண்ட வில்லேந்திய வீரனென்னும் வேடனுக்குப் புத்திரனாகிய வலனென்னும் வேடன் கொலைத்தொழின் வலிமையா லம்மலையிற்பாம்புபோலத் தலையெடுத்துத் திரிவான். செருப்புங் காடுந் தேயும்படி நடக்கும் பலம் பொருந்திய கால்களும் மலையினுமுயர்ந்த புயங்களுங் கரிபோலும் நிறமும் ஆட்டுக்கடாக் கொம்புபோலும் முறுக்கிய மீசையும் உடையவன். மயக்கமும் கொடிய பாவமும் வஞ்சகமும் பொய்யும் ஒருருக்கொண்டாற்போன்றவன். கொடியவூன்புசித்தற்குச் சரீரத்திலுங் கையிலும் காலிலும் பறகள் மொய்த்தாற்போலும் சோகி புனைந்தவன். முயல், மான், ஆண்குரங்கு, கயல், சேல், காட்டுகோழி, பருந்து, குயில் இவைகளை நடை கற்குங் காலத்திலே கொலைசெய்யக் கற்றவன். வாடையினால் மிருகங்களி னடிச்சுவட்டின்வழியே நாயும் நாணும்படி நடக்கும் பெருமையுடையவன். குளிநரிபோலுங் கள்ளமனத்தவன். போரிலே தாக்குதற்குப் புலிபோல்பவன். கோபமில்லாமலே சிவக்குங்கண்ணும் அக்கினிபோலப் பிரகாசிக்குங் குடுமியும் புகைபோல மூச்சுவிடு மூக்கு முடையவன். பாவத்துக்கும் பழிக்கும் பயப்படாதவன். தன்னுடலை

வளர்த்தற்கு மாமிசமுண்டுகளிக்கும் பலவுயிர்களின் மயான மென்னத் தோன்றும் வயிற்றை யுடையவன். வஞ்சமாகிய நஞ்சிருக்கின்ற நெஞ்சையுடையவன். பெருமை யென்பது தெரியாத முழுமூடன். மேகமுந் தென்றலுஞ் சேர்ந்தபொதிகைமலை கொல்லிமலை மயேந்திரமுதலிய இடங்களு அவைகளுக் கப்பாலும்போய் விலங்கு பறவைக ளெல்லாவற்றையுங் காலந்தோறுங் கருவறுத்து வந்தான். பின்னரவ்விடங்களில் வேட்டை கிடையாம லெவ்விடத்தும்போய் வேட்டையாடுதற்கு நினைத்துப் பொதிகை மலையிலுள்ள வேடர்களுக்கெல்லாம் வெளிப்புறப்படும்படி பறை யறைவித்து வெள்ளிக்கிழமை வெறியாட்டாளனை (முருகக்கடவுளாவேசித்து நிற்பவனை) யழைத்து மலைத் தெய்வங்களைப் போற்றித் துள்ளி நடித்து மலைநெல் தினை மூங்கிலரிசி தேன் கிழங்கு இவைகளையள்ளி யள்ளிக் கொடுத்தனன். அவனவைகளை வாங்கிக்கொண்டு போய்ச் சுனையிலே மூழ்கி யெழுந்துவந்து புதுமலர் பெய்து அவிசொரிந்து வணங்கித் தெய்வங்களுக்குப் பலிவைத்த சேடங்களைத் தெய்வங்கள் வரந்தந்த விசேடமுஞ்சொல்லி வழங்குதலும், இதுநல்ல சகுனமென்று வேடராஜன் உடைவாள் கட்டித் தொடுசெருப்புக்காலிற் பூட்டினன். அம்மலைக்குரிய வனவ னுதலாலே பக்கத்திலுள்ள வேடுவர் யாவரும் யானைக் கூட்டங்கள் கரிய மலையைச் சூழ்தல்போல அவனைச்சூழ்ந்து நெருங்க அவ்விடத்து நின்றவர்களுக்கு ளாதியாகிய கிழவ

ஞொருவன் பல ஆந்தை யோசையைக்கேட்டுத் தீங்குதரத்த க்க கெட்ட சகுனமென்று சொல்லினன். மற்றொருவனிது ஆக்கமான சகுனமென்று சொல்லினன். உடனே வலனுகிய வேடராசன் கேடகத்தை யிறுக்கிக் கட்டிப் புலித்தோலா லாண்புலிபோலவும் சர்ப்பத்தின்றோல்களைவரிந்து வலிய பே ய்போலவும் உடைவாளையசைத்து இடும்பனைப்போலவும் கர டித்தோற்சட்டைபுனைந்து,கார்மேகம்போலவுநின்றான். வளை தடியை யேந்திய வேடர் வளைந்த கொம்புடைய யானைபோ லப் பக்கத்திலே வரத் தடிக்கம்பு தாங்கிய வேடர் பருத்த மருப்புடைய மான்போல முன்னே நடக்க வில்லேந்திய வே டர்கள் மலையாட்டுக் குலத்தை நிகர்த்துவர அவர்களுக்கு நடுவே யொருசிங்கம் போல வேடராசன் புறப்பட்டுச் சன முழக்கங் கடல்போல முழங்க, வெற்றியைத்தரும் வாளாயு தங்கள் மகரமீன் வரிசையை யொப்ப, எழுந்த தூளியானது போய்ச் சூரியனை மறைப்ப அப்போது தோன்றிய விருளை மன்மதன் யானையாமெனத் திகைப்ப வெளியே வந்தனன்.

வேடர்களும் காட்டிலே சஞ்சரிப்பவரும் கள்விற்பவரும் ஊன் விற்பவருந் தோல் வினையாளருங் குறவரும், தளிர் இலை யோலை பாளைகளை வஸ்திரமாகக் கட்டியவராய் வல்லயம் (ஓராயுதம்) தாங்கி விருக்ஷக் கூட்டம் போல அணுகினர். கொடிபிடிக்கக் குழல் கொம்பு குறிஞ்சி நிலப்பறையாகிய இவைகளொலிக்க நாய்கள் செடிகளைச் சுற்றி வாடை தெரி

ந்து செல்ல, அவைகளின் பின்னே வேடர்கள் தொடரச்செ ன்று மலையுஞ் சிறுதூறுகளும், மலைப்பக்கமும், பிரப்பங்கா டுஞ், சிறுகுன்றும், ஆறும்,மலையின்சிகரமும், அதைச்சேர்ந்த இடமும் நின்றும் ஓடியு மிருகங்களைத் தேடினர். சிற்சிலர் மிருகங்களைக் காடுமுழுதுங்கலைப்பர். பக்கத்திலே வலைகட்டு வர். *ஒடியெறிவர் ஊதுகொம்புகளைப் பிடித்தூதி நிற்பர். சிற்சிலர் புலியைப்பாய்வர். யானைக்கொம்பு சாயும்படி குத்து வர். வரையாட்டுடன் பாய்வர். பாறையிற் பாய்வர். பன்றி யுடன் பாய்வர். முயலைத் தடைசெய்தோடுவர். ஆமை, கீரி யணில் கவுதாரி காடை யுடும்பு புல்வாய் மான்களைக்கலைத்துச் சென்ற திக்கெல்லாம் பலத்தவேடர்கள் இங்ஙனம் வேட்டை யாடுமிடத்தில், நீலநிறந்தங்கிய வொருமலையைச்சரற்காலமே கம் வளைந்தாற்போலக் காட்டுப் பாம்பொன்று ஒருமும்மத மொழுகும் யானையை வளைத்துச்சுற்ற, அந்தயானை ஓலமிட் டலறலும். கஜேந்திர னென்னும் யானை மூலமென்றழைக்கத் திருமால் வந்தது போல வலணுகிய வேடன் வந்தனன். ஆங் கு முற்பட்டு வந்த எல்லாரையும் அப்பாம்பானது வாயினால் விழுங்கியது. உடனே வலன் திருமால் சக்கரத்தால் முதலை யைக் கொன்றதுபோல வாளாயுதத்தால் பாம்பைத் துண்ட மாக்கி யானையை விடுவித்தனன். பாண்டியனிட்டதளை விடு பட்டயானை போலப் பாம்பி னுபாதியினின்று நீங்கி யானை

---

* ஒடியெறிதல் - பட்டமரஞ்செடிகளைவெட்டித்தீக்கொளுத்தல்.

வேடர்களை யெல்லாஞ் சிதறி விரட்டி விடந்தீர்த்த விடவயித்தியனைக் கொல்ல வந்த புலியைப்போல வலனைத் தாக்கலும், வலனெதிர்த்துப் போர் செய்யத் தொடங்கினன். அதுகண்டு சேனையாக வந்த வேடரெல்லாரும் பயந்தோடிப் போயினார். அரசனைக் கைவிட்டோடுஞ் சேனையல்லாமல் அரசனுக்கு வேறு பகைவேண்டுமோ? வலன்றிடமாக நின்று பாணமழைகளைப் பொழிதலும், அதனால் வேனிற்கால வெப்பம் போனாற்போல யானை யஞ்சி யோடி யொளித்தது. வலனும் வில்லே துணையாகத் தானொருத்தனாகி நின்று தூரஞ்சென்ற வேடரைத் தேடுதலும், ஒருவருங்காணப்பட்டாரில்லை. ஆதலா லுணவில்லாம லொருபகற்காலம் வாடிப் பறவை மிருகங்களைக் கண்டு பாணமில்லாமற் பல்லைக் கடித்துக் கொண்டு காடெங்குமோடி யுழன்று திரியும்போது, கரிய முயலொன்றெதிர் வரக்கண்டு, வில்லைக் குறுந்தடியாக்கி அம்முயலை யடித்து அதனை வேக வைப்பதற்கு நெருப்புத் தேடிக்காணமல் மரக்கொம்பு தேடி, யக்கினியைக் கடைந்து வெளியே வரச்செய்யும் வேளையில், வெண்ணெய் திரளும்போது தாளியுடைந்ததுபோல முயல் மாமிசத்தை யொரு நரிகவ்வித்தாவிச்சென்று நாவன் மரச் சோலைகளும் மலைகளும் புற்களையுடைய ஓடைகளுங் கடந்து, சிவபிரானெழுந்தருளியிருக்குந் திரிகூட மலையைச் சார்ந்தது. இங்ஙனம் நரியோட அதன்பின் வலனுமோடிச் சனனக் கடலைக்கடக்க ஒரு ஓடமேறுதல் போல்

உயர்ந்த கதி கூடுதற்கு ஓர் வழிகூடிச் செல்வானாகித் திரிகூட மலையைச்சேர்ந்தனன்.

மேற்கூறிய மாமிசத்தை வேறு வைத்தபின் வினையானது தன்னைவிட்டுப் பிரிந்தவனுமென்று சொல்லத் தனித்த வலன் அவ்வினை நீங்கியபின் சம்புவை (சிவனை) த்தொடர்ந்து செல்லு மெய்யை யுடையவனைப்போல, விரைந்து மாமிசத்தைக் கவர்ந்தேகிய சம்புவை (நரியை) த் தொடர்ந்தானாகி யூரை நோக்கான் மிக்க பசியை நினையான் உடலின்றளர்ச்சியைக் கருதான் தைத்தமுள்ளையுங் கடித்த பாம்பையும் பாரான் பார்தத பார்வைபிழையாதவனாய்ப் பூர்வஸ்திதியை யுள்ளே யாய்ந்து பார்க்கும் யோகியை நிகர்த்தான். புள்ளிகளையுடைய பாம்பின் வாய்ப்படு மதயானையின் பொருட்டுக் கையிலுள்ள ஆயுதங்களெல்லாம்போய் நரியின் வாயிலுள்ள வூனைத்தன் கைவசப் படுத்தவும், வலியின்றி வலன் வருந்துவான். தனக்குப்பெரிய கூகையைக் காகமும் பகலில் வெல்லுமன்றோ? உயர்ந்த காடெல்லாந் தேடியுமோடியுந் தவித்துங் கவ்விய வூனை நரியும் வாய்விட்டிலது. கைகால் சிவந்து சரீரம் புலர்ந்தும் வேடனு மதைவிட்டுத் திரும்பான். ஆதலால் ஊன்பொருட்டு யுயிரையு முலகத்தார் மதிக்கமாட்டார். நரியைத் தொடர்வன் எட்டுவன் வாடுவன் துடிப்பன் படபடத்துடல் சோருவன் தீப்பொறி பறக்கப் பார்ப்பன் குடல் கொதிப்பதும் பார்க்கிலன் நரிமேற் கோபங்கொள்வன், வெற்

றி குறித்தபின் வீரர் தமதிடர்களைப் பார்ப்பாரோ? முன்னம் பகைவர் செலுத்துங் கப்பத்தின்மேற் கப்பங்கொள்ளும் வீர னாகிய வலன் பின்பு சேனையையும்விட் டானையும்விட்டு நரிபின் றிரிவான். எவர்க்கு மின்பமெய்துநா ளின்பத்துமே லின்பமு ண்டாகுந் துன்பமெய்துநாள் துன்பத்தின்மேற் றுன்பமே தொடரும். விரைந்து சம்புவை(நரியை)த்தொடர்தலால் அழ கிய திரிகூடமலையையும் வடவருவித் தீர்த்தத்தையுஞ் சித்தி ராநதியையுங்கண்டு பிறவிக்கடற்கரையைக் காணும்வேடன் பெரிய நந்தியா வர்த்தமலர்களையுடைய நந்தனவனம் புகுந்து தேவர்கள் வலஞ்செய்யுஞ் சண்பகாரணியத்திற் றாவி வலம் புரிச்சங்கத்துடன் சித்திராநதி சூழ்வருகின்ற சங்கவீதியை வலஞ்சுற்றி நரியோட அதன்பின்னே யோடினன். அவன் வினை சுழன்றோடத் திரிகூடமலையின் வளருந் திருக்குறும்ப லா ஈசராலயத்தைச் சூழ்ந்து வருதலினால் தன்னை வருத் தும் பசியும் பகையுமொழிந்தன. தளர்ச்சி செய்யுங் கொடிய வினையை நீங்கியதுபோல நரியைவிட்டு நீங்கித் தனதிருப்பி டத்துக்குப் போய்ச் சௌக்கியமுற்றிருந்தனன். நரியு மங்ங னமே தன்னிருப்பிடம் போயிருந்தது. முடிவிலே மகாதவ சிகளும் வணங்க விமானத்தின்மேலேறிச்சென்று திருக்கயி லாசமலையிலே வலனாகிய வேடன் சிவபிரான் றிருவருளாற் சிவகணத்துளொருவனாகி யிருந்தான். நரியுமவ்வாறுசென்று, கிங்கரன் (பணிவிடைசெய்வோன்) ஆகியிருந்து விளங்கியது.

சிவபிரான் சங்கவீதியை வலம்வந்த காரணத்தால் வேடனு நரியுஞ் சிவகதியடைந்த மான்மியஞ்சொன்னேன். இனி நைமிசாரணிய வாசிகளுக்குச் சூதமுனிவர் சொல்லும் யானை பூசித்த மான்மியத்தைச் சொல்லுவேன்.

பதினன்காவது வேடன்வலம்வந்த சருக்கம் முற்றிற்று.

---

## பதினைந்தாவது
## யானைபூசித்தசருக்கம்.

சிவபிரானைக் குருலிங்க சங்கமமாகிய மூன்றுவடிவிலே யெட்டுவகைப்பத்தியுடன் நித்தியம் நைமித்தியம் காமியமாகிய மூன்று பிரிவாக ஆகமவிதிப்படி பஞ்சசுத்தியால் மந்திரத்தால் நீரால் மலர் முதலியவற்றாற் செய்வதாகிய பூசை: கிரியை பூசையாகும். அந்தமார்க்கத்தை யறியாத யானையொன்று சந்திரசேகரராகிய நன்னகரி லெழுந்தருளியிருக்கும் எம்பெருமானை யொருதினம்வந்து பூசைசெய்து நல்ல மோக்ஷத்தை யடைந்த மான்மியத்தைக் கேட்பவ ருயர்ந்த சிவகதியைச்சேருவர். அருமையாகிய பெட்டை மயில்கள் கண்டு களிக்க, மகிழு மாண் மயில்களாடுங் கார்காலமும், இளமைதங்கிய நாரைப் பறவையின் பேடுகள் தங்கள்சேவல் (ஆண்) கள் ஊடுதலின் பொருட்டுத் தாங்களூடல்செய்யு மிக்க குளிர்காலமும், மிகுந்த இருளி லிடைவிடாம லன்றிற் பறவைகளொன்றோடொன்று கூடும் பனிக்காலமும், தாமரைமலர்

முகங்களை வாடச்செய்யும் பின்பனிக்காலமும், வண்டுகளி சைபாடத் தங்குகின்ற இளவேனிற்காலமு நீங்கச் சூரியகிர ணங்களாகிய வெய்ய வாளாயுதங்களை வீசிக்கொண்டெழுந் தது முதுவேனிற்காலம். பூமியும் அண்டங்களுஞ் செல்லு கின்ற சூரிய கிரணஞ் சுடுதலாற் சமுத்திரசலமும் வேறொரு குளிர்ந்த சலத்தையிச்சித்து நின்றேங்கும். பரிவேடஞ்சூழ் ந்த குளிர்ந்த சந்திரனும் வேறொருசந்திரனை விரும்பி மனமு ருகும். மேகமும் வேறொருமேகத்தைவிரும்பி யுடல் வெளு ப்படையும். சமுத்திர நீர் சூழ்ந்திருந்தும், வெள்ளி விழுது போல மேக மழை பெய்யாமையால் வெதும்பிக், கள்ளிமரம் பால்வற்றப் பொரிந்தது. ஆவிரையுங்கரிந்தது. கொடையா ளிகள் கொடையை மறந்திடிற் கீழ்மக்களோ? வழங்குந் தன் மை யுடையராவர். வருந்துகின்றகாட்டிலும் வானிலும் வெ ப்பம் பொறுமற் பருந்துகள் சுழல்வன. அப்பருந்தி னீழலி லே யொதுங்குவன படங்களையுடைய பாம்புகள். அப்பாம்பு கள் படமெடுத்தநீழலிலே மறைவன எலிகள். பொரிந்தகாட் டுத்தீயைத் தளிரென்று நினைத்துப்புகுவன மானினங்கள். நடுமத்தியானம் போன்று இரவினுஞ் சுடுகின்ற கோடைநடு ப்பகலிலே பலவுயிர்களைச்சுடாது விடுமோ? மதமொழுகும் அத்தி தோல் தூங்கலென்னும் யானைகள் அத்தியாய் (எலும் பாய்) தோலாய்(உரித்ததோலாய்)த்தூங்கலாய்(சோர்வுடைய னவாய்) நின்றன. இத்தன்மையான கொடிய முதுவேனிற்

காலத்திற் பச்சிலையு மிரையாகக்கிடையாமல் வருந்திப் பாம்புகளைப்போலக் காற்றையுண்டு பழகி நெருங்கிய சலமென்று ஆகாயத்தி லலைகின்ற கானலைத்தொடர்ந்து சென்று மான் கன்றுபோல வொரு மதயானை சுழன்று திரிந்தது.

செல்லுந்திசையெல்லாஞ் சுடுவதாகிப் புனல்போலத் தோற்றி யானை தொடரத் தொடரத் தூரத்திற் போய்த் தொலைந்துபோகுங் கானல், மகாமேருவை வில்லாகவுடைய வரதனைப்பொருளென்று மதியாது விரோதிக்கும் பொய்த் தேவர்களை மெய்யென்றுநினைக்குஞ் சமயத்தை யொத்திருந்தது. தாமரைத்தடாகங்களும் நதிகளும் வற்றி யுலகத்திற் பல பல சோலைகளும் வாடியகாலத்தும் குளிர்ந்த பயிராகிக் கற்பகப் பூஞ்சோலையைப் போன்று கற்பகாலங்களினுங் கெடாமலிருந்தது செண்பகாரணியமானது. அந்த ஆரணியமும், காட்டுக்கோழிகள் பெட்டையுடனே சேரும் பாறையுஞ், சூல்கொண்ட சங்கங்களுலாவுந் தடாகமுங், குளிர்ந்தமலைச் சோலைகளும், தெய்வப்பெண்கள் நிறைந்த திரிகூடமலையுமதிசயமுண்டாக மேற்கூறிய யானைகண்டு, நெருங்க நெருங்கச் சுடுங் கடுவெயிற்காட்டைக்கடந்து செண்பகப்பூஞ்சோலையில் வருதலும், சூக்குமதேகத்தை யடைந்து தூலதேகமாகிய சுமையை விடுத்த உயிர்போலச் சிரமசாந்தி செய்தது. அதன்மேல் வந்தியராகிய பாணபத்திரர் மதுராநகரத்துச்சோமசுந்தரப்பெருமான் திருமுகத்தைக் கொடுத்துச் சேரமான்

பெருமாள் நாயனார் பொன்மாளிகையிற் புகுந்ததுபோல அச் சோலையினூடுபுகுந்து, வாழைப்பழக்குலைகளை மற்றொரு யானையின் றலையைப்போலத் திருகியுணவாக விழுங்கி மாம்பழங் களைப்பறித்துண்டு திரவியம் வைத்திருக்கின்ற பெட்டியைத் திறந்தாற்போலப் பலாக்கனிச்சுளைகளைப் பிதிர்த்துத் தென் னம்பழங்களையுடைத்து அவைகளின் சாற்றோடு கலந்துபுசி த்து மார்பிலே மத முவட்டெடுத் தொழுக வயிற்றைநிறை த்துத் தாகங்கொண்டு தண்ணீருக்குப் பரிதபித்து வருதலு ம், திரிகூடமலையிலே யாகாயகங்கை வருதல்போல வரும்வட வருவியானது தவத்தோர்களுக்கு வேண்டிய போகத்தைக் கொடுக்கும் யோகம்போலிருந்தது. புகைபோல மேகஞ்செல் லு மந்தமலையிலே யிரத்நங்களைத் தீபம்போலக் கொழித்து விளங்காநின்ற அவ்வருவியைக்கண்டு யானை, தாகம்போய்த் துயரந்தீர்ந்தது, அவ்வருவியின் மூழ்கிய தவசிகள் பாவம் போய்விடச்சனனத் துயரகனறதுபோலும். நீரெல்லாமுண் ணுகின்ற ஆசையாலே துதிக்கையான் முகந்துண்டு வெப்ப மெல்லா நீங்க ஸ்நானஞ்செய்து முதுகெல்லாம் கையாலள்ளி வீசி யிடமெல்லாம் புகும்படி வட்டமிட்டிறைத்தது, உவமை யில்லாத இராகு சந்திரனை யுண்டு கக்கியதையொத்திருக்கும், பெரிய ஆகாயத்தின்கண்ணே யிந்திரன் வச்சிராயுதத்தைத் தாங்க அதுகண்டு பயந்த வொரு மைநாகமலை போலச் சலத் திலேபடிந்து சிரமசாந்திசெய்து மேலெழுந்து நீண்ட பனை

போலுங் கையை மேலே தூக்கியது. அக்கையைக் கரியஇரா குவென்று பெரியசந்திரனைப்பற்ற அறிவுகலங்கியது. பின்னு மந்தயானை சங்கத்தையெடுத்து நீரைமொண்டு வீசலும் அந்நீர்த்தாரை யேழுமேகங்களும் எட்டுத்திக்கிலே பொழியு மழைத்தாரைபோன்றிருந்தது. துதிக்கையினாலே நீரை யள்ளி யள்ளித் தனதுடலிலே சொரிய வொழுகுந்தாரை மந்தர மலையிலே விழும் அருவியைப்போலிருந்தது. அருவி வெள்ளத்திலே துதிக்கையினாலே யள்ளி வீசுமலைபடு மிரத்நங்கள் கிடந்துபிரகாசிப்பன நமிநந்திநாயனார் தண்ணீரிலே விளக்கெரித்ததுபோலுமிருந்தன. சோர்ந்து நின்ற அந்தயானை நீர்த்துறையிலே வீழ்ந்து துயர நீங்கி மலைபோல மதர்த்தெழுந்தது, கிழவுருவாகிய *திருநீலகண்டநாயனார் திருப்புலீச்சரத்துக்கு முன்னிருக்கிற திருக்குளத்திலே மூழ்கி யிளமைபெற்றெழுந்ததுபோ லிருந்தது. குளிர்ந்த விசாலமாகிய வடவருவியிலே யிவ்வாறு மூழ்கியகன்ற யானை சோலையினுட் சொரிந்த பூந்தாதிலே புரண்டு விளையாடித் தளிர் பூ தழை பலவற்றையுஞ் சிதறிக் கனிகளையு மிகவுதிரச்செய்தது.

நெருங்கிய பலாபலமறியாத அந்த யானை சொரிந்த நீர் தளிர் தழை மலர் கனியெல்லாம் நதித்துறையினிடத்தி லுயிர்க்குபிராய் நிறைந்த குறும்பலா ஈசரது பக்கத்திற் சேர்ந்து நிறைந்தன. இவைகள் அவருக்குக் கண்ணப்பநாயனார் வாயி

---

* இச்சரிதம் பெரியபுராணத்துட் காண்க.

றுலுமிழ்ந்த சலமு மவர்தலையாலுகுக்கும் தளிர் தழை பூவு
ம் அவர் கனிவாயின் மென்ற அமிழ்தமாகிய அவிகளும்போ
லிருந்தன. பூருவபுண்ணியமோ? செண்பகாடவியைச்சேர்ந்
த தருமமோ? வடவருவியிலே மூழ்கிய மா தவமோ? குறும்
பலா ஈசர்க்கு அந்தயானை செலுத்திய வெல்லா மற்புதமாயி
ருந்தன. யானையுண்டு வீசிய புனலபிடேகமாகும். பனைபோ
ன்ற கையாலுதிர்த்த சருகு இலை யருச்சனையாகும். பக்கத்தி
ற்சொரிந்த காய்கனிகள் நிவேதனமாகும். பிரம விஷ்ணுக்க
ள் பத்திசெய்கின்ற சிவபிரான் பூசையாமிச்செய்கை. இரண்
டு கையினுலெடுத்த திருமஞ்சனமேனு மொருகையாலெடுத்
துண்ணு நீராயினும் பச்சிலை புல் சருகாகிலு நன்னகரத்துச்
சிவபிரான் பாதத்திலே சாத்தி யொருமையடையாதவர் பே
தைமையை யானென்னென்றெடுத்துச்சொல்வேன். மேற்கூ
றிய யானை செண்பகக்காவிலே வைகியநாளில் பவள மரக்கா
லாலே முத்தளப்பார்பயிலும் பாண்டிநாடெங்கும் வெப்பஞ்
செய்த கோடை.. திரிகூடமலையைச் சேர்ந்தவர்க்குக் கொடிய
வினை தொலைந்தாற்போலத் தொலைந்தது. அந்தச்சமயஞ்சிவ
பிரான் றிருவருள்போலமேக மழை சுரந்து மாதமும்மாரி
பொழியத் துறைதோறும் பொன்னு மணியுங் கொழிப்ப
வளமிகுந்தது. யானையுந் தனதிருப்பிடம்போய்ச்சேர்ந்திருந்
தது. திரிகூடமலைச் சிவபிரான் சிவபணிசெய்கின்ற மெய்
யடியாருலகத்திற் றழைத்தோங்கிப் பிரம விஷ்ணுக்க ளறிய

ப்படாத சிவபதமே சேர்வரென்று விரித்துச்சொல்லும் வேதவாக்கியத்துக்குச் சான்றாக யானை தன்னிருப்பிடத்தில் வேண்டியபோகங்களை யநுபவித்திருந்து முடிவிலே பூமியை விட்டு மேற்செல்லுமிறுதிநாளில் யமதூதுவர் யானைக்குச்சமீபமாகநெருங்கி வருதலுஞ், சிவகணங்க ளெதிரேவந்து தடுத்தனர். யமதூதர் அற்ப அறிவுடைய கொலை விலங்காகிய யானை செய்த தருமம் யாதென்றுகேட்கச் சிவகணத்தார்சொல்லுவார். குரங்குகள் சூரியனைச் சிவந்தபழமென்று தாவுநெடிய வளங்களையுடைய குறும்பலாவீசரைப் பூசனைசெய்து பாதக நிவிர்த்திசெய்த திந்தயானை யென்றனர்.

அன்பாலறிந்து செய்யும் பூசனைக்கோ விளையாட்டுக்குச்செய்யு மருச்சனைக்கோ நற்பேறுகிடைப்பதென்று கேட்கும் யமதூதர்க்குப் பின்னுஞ் சிவகணத்தவர் சொல்லுவார். 'கற்புயர்ந்த வுமாதேவியார் திருவடிமகிமையைத் தெரிந்தோ தழைசொரிந்து முசுகுந்த னருச்சனைசெய்து முற்காலத்திற் பேறுபெற்றுயர்ந்தான். யாவராயினும் அறிந்தாயினும் அறியாமலாயினுஞ் செய்கின்ற பூசைக்குக் கங்கையைத்தாங்கிய சடையுடையார் திருவருளே கதியைக்காட்டா நிற்கு" மென்றனர். அவர் முன்னே சாட்சியாகப் பாவக்கடல் கடத்துந் தோணியா யொரு புட்பக விமானம் வந்தது. அதைக்கண்டு யமதூதரோடி யகன்றனர். சிவகணத்தவ ரவ்விமானத்திலே யானையை யேற்றுதலும், பரிசனவேதி சேர்ந்த இரும்பைப்

போலக் கரியுருவ நீங்கிச் சொர்னவுருவம்பெற்றுப் போய்த் திருக்கயிலாயமலையிற் சிவபிரானைத் தெரிசித்துச் சேவித்து நின்று திருவடிக்கீழ் விழுந்து யானைபணிதலும், அவ்வெம்பிரான் யானையைக் கடைக்கண் பார்வைசெய்து "திரிகூடத்திலே நம்மை நீ பூசித்தமையாற் கெசகருணனென்னு நாமம் பெற்று நந்திகணத்தினு முயர்ந்து நமது வாயிலிற் பணிசெய்வோர்க்குத் தலைவனாகி வாழ்வா" யென்று வரங்கொடுத்தருளினர். பழவினை நீங்கிப் பூசைப்பலன் வாய்ப்ப விலங்குருவம் தேவவுருவமாகி யெவ்வுயிர்க்குங் கைகொடுத்துக் காக்குங் கடவுளாகிய சிவபிரானெழுந்தருளும்போது அவருக்குக்கை கொடுக்கும் பணிவிடையிற் கெசகருணனிருந்தனன். திரிகூடமலை மகிமையை யாவர்சொல்ல வல்லவர். நினைத்துச்செய்யாத நரி வேடன் சென்றதே வலப்பிரதக்கணமாகவும் யானை செய்த விளையாட்டே பூசையாகவு மிருந்தா லிந்திரனுமேத் துதற்கரிய திரிகூடத்தெம்பெருமானைப் புத்தியினு லறிந்து பூசிப்பார் பெறும்பே றெளியதோ? இத்தன்மையான யானை பூசித்த கதையைச் சொல்லுதலும் நைமிசாரணிய ருஷிகள் வணங்கி "யுமாதேவி யிமயமலையிற் றிருவவதாரஞ் செய்ததும், அவள் திருமணக்கோலமுஞ் சொல்லி யருளு" கென்று கேட்கச் சூதமுனிவர் சொல்வாராயினர்.

பதினைந்தாவது யானை பூசித்த சருக்கம் முற்றிற்று.

முதலாவது தானவைபவகாண்டம் முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்,



உ

திருச்சிற்றம்பலம்.

இரண்டாவது

# சிவரகசிய காண்டம்.



## முதலாவது
## உமை திருவவதாரச் சருக்கம்.



இமயமலையானது ஆன்மாக்கள் சுவர்க்காதி போகத்தை யநுபவித்து மிஞ்சிய போகத்தை யநுபவிக்கும் போகபூமியின் முடிவிடமும், தருமமாகிய பயிரை வளர்க்குமுலகத்துக்கு வேலியும், தவசிகள் தவத்தின் விளைவும், பனியினதாலயமுந், திரிலோகத்துக்காணியும், தேவரு, மாகாயகங்கையும், புண்ணியமு, மரசிருக்குமண்டபமுமாகும். அன்றியும் பூமிதேவிக்குக் கிரீடமுங், களபமணிந்த கொங்கையும், அவள் மேகலையாகச் சூழ்ந்த சமுத்திரம் வரம்புகடவாத வேலியுமாகும். இத்தகையவாகிச் சூரியனையும் பனியாற் குளிர்ந்த சந்திரனாகச்செய்யும். பொன்மலிதலாற் பிரமனாசனமாகிய தாமரைக்கொட்டையினையும்,தழையால் நிறைந்த சோலைநெருங்கி நாலுதிக்கினு நிறைதலாற் றிருமால் கண்வளரும் பசிய ஆல

மரத்தையும், சந்திரகிரணம்போலும் பனிநீர்நிறைதலாற்சிவ பெருமான் வெள்ளியங்கிரியினையும், இன்னும்ஆலோசித்தால் இலக்குமி பார்வதி சரசுவதியையும்போல விளங்காநிற்கும். அம்மலையினின்று பாறையிலே குதிக்கும் வெள்ளருவியினைச் சிங்கமென்று யானைகள் பயப்படும். மூன்றாம்பிறைச் சந்திரனோடு கூடிய மேகம் பொதிந்த அம்மலையைச் சரபம் (எண்காற் பறவை) என்று நினைத்துச் சிங்கம் மலைக்குகையிற் புகுந்தொளிக்கும். பாணந்தோற்கின்ற கண்ணினரா யெந்தப் பெண்கள் வந்தாலுமவரைத் தேவரம்பையர் பணியப்படுவதாகிய அம்மலைச் சிறுகுடிவாழ்க்கைப் பிள்ளைகளுக்குத்தேவர்கள் கற்பகக்கனிகளைக்கொடுத்து அம்மலையிலுள்ள வாழையின் பழங்களைக்கொள்ளுவர். மந்தர மத்திமதாரமென்னு மிசையை வண்டுகள் பாடுஞ்சமயத்தில் ஆகாயத்தின்கண் அசுணப்பறவைகள் சுழலாநிற்கும். வானவர் தங்குமிடமாகிய மலைகளை யெண்ணுவோர், சிகரத்தையுடைய இமயம் மந்தரமென்று சொல்லுதலால் முதன்மையானமலை யிமயமலையேயாகும். மேருமந்தரம் நிடதம் ஆகிய மலைகளிலுள்ளவரும் பூமி திசை பாதலங்களிலுள்ளவரும் வானுலகிலுள்ளவரும் இன்னும் யாருந்தவத்தாலடையும் பெரியமலையுமிதுவே. நடுங்கும்படி பொழியாநின்ற பனிமிகுதியினாலே யம்மலையின் கொடிய புலிக்குகையினிடத்து மான்களொடுங்கி நிற்கும். யானையுஞ் சிங்கமுமோரிடத்திலிருக்கும். பாம்புகள் மயிலின்

விரித்த சிறையினிழலிலே யடங்கும். இன்னும் பனியினது குளிர்ச்சியினாலே யுலகமெல்லாஞ் சுடுங் கிரணங்களையுடைய சூரியனிரதத்திலே கட்டிய குதிரை பச்சைநிறமடைந்தது. பூரணசந்திரனுடலந்தேய்வது மந்தப்பனியின் கொடுமையினாலேதான். அந்த விசாலமாகிய மலையின் தென்றிசையைச் சேர்ந்த சூரியன் வடதிசையினுஞ் செல்வது பனியின் குளிர்ச்சி தாங்கமாட்டாமல் வடக்கேயுள்ளவடவாமுகாக்கினியால் சரீரத்தைச் சூடேற்றிக்கொள்ளுதற்குப்போலும். அம்மலையெடுத்து வீசாநின்ற பனித்திவலைகள் கற்பக விருக்ஷத்திற் படர்ந்த வல்லிக்கொடியிற் போய் வரிசையாகத்தூங்கி அம்மலையின் வேடப்பெண்கள் தாலிக்கயிற்றிற் கோத்த முத்துக்களைப்போல விளங்கின. தேவப்பெண்கள் தம்மை நீங்குதலாற் றேவர்கள் அவர்கள் மூங்கில்போலுந் தோள்களைப் பிரிந்துவருந்தி யம்மலையினுச்சியிற் றவஞ்செய்து அவரைக் கூடுதலாலத்தேவர்களம்மலையைத் துதி செய்யாநிற்பர்.

அந்த இமயமலைக் கரசனானவன் தன் மனைவி மேனையென்பவளிடத்திலே மைநாகனென்னும் புத்திரனைப் பெற்றுப் பின்பு ஒரு பெண்மகவை விரும்பி நெடுங்காலந் தவஞ்செய்து திருமாலொரு கண்ணைப்பிடுங்கி யர்ச்சித்த சிவபிரான் றிருவடியை யன்புற நோக்கி விரதமுற்றியபோது தவப்பயன் வந்து கைகூடுதலும், அவ்வெற்பரசன் செய்த தவமோ? மண்ணுலகமும் விண்ணுலகமும் முற்காலத்திற் செய்த தவ-

மோ? அவ்விமயமலையினொரு சுனையிற் பூத்த தாமரை மலரின்மேலே யெல்லாவுலகமும் பெற்ற மாதாவைப் பிள்ளையாகத் தந்தது. அப்பிள்ளையைப் பார்த்தற்கு அரசன் ஆயிரங்கண்ணோ எண்ணிறந்த கண்ணோ அந்நாளிலடைந்தனன். பூரண சந்திரனைக் கண்ட சமுத்திரம்போல மகிழ்ந்து பிள்ளையை யெடுத்து இலக்குமியைப் பெற்ற சமுத்திரத்தையொத்துக் கண்ணார நோக்கித் தன்னுடைய மனைவி மேனைகையிலே கொடுத்தனன். அவளும் வாங்கிப் பெருவாழ்வு பெற்று மகிழ்ந்தோங்கினள். அவள் களபமணிந்த கொங்கைகள் பால் சுரந்தன. ஆகாயமெல்லாங் குரவையோசையும் பல வாத்தியவோசையுமெழுந்தன. மேனை ஆசைமிகப்பிள்ளையை யெடுத்து மார்பிலணைத்து உச்சிமோந்து பார்த்தலும், பச்சை நரம்போடிப் பால் கனகவள்ளம்போலுந் தனங்களினின்று வெளிவந்து பவளக்கிண்ணம்போலுங் குழந்தைவாயிலே பாய்ந்தது. புவனகோடிகளைப் போக்குவரவென்னு மூசலினிட்டாட்டும் உமாதேவியாகிய பிள்ளையைத் தேவதச்சன் செய்ததாகிய வொரு சொர்னமணிப் பூந்தொட்டிலினிட்டு மேனையாட்டினாள். அதன் பின் சிலம்பு தண்டை பாதசரங்களொலிப்பதாகிய பாதங்கள் நோமென வேனைய ஆபரணம் புலம்பவுங்கொடிய அசுரரிருப்பிடங்கள் வருந்தவும் பூமியிற் றவழ்ந்து, தன்னிறைவர் கொடுத்த இரண்டுபடி நெல்லாற் முன்முன்னஞ் செய்த தருமம்போலவும் கருணையுடைய மனத்தின்

கணுள்ள பொறுமைபோலவுங் குழந்தையானவள் நாளுக்கு நாள் வளர்ந்து வந்தனள். அதன்மேல் தேவலோகத் தன்னமும் பூலோகத்துப் பெண்யானையுங் கண்டு வெட்கமுறத், தானமுந் தருமமுந் தவமுஞ் சைவமும் ஞானமும் நடைபெற்று விளங்க நடைகற்றனள். அதன்பின் எல்லா அண்டங்களையுஞ் சிறுவீடாக்கி விளையாடுந்தான் எல்லாவற்றிலு மமைவதாகிய சம்பந்தங்காட்டுதற்கோ சிறுவீடுகட்டி விளையாடினள். அப்பால் எல்லாவற்றையும் படைத்துக் காத்தழிக்குஞ் செயலைத் தன் கணவருக்குப் பயிற்றுந் தன் செய்கையை நினைத்துப் பாவை கழங்கு பந்து கிளி பூவையும் வைத்து விளையாடிப் பயின்றாளில்லை.

உடனே பேதைப்பருவம் வரலுங் கொன்றைமாலையணிந்த குழகராகிய சிவபிரானை யாசையாலடைய விரதங்கொண்டு தன்றாயாகிய மேனைக்குச் சொல்லுதலும், அவள் தன்னாயகனுக்குத் தெரிவிக்க, அவனதுகேட்டுக் குழந்தையை நோக்கி அழகுக் கிருப்பிடம்போல்வா "யுன்னுடைய குழந்தைப்பருவத்துக்குத் தவஞ்செய்தல் கூடுமோ" என்றனன். பிள்ளையாகிய பார்வதிகேட்டுச் சொல்லுவாள். "மூன்று கண்களையுடைய சிவபிரானை நினைப்பவர்க்கெல்லாங் கூடு" மென்றனள். இமயவரசனப்பொழுதே பசும் பொன்னாலொரு பன்னசாலை செய்வித்தனன். அதைப்பார்த்து மலைகளுக்கெல்லாந் திலகம்போன்ற இமயமலையரசன் பெற்ற மகளாகிய தாயான

வள் இளமைப் பிராயத்திலிருந்து மலர்கொய்யாள். பந்தாடா
ள். சுனைமூழ்கி விளையாடாள். பெண்கள் கூட்டத்திற்கூடாள்.
தன் குலமெல்லா மகிழ்ச்சியடைய உலகமுழுவதும் வணங்கு
மொப்பற்ற தலைவராகிய சிவபிரானது தனிமையை நீக்கும்
பொருட்டுத் தவவேடம்பூண்டு தனித்தவளாய்ச் சங்கங் கல
ந்த நீர் தோயும்போது வெண்ணிறமுள்ள சரசுவதிக்குச் சமா
னமாவாள். தாமரை யாசனத்திலிருந்தா லிலக்குமியைப்போ
ல்வாள். சூலபாணியாகிய சிவபிரானை யிடைவிடாது நினைத்த
லாற் கௌரநிறம் (பொன்னிறம்) அடைவாள். தவத்தினுறு
திப்பாடுடைய மனத்தால் மலைப்பெண்ணுமாவாள். தடாகத்
திலே நீராடப் புகுந்தா லன்னத்தைப்போல்வாள். கரையே
றினல் இமயமலைப் பிடியானைபோல்வாள். காட்டினிற்கும்
போது பூங்கொம்புபோல்வாள். யோகநிட்டை யிலிருந்தால்
மலையைப்போல்வாள். அன்றியுஞ் சித்திரத்தையு மொத்தி
ருப்பாள். அங்ஙனமிருந்து பஞ்சேந்திரியங்களையு மொன்று
சேர்த்து அந்தக் கரணம் நான்கையு மவற்றினுள்ளடக்கி
*அந்தக்கரணங்களின் ஷெழில் நான்கையு மனத்துடேயிசை
த்து இருதயத்திலே ஞானமாகிய கண்ணைப்பதித்து அதனல்
விளங்குஞ்சோதியைத் தரிசித்துப் புறக்கண்களை மூடித் தவ
ஞ்செய்து கொண்டிருந்தனள். தவமாகிய பயிரைத் தாய்

---

*அந்தக்கரணங்களின் ஷெழில் நான்காவன. பற்றுதல், நிச்ச
யித்தல், எழுப்புதல், சிந்தித்தல்.

தந்தையாகிய மேனையும் வெற்பரசனுங் கண்டு மகிழத் தேவர்களோடு மற்றவர்கள் வணங்கச் சிவபிரான் திருவுளத்துக் கிசையுமன்பே கொழுகொம்பாக வானுலகம் வரைவளர இமயமலை வல்லிக்கொடிபோலும் பார்வதி வளர்த்தலும், உள்ளே விளங்கிய பேரன்பால் மனமெல்லாநிரம்பி ஞானக்கண்ணி லானந்த வெள்ளம்பரவத் தவப்பெருக்கமுயர்ந்து தெளிந்த சந்திரனைத் தரித்த பெருமானாரது திருவுள்ளத்திற்போய் நிறைந்தது.

தம்மையுடைமையாக வுடைய நாயகியாகிய பார்வதிசெய்யுந் தவத்தினன்பைக் காணும்பொருட்டுத் திருக்கயிலாச மலையினின்றுஞ் சிவகணங்களும் விஷ்ணுமுதலியோர்களுஞ் சூழ்ந்துவர மான்மழுத்தரித்த சிவபிரானிமயமலைச்சாரலிலெழுந்தருளினர். அங்ஙனஞ் சிவப்பிராமணரைப்போலெழுந்து வந்த தலைவரைவணங்கித் தாழ்ந்து துதித்து, ஆசனத்திலிருக்கச்செய்து, கீழ்மேயிமயமலையின் மயில்போல்வாணிற்றலும், அவளைப்பார்த்து "வசானைதங்கிய கூந்தலையுடையாய்! சரீரம் வருந்திபிருக்கிறதென்ன காரண" மென்று எம்பிரான் வினவினர். தோழிப்பெண்கள் அவருக்கு விடைசொல்லுவார். "கயிலாசபதியாகிய வொப்பற்ற பரமபதியை மனத்திலே நினைத்து ஆகார நித்திரையின்றி யமுதம்போன்ற அணங்கு அருந்தவஞ்செய்தன" னென்றார். பெருமான் தவமடந்தையைப் பின்னும் பார்த்துப் "பிடிபோலுநடையும் இளஞ்சந்தி

ரன்போன்ற நெற்றியுங் கொடிபோலு மிடையு முடையாய்! சரீரம், குழைந்த பூங்கொம்புபோல விருந்தாய். சொரூப முமழகும் நிறமும் வாடவருந்தி, நீ தவஞ்செய்தல் கடினை யில் (இரப்போர் பிக்ஷைவாங்கும் பாத்திரத்தில்) பிக்ஷையே ற்று விடத்தையுண்டவனுக்காகவா" வென்றனர். வேதத்த லேவரிவ்வாறு கூறியதைக்கேட்ட மெல்லியல் பேசுவதற்குச் சகியாமலிருக்க, அவளருளால் மற்றெரு தோழி கூறுவாள், "எம்பிரானுனவர் பிரமன் முதலிய தேவர்கள் கருவத்தாற் பிக்ஷையெடுத்தனர். தேவருயிர் பெறும்பொருட்டு விடத் தையுண்டனர்" என்றனள். "கடலைப்பொரும் விசாலமாகிய கண்ணேயுடைய பேதையே! நீ சொல்லுமவ்வரை, யுங்கள் தலேவிவிவாகஞ்செய்தால் அழகிய பொன்னுற் செய்த நகரம் நாடில்லாமல் மலேயிலோ போயிருப்பா" ளென்று வேதியர் சொல்லினர். "கலேகளெல்லாமுணர்ந்த பெரியவரே! கல்வி யின் பெருமை யிதுதானே மலேமகளாகப் பிறந்து மலேயை யிகழுவதென்" னென்று அப்பாங்கி சொல்லினள். "இப்படி யநேககாலமிமையவர் தவங்கள் செய்தார். மைபடிந்த கண் ணேயுடையாய்! ஈசன் வந்திலன். ஒருகால் வருவானே" வெ ன்று வேதியர் சொல்லத், தோழி யங்ஙனமிரக்க மில்லாதவ ரல்லர் அடியவர்க்கெளியவர் அவர் சித்தஞ் சம்மதிபாது போனரேல் உயிரோடிருக்கமாட்டோம். ஆதலால் வேதப் பிராமணரே! நீரிவண் வந்தகாரியஞ் சொல்லிப்போ" மென்

றனள். அதற்கவர் கூறுவார் "பிறைபோல் நெற்றியுங் கருங்கண்ணுஞ் செய்யவாயுமுடைய இப்பெண்ணை வாசனை தங்கிய மாலைசூட்டி மணம் புரிவதற்கு வந்தே" னென்றனர். அதுகேட்டுப் பார்வதி நீலகண்டராகிய தம்பிரான் தன் பொருட்டாற் கொண்டகோலமென்று தெரியாமல் அவர் வார்த்தை வேதவாக்கிய மென்பது முணராதவளாய் மனம்வருந்தியிரண்டு காதுகளையும் பொத்தி நாணி முகத்தைச் சாய்த்து அப்பாற் சென்றனள்.

அங்ஙனம் பார்வதி சென்ற பின் வேறுமோர் விளையாட்டாக நீலகண்டமுங் கங்கைச் சடையு மறைத்துவந்த வேதியரானவர் மறைதலும், பார்வதி பார்த்துத் திகைத்து எங்குந்தேடிக் காணுதவளாய்த் தன்னுயக னென்றறிந்து இரங்கலுற்றனள். உலகத்துக்கெல்லாம் ஒன்ருயும் பலவாயுமுயர்ந்த குணமலையாயுங் கடலாயுங் கொழுத்த கருணையாருயு நன்ருயுமுள்ளவனே! விஷ்ணுதேடுந் திருவடித்தாமரை யின்றடியேன் பொருட்டுச் சிவப்ப வெழுந்துவரக் கடவதோ பொன்னே! மணியே! பொருளே! பொருளுடைய வேதத்தின் முதலே! நடுவே! கெடாத முழுமுதற்கடவுளே! மின்போலத்தோன்றி விண்ணிலே போயொளித்தாய். இதுயாது? அடியேன் செய்த குற்றமோ? மேகமாயழகொழுகுங் கண்டத்தையுடையாய்! உண்ணமுடியாத வமுதமே! யெனது ஆனந்தப்பெருங்கடலே! பிருதுவி முதலாகிய பஞ்சபூதங்களாய் வியாபித்த

மேலானவனே! யென்று புகழ்ந்து நின்று தவப்பூம்பாவை வருந்தி, நீலமலர்போலுங் கண் முத்தரும்பச் சென்று பின்னும் பலதிசையுந் தேடி யலமரும்போது, திருவம்பலத்திலே நடனஞ்செய்யுந் திருவடியுடையார் இடபவாகனத்திலெழுந்தருளிப் பாம்பணிந்த மார்பும் பவளம்போல விரிந்தசடையுஞ் சூரியோதயம்போன்ற திருமேனியு நெற்றிக்கண்ணுமபயவரதமுங்காண்பித்து மலையரசன் மகள் கண்களிப்ப நேரே நின்றனர். நெடுநாள் தவமிருந்து தினந்தோறு மெலிந்த மெலிவு நீங்கக் கயிலாசத்திலிருக்குந் தேனாகிய அமுதத்தைக்கண்ணாலே முகந்துண்டு பார்வதிகளிகூர்ந்து, கொன்றை மாலை புனைந்த சடையா யென்னையுடையாய்! நின்னடியார் நின்னைப் பிரிந்து யாவர்தாஞ் சகித்திருப்பார். நின்னாசையாகிய பெரிய நதியிலே வீழ்ந்தே னென்னைக் கரையேற்றுவாய் பிரிவாற்றேன் யானென்றனள். அதுகேட்டுக் "கூட்டமாகிய மாலையணிந்த இமயமலைச் செல்வியாகிய மேனைபெற்ற பெண்ணே! முன்னாளிலே நீ செய்த தவத்தின் முறையெல்லாங் கண்டு மகிழ்ந்தோம். உன்னைவந்து நாம்விவாகஞ்செய்வோம் வருந்தாதிரு" வென்று பிரமவிஷ்ணுக்கள் சூழ நாதவிந்து முடிவாயுள்ள விமலர் வெள்ளியங்கிரிக் கெழுந்தருளினர்.

முதலாவது உமைதிருவவதாரச்சருக்கம் முற்றிற்று.

---

## இரண்டாவது
## திருமணச்சருக்கம்.

ஒப்பற்றமேருவை வில்லாகவுடைய சிவ்பிரான் சத்த ருஷிகளை வரவழைத்து "இமயமலேயிற்றோன்றிய பார்வதியை நாம் விவாகஞ்செய்ய நினைத்தோம். நீங்கள் விரைவிலே யிமயவரசன்பாற்சென்று பேசி முடித்துவருக" என்று கட்டளையிட்டனர். உடனே யம்முனிவரெழுந்துசென்று, இம வான் பக்கம்போய்ச்சேருதலு, மவ்வரச னெழுந்து வணங்கிப் புட்பாஞ்சலிசெய்து சிறந்த தகுதியான ஆசனங்களி லவரை யிருத்தி ஏழுமலையைச் சூழ்ந்துவரு மொரு சூரியனைப்போல அவரை வலமாகச் சூழ்ந்துவந்து நின்று, முனிவர்களே! யிங்கு நீங்களெழுந்தருள என்னதவஞ்செய்தேன். பிரமனே யேழுருக்கொண்டாற்போலும் நீவிர் தேவருலகத்தை விட்டெழுந்த தென்னகாரண" மென்றுகேட்க, "முனிவரர் கூறுவார். "அரசனே! நீபெற்ற கரும்பின் கனியையுங் கற்பகக்கொழுந்தையும் போல்வாளாகிய பார்வதியைச் சிவபிரானுக்கு மணஞ்செய்து கொடுக்க" என்றனர். அதுகேட்டு மலையரசனிற்ப, அவன் மகன் மைநாகனென்பான் வந்து "அவருடைய குலமெது" வென்று வினவலும், முனிவர் "அவரெல்லா வுலகத்தையு மீன்று காத்தழிக்கவல்லவர். எல்லாருக்குங் குலமென்பது, அவர்கொடுத்ததே" யென்றனர். பக்கத்திலே நின்ற மேனையாகியதாய் "மகளைக்கொடுத்த தக்கனைச்

சேனையினுலேகொன்ற அவருக்கோ மணம்பேசிவந்தீ'' ரென்ன, முனிவர்'' தன்வீட்டு விளக்கானுலு முத்தங் கொள்ளுதற்குக்கூடுமோ நீசொல்லுவா''யென்றனர். இவையெல்லாங் கேட்டு மலையரசன் மனைவிக்கு மைந்தனுக்குஞ் சமாதானஞ் சொல்லி'' யென்குலத்திற் பிறந்த பூங்கொம்பு போல்வாளைக் கயிலாசபதியாகிய கடவுளே விவாகஞ்செய்வதானு லென்னுடைய முன்னைப்பெருந்தவமே'' யென்றனன். முனிவரர் மகிழ்ந்து அவனைநோக்கிச் சிவபிரானுக்கும் பார்வதிக்கு மங்கலமாகிய திதி நக்ஷத்திரம் வாரம் ஓரை முதலிய வெல்லாஞ் சொல்லி நாளைத்தின முகூர்த்தமென்று முடிவு செய்துவிட்டுப்புறப்பட்டுத் திருக்கயிலாயமலைக்கட்சென்று தலைவாயிலில் நின்று நந்திதேவராஞ்ஞைபெற்றுச் சிவபெருமான் சந்நிதானஞ்சார்ந்து நடந்தவைகளைத் திருச்செவியிலே விண்ணப்பஞ்செய்து திருமணஞ்செய்பு முகூர்த்தம் நாளையென்று வணங்கிநின்றனர்.

முனிவரிங்ஙனம் வணங்கிநிற்ப, அவ்வெம்பிரான் "பிரமன் விஷ்ணு இந்திரன் உருத்திரர் முனிவர் சித்தர் முதலியவரும் மண்ணுலகத்தவரும் தம்பதிசமேதராய் வரும்படிசெய்க'' என்று நந்திதேவருக்குக் கட்டளையிடுதலும், அவர் அவ்வாறே யெல்லாரும் வந்துசேர அங்கங்கே முரசறையும்படி யுத்தரவுசெய்தனர். சருவலோகநாயகராகிய நம்பெருமானுக்குத் திருமணமென்று சொல்லு முரசொலிகேட்ட மாத்திர

மே யெல்லாரு மனமகிழ்ச்சியுற்று வருவாராயினர். விஷ்ணு பிரமன் இந்திரன் அக்கினி நிருதி வருணன் வாயு ஈசானன் யமன் குபேரன் சந்திரன் வருடம் மாதம் வாரம் திதி நக்ஷத்திரம் கரணம் மூலகாலாக்கினிருத்திரர் அவர்போன்ற மற்றவர் பூதபைசாசகணங்கள் கூர்மாண்டர் அட்டவித்தியேசுரர் பாதலத்திலுள்ள சர்ப்பராசர் உருத்திரர் பிரமவிஷ்ணுக்களையேவல்கொள்ளு மாசாத்தர் பசுபதியுருத்திரர் உருத்திரகணப்படைத்தலைவர் சாரூபம்பெற்ற நெற்றிக்கண்ணுடையவர் பன்னிரண்டுகோடி சூரியர் மருத்துவர் வசுக்கள்தீர்த்தங்கள் பிரமன் புருவத்திற்றேன்றிய நீலலோகிதர் முத்தலைவேலாயுதந் தாங்கிய கங்காளர் சூலந்தாங்கிய கையையுடையவர் க்ஷேத்திரபாலர் சுவாவினர் சட்டையணிந்த மெய்யையுடையவர் உபமன்னியர் வியாசர் சுகர் ததீசி அத்திரி பிருகுரோமசர் கண்ணுவர் பராசர் துருவாசர் நாரதர் கபிலர் சத்தியர் சதாநந்தர் பரத்துவாசர் சித்தர் மாதவர் தந்திரர் கருடர் கிம்புருடர் கின்னரர் போகர் வித்தியாதரர் சாலகடங்கடர் நிசிசரர் வேதாளர் தேவர் ஆகாயத்திலே நடப்பவர் தயித்தியர் கடவுளர் யோகர் சத்தமாதர் அட்டமாசித்திகள் சத்தமேகமன்னவர் அகத்தியர் புலத்தியர் அங்கிரா மார்க்கண்டர் காசிபர் கௌதமர் வசிட்டர் சனகர் சனற்குமாரர் சனாதரர் சனந்தர் பதஞ்சலி வியாக்கிரபாதர் தினம் இரா பகல் திரிகாலம் நான்கு வேதம் பஞ்சபூதம் ஆறுபருவம எழுநதி எட்டுத்திக்கு எட்டு

மலே யொன்பதுகண்டம் எழுலகம் ஆறங்கம் ஐம்புலம் நான்குகரணம் முக்குணம் இரண்டறம். மோக்ஷம் ஊழ் அறிவு சரியை கிரியை யோகம் ஞானம் மந்திரம் தத்துவம் புவனம் வருணபேதம் கலைகள் பதவிகள் அத்துவாக்கள் இலக்குமி சரசுவதி யிந்திராணி முதலிய தெய்வப்பெண்கள் யாரும் அவரவர் வாகனங்களிலேறிச்செலுத்தி யாகாயமார்க்கமாகக் கயிலாசகிரியில் வந்துசேர்ந்தனர்.

உலகந்தொட்டு அண்டமுகட்டினுச்சிவரையுங் கோத்தெழு முகாந்தவெள்ளமானது சிவபிரான் திருமலையாகிய கபிலைபங்கிரியை வலஞ்செய்யுஞ் செய்கைபோல உலகமும் வானமும் புதைபட வெங்கும் வியாபித்துவந்து சேர்ந்த எல்லாருங் கபிலாயமலையை வணங்கித்தாழ்ந்தெழுந்து சூழ்ந்தனர். பதினன்குலகமு மொன்ருயொருமித் தொருமுகங்கொண்டு வந்தும் அவ்வளவுக்கு மிடங்கொடுத்துக் கயிலாயமலை முத்தமிழ்ப் புலவருக்கெல்லா மிடங்கொடுத்த சங்கப்பலகையை யொத்திருந்தது. அன்றியும் அண்டங்களையெல்லாந்தன்னுள்ளடக்கிய பூதத்தலைவராகிய சிவபிரானையும் போன்றிருந்தது. திரிபுரத்தையழித்த வில்லாதலினு லெம்பிரான் றலைக்கடைவாயிலின் மேருமலைநிற்றல்போலநிற்குங் கோபுரவாயிலிற் றெழுதெழுந்து சென்று, தங்குகின்ற கலியாணக்கூட்டமெல்லா நிறைதலாற் கயிலாயமலை சகலவுலகையும்பெற்ற வுமாதேவியாரையும்போன்றிருந்தது, தேன்கூட்டத்திலீக்கு

ள்மொய்த்தாற்போல விஷ்ணுபிரமருத்திரகணமுதலுயர்ந் தவர் கூட்டமெல்லாஞ் சிவபிரான் றிருவாயிலிலே திரண்டு கூடினர்; அவர்கள் பூதரிடத்தும் பூதர் கணநாதரிடத்து மறி விக்க, அவர்கள் நந்திதேவரிடத்துத் தெரியப்படுத்தலும், அ வருள்ளேபோய் எம்பெருமானுக் கெல்லாருடைய வரவையு மெடுத்துக்கூறினர். அதுகேட்டு அவ்வெம்பெருமா "னெல் லாருமுள்ளேவருக" என்றருளுதலும், நந்திதேவர் அவரவ ரை முறைப்படி யுள்ளேசெலுத்த, வந்து வணங்கின அவரு க்குத் திருவாக்காலும் திருக்கண்ணாலும் அருட்புனசிரிப்பா லும், ஒருவனுகி யுலகெல்லாமாகி யுயிர்க்குயிராகிய கருணைவ ள்ள லருள்செய்தனர். இங்கிவ்வாறிருக்க, இமயவரசன் பார் வதிதேவி திருமணப்பாசுரம் விடுத்தலும், மலைக்கரசரெல்லா ரும் சமுத்திரங்கட் கிறையவர்கூட்டமும் முனிக்கணங்களும் மலையாகிய தெய்வக்கூட்டங்களுங் கடல்போல வந்து பரந்த ன. சிரீதேவி பூதேவி முதலிய தெய்வப்பெண்க ளெல்லாரும் வந்து பார்வதியைத் தாழ்ந்தெழுந்து நக்ஷத்திரக்கூட்டம்போ லச்சூழ்ந்தனர். தேவதச்சன்வந்து நகரம் மாடம் கூடம் கோ யில் மதிலுருப்பு செய்குன்றம் சிகரம் கோபுரம் மாளிகை சூளிகை திண்ணை சித்திரகூடம் மகரதோரணம் பந்தர் சபை நாடகசாலை யநேககோடி வீடுகள்செய்து அதன்மேல்மேடை யுபரிகை சன்னல் நிலாமுற்றம் பொன்மணிகளாற் செய்து பூம்பந்தர் கொடி குடை படங்கு சாமரை பூரணகும்பம் யா

னை சிங்கம் வீரர்கள் பலபல கோடியும், வெள்ளியினாலும்பொ
ன்னாலும் நவரத்தினங்களாலும் கமுகும் வாழைகளும் செய்
தமைத்தனன். மண்டபங்களும் மாளிகைகளும் மாடகூடமு
ங் கோபுரங்களும் மலைகள்போலக்கூடி நிற்றலால் இமயமலை
யானது அநாதியாகிய பரம்பொருளை விரும்பி யவ்விடத்துத்
தங்குகின்றபார்வதி திருவிளையாட்டா லண்டங்க ளெல்லா
மெடுத்தடுக்கிய சிற்றில்போலிருந்தது. பற்பல தெருக்களும்
பற்பல வுலகம்போலவும் பற்பல வடிவங்கள் பற்பலவுயிர்க
ள்போலவு மிவையெல்லாம்வகுத்த தேவதச்சன் பிரமன்போ
லவும் அவைகளை யலங்காரஞ்செய்யும் பெண்கள் அன்னக்கு
ழாங்களைப்போலவுமிருந்தனர்.

மாமரத்தின் கூட்டமென்று சொல்ல மாந்தழைகளைக்
கோத்துத் தோரணங்கட்டுவார். பலமலர்களையுடைய பூங்கா
வனமென்ன முல்லை மல்லிகை சண்பகமலராலாகிய மாலையை
த்தொங்கவிட்டுக் கட்டுவார். ஆகாயகங்கையென்னத் துகிற்
கொடிகள் கட்டுவார். ஆகாயத்தின் கண்ணே நக்ஷத்திரங்கள்
பிரகாசிப்பன போலக் காந்திதங்கிய தீபங்க ளேற்றுவார்கள்.
இமயமலை அன்றலர்ந்த பூவின் றேனிறைதலாற் குறிஞ்சிக்கு
மேலோர்குறிஞ்சி நிலமாகியும், சுண்ணச்சாந்தினான் மருதநில
மாகியு, மாதர்கள் சூடிவிளையாடு முல்லைமலரால் முல்லைநிலமா
மாகியும், மணிக்கூட்டங்களாற் பரற் கற்களையுடைய பாலைநி
லமாகியும். பன்னீர் கலந்து வீசப்படுதலால் நெய்தனிலமாகியு

மிருந்தது. கரும்பு மலர் வண்டு பெண்கள் நடைச்சோலை தென்றல் கொடிவரிசையா லிருண்ட இருள் திருக்கலியாண மண்டபத்தைச்சூழக்காணப்படுதல் வில்லும்பாணமும் நாணும்சேனையும் படைவீடும் தேரும் யானையும் தங்களுடைய அரசனாகிய மன்மதனுயிரைத் திருப்பும் பொருட்டுச்சருவலோக நாயகி திருமணச் சமயம் பார்த்து வந்துநிற்றலை யொக்கும். இறைக்கப்பட்ட சுண்ணப்பொடியும் பொறிகளுமெடுத்து விசாநின்ற விடுபூக்களும் மாலைகளினின்றுதிர்ந்த மலர்களும் அவைகளினின்றுவீழ்ந்த பூந்தாதுக்களும்,ஒன்றற்கொன்றுசமானமாக ரத்நாபரணங்களிலே நறுக்கப்பட்டுச்சிதறியநவரத்நங்களும், பொன்னு மெடுத்துக் குவிக்கின்ற குவியல்கள் இமயமலையினனந்தங்கொடுமுடிகள்போலுமிருந்தன.இமயமலையையிவ்விதமலங்காரஞ் செய்து இமயவரசனிருக்க, மணஞ்செய்கின்ற கொன்றைமாலையணிந்த சிவபிரானைச் சொர்ணாபரணங்கள் கொண்டு மணக்கோலஞ் செய்யவேண்டுமென்று பிரமனெதிர்சென்று வேண்டுதலும், அவ்வெம்பிரான் "அங்ஙனஞ் செய்ததைக்காண்க" என்று புன்முறுவல்செய்தனர். உடனே யானைத் தோலும் புலித்தோலும் கச்சாகியபாம்பும், பீதாம்பர வுத்தரீயங்களும் பொன்னாலாகிய அரைக்கச்சு மாயின. மேலணிந்த பாம்புகளெல்லாம் பொன்னாலு மிரத்நங்களாலுஞ்செய்யப்பட்ட குண்டலம் சரப்பணி கண்டிகை சன்னவீரம் (தோள்வளை) கங்கணம் பவித்திரம் பூமாலை முடிமாலை அரை

ஞான் நூபுரங்களாயின. பன்றிக்கொம்பு மீன்கண் வெண்ட லை மாலைகளெல்லாம் பற்பல பொன்னுபரணங்களாயின. திரு நீறு கருப்புரச்சுண்ணச் சாந்தும், ஆமையோடு மார்பிலணி பொற்பதக்கமுமாயின. நெற்றிக்கண் நெற்றியிலணியுந்திலகமா னது. இங்ஙனமெல்லா வணிகளுஞ் சூரியசந்திரரைப்போலப் பிரகாசிக்கச் சடைமுடியானதுமணிகள்பதித்த கிரீடமானது. இவ்வலங்காரங்களை யெல்லாங் கண்குளிரப்பார்த்துப் பிரமன் பணிந்தெழுந்து முற்காலத்திற் றனுந்தன் பிதாவாகிய விஷ் ணுவும் பெறுதற்கரிய தவப்பலன் பெற்றுச் சென்றனன்.

பூங்கொம்பு போல்வாளாகிய பார்வதி மணநிறைவேற வுந் தேவர்கள் குறை தீரவும் எம்பிரானே! யெழுந்தருளுக என்று இமயவெற்பரசன் வந்து விண்ணப்பஞ் செய்தலும், திருக்கயிலாச மலையினின்றுஞ் சிவபிரான் வெளிப்புறப்படுவ தானர். அப்போது நீலலோகிதர் ஆடகர் அட்டகர் உருத்தி ரர் முதலியவரும் பிரம விஷ்ணுக்களுஞ் சயசய சயவென்று மேருமலையைச் சூழ்ந்திருக்கும் மற்றைய மலைகளைப்போலச் சூழ்ந்தனர். கணநாதரும் பூதருங் கடல்போலச் சூழப் பஞ்ச வாத்திய வோசை யாகாய வெளியை மறைப்பத், திருமணக் கோலங்காணவந்தகூட்டங்க ளெட்டுத் திக்கிலுமடங்காமற் சிவபிரான்றிருவருள்போல வுலகமெங்கும்வியாபித்துச் செல் லவிநாயகக் கடவுள் பெருச்சாளிவாகனமேறித் தமதுபிதாவி ன் விவாகத்துக்கு அங்குரம்போல முன்னே நடந்து செல்ல,

வேதப்பிராமணர் மங்கலவாழ்த் தோசைமுழங்க வித்தியாத ரர் புகழ்ந்துபாடத் தும்புரு நாரதர் கின்னர் கீதம்பாட இந்தி ரன் குடைபிடிக்க அக்கினி தூபமேந்த யமன் ஆயுதமேந்த ஈசானன் வெற்றிலைப்பைதாங்க வாயு விசிறி விசிற வருணன் சலந்தெளிக்கக் குபேரன் பலவிதமாகியதிரவியங்களை யெடுத் தேந்திவர நிருதி திருவடிசுமப்பப் பெரிய சர்ப்பங்கள் இரத் நதீபங்களேந்தச் சூரியசந்திரர் தீவர்த்தி பிடிக்க முனிவர் பல் லாண்டுகூற வேதங்கள் ஆயிரநாம மெடுத்துத் துதிக்கத் தேவர்கள் புட்பமாரி பொழிய இருது நாள் கிரகம் சகுனமா கிய விவைகள் சில்லறை ஏவல்கள் கேட்ப இமயமலைபோலத் தேவர்கள் பனிச்சலத்தைப் பக்கத்திலே தூற்றத் தேவப்பெ ண்கள் சாமரம் வீசப் பிரமவிஷ்ணுக்க ளிருபுறமுங் காத்து வரப் பிறதேவர் வெளிப்புறங் காத்துவர நந்தி தேவர் பிர பாயுதந் தாங்கிக் கணங்களோடு முன்னே நடப்ப, அருவை நாயகன் பிரம விஷ்ணுக்களறியாத பெரியவன் வருகின்றான் உலகமாதாவைத் திருமணஞ் செய்ய வருகின்றான் அக்கினிக் கண்களை யுடையவன் வருகின்றான் குறைவில்லாத வாழ் வினன் வருகின்றான் தேவநாயகன் வருகின்றான் விடமுண்டு தேவப்பெண்கள் மங்கிலியங்காத்த முதல்வன் வருகின்றான் நிமலநிட் களநிராமயன் வருகின்றான். நினைப்பவர் மலமாயை யிருளைப் போக்குஞ் சூரியன் வருகின்றானென்று துதிக்கச் சின்னங்கள் முழங்கச் சமுத்திரங்களெல்லாம் பெரும்புறக்கட

லோடு சேர்ந்த காலத்திலே கயிலாச மலையி லாயிரங்கோடி சூரியர் கிரணம் பிரகாசிக்கத் தோன்றினாற்போல மணக்கூட்டமாகிய பெருவெள்ளத்திடை யிடப வாகனத்தி லெம்பிரானெழுந்தருளிய சமயத்தில், மேரு மந்தரம் விந்தம் கந்தமாதனம் சக்கரவாளம் நிடதம் ஏமகூடம் நீலம் முதலிய மலையரசரும் சமுத்திர வரசரும் பக்கமேசூழ எல்லாமலைக்குலங்களு மேரு மலையை வளைத்த புயமலையின் வலிமையைக் காணவந்தாற்போல இமயமலையரசன் மருமகனாகிய சிவபிரானையெதிர்கொண்டு கண்டு இனியவுபசாரஞ் சொல்லித் தனதிருப்பிடத்துக்குச் சென்றனன். எம்பெருமானை மருமகனாகத் தவஞ்செய்த மலையரசன் சுற்றத்தாருடன் வந்தேகியபின் பெருமான் பதினாலு லோகமுந்தம்மை வலஞ்செய்யத், தாம் இடபக்கொடியசைய இமயமலை வீதிவலஞ்செய்யப் புகுந்தனர்.

கார்காலத்தைக் கண்டமயில்போல இசையுமகிழும் குளிர்ந்த சொல்லும் சிவந்த வாயுமுடைய பெண்கள்; பெருமானுடைய நீலகண்டத்தைப் பார்த்து மகிழ்ந்து, பார்வதி பேரழகுக்குத்தக்க பெருவனப்புடையாரிவர், அவ்விருவர் திருமேனியையும் பார்த்த பார்வைகளைத் திருப்புதலரிதென்று சொல்லுவர். தேவநாயகராகிய இவரழகுக் கொருகுற்றங் கண்டத்திற்கறுப்பொன்றுமே யென்பர். வண்டுகள் மொய்த்த கூந்தலையுடைய பெண்மணிக்கு ஒருகுறை யிடை சுருங்கியதே யென்பர். மண் விண் புனல் அனல் மேல

டங்காத வடிவமேவிய மணவாளர் பெண்ணின் மேலவளா கிய இவள் பேரழகைக் காணவே கண்மேற்கண் (நெற்றிக் கண்) படைத்தாரென்று சொல்லுவர். வளையல் கூந்தல் மே கலை சோர்வதை யோராராய் அழகிய கிருபைக் கண்களையு டையாரழகாகிய வமுதத்தை யுண்பார்போலக் கண்ணூற்பார் ட்பர் சிலர். சுடுகின்ற பிறையணிந்ததலையைக் காட்டி மொ ய்க்கின்ற பெருமோகத்தை நல்கின இவர் வளைந்த வளையல் களைக் கொண்டனர். வாய்திறந்தொரு பேச்சும் பேசார்; இவ ருக்கிது தகுதியோவென்று சிலர் சொல்லுவர். நீர்ச்சுழிபோ லுங் கொப்பூழையுடைய மயில்போன்ற மடந்தையரே! நம் முயிரைப் போகாது காத்தற்குச் சாதன மௌனமோ? இவர் கண்ணுன் மன்மதனை யெரித்தவர். சொல்லாலுலகமூன்றை யும் வெல்வரென்று சிலர் சொல்லுவர். பரிசுத்தமாகிய சோ தி யிவர். இவருடைய கருணை சுரக்கின்றகண் அக்கினிபோல ச்சுடுமோ? அது எரிக்கவில்லை. மன்மதனிவர் பேரெழிலைக் காணப் பொறுமைகொண்டு இறந்தானென்று சிலர் பேசுவர். வீரத்தையுடைய பெரியமேருவில் விரும்பும் புயங்களையுடை ய தலைவராகிய இவரைத்தழுவுதற்கு மாதவஞ்செய்யவருந்து கின்றேம். அந்தப்புயங்களைச்சேரப் பார்வதியைப்போலவுங் கங்கையைப் போலவுந் தவஞ் செய்தோ மில்லை யென்றனர் சிலர். நம்முடைய நெற்றியைக் கண்டு பயந்த பிறைச்சந்திர னிவரது கொன்றை மாலைதரித்த முடியிலிருந்து நம்மைச்சுடு

தல் அவரது தலையைச் சேர்ந்து பாம்புகள் கருடனைப் பார்த்துச் சுகமோவென்று துன்பம் விளைத்தது போலுமென்று சிலரியம்புவர். ஒருபெண் கைவளையல் போனவழியை மற்றுமோர் பெண்ணைக் கேட்க, அவள் தன்மனம் போனமார்க்கத்தை வினவி யவ்விருவருஞ் சேர்ந்து போய் மற்றோரிடத்தில் நித்திரையைப் போக்கி நின்ற வொருத்தியினிடம் வந்து காரியஞ் சொல்லுவர். பூவுஞ் சந்தனமும் பூரணகும்பமு மாதர் தாங்கி நிற்கு மாடங்களிற் செல்லாமல் எம்பெருமானை மேலேதாங்கி வீதிவழியே போமிது மயக்கத்தையுண்டு பண்ணுதலால் மால்விடை யென்பது நிசமென்று சிலர் நிகழ்த்துவர். போதலும் வருதலுமாக வூசலாடு மனத்தையுடைய சில பெண்கள் பொதுவாயுள்ள அவரது அபயவரத கரங்களைப் பார்த்து அவை எமக்கு உமக்கென்று கலகஞ்செய்யா நிற்பர். அகிற் புகையூட்டிய கூந்தலை யுடைய மாதராயிரங் கோடியர் வஸ்திரமு முத்தாரமுஞ் சோருதல் கண்டும், நீருண்டமேகம் போன்ற கூந்தலாளொருத்தி முன்னேசெல்வர். எல்லாமுடைய கடவுளுக்கு இது நீதியோவென்பர் சிலர். பாவராக தாளத்தோடு விளங்கும் இமயமலை வீதியிற் பெண்கள் கண்களாகிய வண்டுகள் சூழ்ந்துவர விரத யோகிகள் கண்களாகிய வண்டுண்ணுதலால் மணமகனாகிய வரதரது திருமேனி தேன்கட்டுப்போன்றிருந்தது.

நாகருலகங் கீழ்ப்பட(தாழ்மையடைய)த் திக்குப்பாலகருலகம், திகைத்தேங்க (திசைகளிலே நிறைந்திருக்க)ச்சூரியன்

சந்திரன் வெள்ளி வியாழன் முதலியோரிடங்கள் கோளிட மாக (குற்றமுள்ள இடமாக) க்கின்னரர் தந்திர ரிடங்கள் வீணை யெய்த (வம்பையடைய) இமயமலை சிவபிரான் மண க்கோலப் பெருக்கோடு முயர்ந்து விளங்கியது. அம்மலையின் கண் தேவரெல்லாரும் வருதலாலவருலகம், வெறுக்கை(பொ ன்) ஆகியது. பிரமனுஞ் சரசுவதியும் வருதலா லவர்சத்திய வுலகம், அலர் (நிந்தை) அடைந்தது, விஷ்ணுவு மிலக்குமியும் வருதலாற் பாற்சமுத்திரம், சலம்(சலனம்)மேவியது. இடபா ரூடராகிய எம்பெருமான் வருதலாற் கயிலாயமலையும், விளர்த் தது. (வெண்ணிற முற்றது.) இமயமலையைச் சிலர் வித்தி யாதர ருலகமென்பர், சிலர் பிரமலோக மென்பர். சிலர் தேவ லோக மென்பர். சிலர் வைகுந்த லோகமென்பர். சிலர் சிவ லோக மென்பர். சிலர் இந்நகரம் பதினாலு லோகமுங் கொடு த்த தென்பர். சிலர் எல்லாவுலகையும் பெற்ற மாதாவைப் பெற்ற இந்நகருக்கு இது அரியதோ? வென்பர், பூதர் தேவர் மனிதர் உருத்திரர் வேதியர்களாகிய மேகக்கூட்டங்கள் பெ ண்களாகிய மின்னலுடன் வீதிகள் விளங்கப்படுவன, கொடி குடைகளை நிரைத்த அரசருடைய தோள் வளையுங் கிரீடமு முதிர்த்த பொற் சுண்ணப் பொடிகள், பனிபெய்தலாற் சே ருக, அச்சேற்றில் பெண்யானையு மாண்யானையும் பாதங்கள் புதை பட்டு முழங்கா நிற்கும். வீதியடங்காத பெருங்கூட் டமாயினும் உலகத்தார் வினைப்பயனை யூட்டுவிக்கு மூழ்வினை

போலப், பொருந்திய மதிற் புறத்தே நெருக்கமுற வருவோ ருயர்வு தாழ்வுகளை நந்தி தேவர் திருக்கைப்பிரம்பு தெரிவித் துக் காட்டும். மலை நாட்டினர் திக்குப் பாலகர் பிரம விஷ்ணு ருத்திரர் முனிவர் மணமகனுகிய சிவபிரா னிவர்களன்றி யங் கே நின்றவர் கால்களைப் பெயர்த்து வைத்தற்கிடமில்லை. தவ முநிவர் அரசிலை தருப்பைப்புல்லாற் சலந்தெளிக்க அவர் மனைவியர் நீராஞ்சனம் (ஆலத்தி) எடுக்க, கொடி குடம் பணி கண்ணுடி முரசு பூந்தோட்டி சாமரம் தீபம் ஆகிய அட்டமங் கலங்களை வரையர மகளிர் தாங்க, மேருமலைப்பெண்கள் கரு ப்பூர தீபங்களேந்தி வலஞ் சுற்றிவரத், தேவப்பெண்கள் ஆல த்திக ளெடுத்து நெருங்கத் திரிகூடமலையிலே தம்மைப் பூசி த்துப் பேறுபெற்ற கயகருணனென்னுங் கணத் தலைவனிர ண்டு கையையும் பற்றி யெம்பெருமான் இடபவாகனம் விட் டிறங்கி நந்திதேவர் கொண்டுவந்து வைத்த தேவர்கள் முடியி லேசாத்தும் பாதுகையிலே திருவடிகளைச்சூட்டி யிடத்தும் வலத்தும் பிரமன் விஷ்ணு கரங்களைப் பிடித்து அட்டவசுக் கள் மங்கலப் பல்லாண்டு கூறப் பெண்கள் நடைபடாம் விரி க்கத் தேவர்களதிலே புட்பங்களைப்பரப்ப அதன்மேலே நட ந்து இமயமலை யாலயத்தின் வாயிலிற்சென்றனர்.

ஈசனே மருமகனுக எல்லாவுலகமுமீன்றவளைமகவாகப்பெ ற்றுத் தன் குலமெல்லாம் பரிசுத்த முற்றமேனைகுற்றமற்ற நீரினுற் சிவபிரான் திருவடிகளை விளக்கஞ் செய்து பூசித்து

அப்பாதோதகத்தா லகமும் புறமும் புனித முற்றனள். அவ் விடத்தை விட்டுக் கடந்து ஆயிரம் பவளக்காலாற் செய்த பொன் மண்டபத்தி னடுவிலே புட்பராகத்தினாற்செய்த மண வறையிலே பதுமராகத்தா லியற்றிய சிங்காதனத்தி லெம்பி ரா னெழுந்தருளி யிருந்தனர். அதன்மேற் பிரமன் றிருமாலி ந்திரன் கூர்மாண்டன் ஆடகேசன் உருத்திரர் முதலியோர்க் கு அவரவர்கட்குத் தக்க ஆசனங்களைக் காட்டியிருக்கும்படி கடைக்கண் செய்தருளினர். பூமி யந்தரம் பாதல மேரு முத லிய எல்லா இடங்களிலுள்ளார்க்குந் திருக்கலியாண மண்ட பஞ் சிவபிரான் றிருவடித் தாமரைபோல இடங்கொடுத்தது. திருக்கலியாணத்திலே யெல்லாரும் வந்து கூட்டமாகக் கூடி யதால் வடதிசை முழுதுந் தாழ்ந்தது. தென்றிசை வானுல கத்தைப் பொருந்த வுயர்ந்தது. ஆதிசேடனு நெளித்தனன். தென் சமுத்திரம் வடசமுத்திரத்துக்கு வந்தது. மேருமலை யுந் திகைப் புற்றது. பூமாதேவியுங் கையசைத்தனள். உல கமெல்லாம் பயந்தன. மனிதர் முதலிய எல்லாரும் இத்துன் பத்தை யொருவர்க் கொருவர் பேசப், பிரமனும் விஷ்ணு வுந் தேவர்களுந் திரண்டு சென்று, திரிலோகமுமொரு மலையி ன்மேல்வந்ததனாற் பூபாரந்தாங்கமாட்டாமல் வடக்குத்திசை தாழத் தெற்குத்திசை யுயர்ந்து, ஆகாயத்தை யெட்டிப் பார் த்ததென்று பரமபதிக்கு விண்ணப்பஞ் செய்தனர்.

அது தெரிந்து நம்பெருமான் றிருவுளத்தி லருள்சுரந்து மணக்குழாத்திலகத்திய முனிவரைக் குறிப்பாகக்கடைக்கண்

ணுற் பார்த்தருளுதலும், உடனே யகத்திய முனிவரெழுந் தேத்திச்சம்புவே! சரணனென நின்று வாய்புதைத்து நின்று கட்டளை யென்னென்று பரவினர். அவர்மனமகிழ அமிழ்தத் தைச் சொரிந்தாற்போலும் பெருமான் சொல்லுவார். "பதி னாலு வகை யுலகமும் வந்துகூடிய சபையைக் காட்டி "முனி வனே! "நாவலந் தீவு சமுத்திரத்தின் மத்தியிலுள்ள ஒரு கப்பல். அதன் பாய்மரம் மேருமலை. பாயல் துருவசக்கரம். அட்டகுல பருவதங்கள் நங்கூரக்கற்கள். பலவுயிர்க்கூட்டங் கள் அக்கப்பலினிறைக்கும் பண்டங்கள். கலியாணங்காணும் பொருட்டு அப்பண்டங்களாகிய வுயிர்களொருபக்கமே தொ குக்கப்பட்டதால், அக்கப்பலின் வடபக்கந்தாழத் தென்பக்க முயர்ந்தது. ஆதலாற் சமுத்திரத்தி லக்கப்பலமிழ்ந்தா வண் ண நிலைநிறுத்த நாம் வேண்டும். அன்றி நம்மை யிடைவிடா துள்ளத்திலே நிறுத்திய நீ வேண்டும். சருவான்மாக்களுங் காமவின்பத்தை யநுபவிக்கும்பொருட்டுப் பார்வதியை மண ஞ்செய்ய நாம் விரும்பினோம். ஆதலாலே நீ தென் றிசைக் குப் போதல்வேண்டும். அங்ஙனம் போய்த்தெக்ஷிணபூமியை வடபூமிக்குச் சமமாக்கிச் சூரியன் முதலியோர் முறையைச் செலுத்தி வாழுந் துருவனைப்போல அகத்தியமுனிவனே! நீ பொதிகைமலையிலே வாழக்கடவை" யென்றருளுதலும், அகத்திய முனிவரெழுந்து வணங்கிச் "சுவாமீ! யுமது திரு மணக்கோலக் காட்சி தரிசிக்கவும் உமது திருநடனந் தரிசிக்

கவும் விரும்பி நெடுங்கால மேருமலையிலே தவஞ்செய்து மணக்கோலக்காட்சி தரிசிக்கவந்தேன். இதுவும் நடனக்காட்சியும் அடியேன்றரிசிக்கு நாளெந்நா ளென்று வினவினர். சர்ப்பமாகிய அரைஞாணுடைய சிவபிரான் கருணை கூர்ந்து சொல்லுவார். "மேருமலை யாயிரவருடஞ் செய்ததவத்தாலுதவுபலனை யிமயமலை நூறுவருட மியற்றிய தவத்தாலே கொடுக்கும். அத்தகைய பலனை யொருவருடத்திலே தெக்ஷிணாதேசத்திலே கேதாரமுதலிய தலங்களருளா நிற்கும். தெக்ஷிணாதேசத்திற் கோடிநாள் தவஞ்செய்து பெறும்பலனைச் சிலநாளிலே கொடுக்குந்தலமொன்றுளது; அதைப் பிறர்க்குச் சொல்லமாட்டோம், நம்பாலன்பாகக் கேட்டார்க்கு மட்டுஞ் சொல்லுவோ" மென்றனர்.

முனிவருடனே வணங்கி யெழுந்து "அங்ஙனம் விசேடமுள்ள தலத்தை யடியேனுக்கருளிச்செய்க" என்று கேட்டனர். சிவபிரான் "மேருமலைக்குங் கயிலாயமலைக்குந் தென்மலை. நீ யிருக்கும் பொதிகை மலைக்கு வடமலை; அது திரிகூடமலை யாகும்; அம்மலையிலே யிரத்நங்களைக் கொழிக்கும் வடவருவியுடைய திருக்குற்றாலத்தலம் உமாதேவிக்கு மெமக்கும் பொதுத்தலம். இன்னுந் திரிமூர்த்திகளுக்கு முரியதலமாம். அந்தத்தலத்திலே பிரமன் சொல்லாற் றேவர்கள் வந்து சிவத்துரோக நீங்கினர். இன்னும் மண்ணுலகத்தார் விண்ணுலகத்தார் தீவினையைப் போக்குங் கங்கைவந்து தன்வினை

யைத் தீர்க்குந்தலம். அவ்விடத்திற் செய்த புண்ணியமொ ன்று கோடியாகத் தழைக்கும். செல்வம் வேண்டியவர்களுக் குக்கொடுக்க இலக்குமியுங் கல்வி வேண்டினருக்குதவச் சரசு வதியு நம்மைக்காத்திருப்பதனுல் விஷ்ணுவும் பிரமனும் வெ ன்றிதருவதற்குத் துர்க்கையும், யாகப்பொலிவினுலே யிந்திர னும் வயிரவனுமிருக்குந்தலமுமாம். வேதமுழங்குகின்ற அத் தலம் தேவப்பெண்களைத் தேவர்கள் சேருந்தோறும் இந்தத் தலத்திலே போய் வாசஞ்செய்த மான்மியமென்று களிகூர் ந்து திசைநோக்கி யிறைஞ்சுந்தலம். சித்தர் சாரதர் . இயக்கர் கின்னரர் கிம்புருடர் தவஞ்செய்புந்தலம். பந்து கழங்கு கற்ப கப் பூம்பந்தரினூசல் கங்காநதி மலர்கொய்தல் முதலிய லீலை யாடல் செய்யுமிந்திராணி யிந்திரனோடு கலவி செய்யும்போ தெல்லாங் கொங்கை தடிப்ப இதழ் துடிப்பப் பாடுஞ் சீர்த்தி தழைக்குந் தலம். யாமும் நின்மலையாகிய பராசத்தியும் யானை செய்த பூசனையை யேற்று மகிழ்ந்திருக்குந்தலம்; அந்தத்தல த்துக்குச் சமீபமாக யுகாந்தகாலக்கடலைத்தாங்குமதிலாக வுய ர்ந்த திரிகூடமலையில் வடபக்கமாகச் சித்திராநதி நமதருளா கத் தோன்றி நினைத்தவர் யாவருக்கும் பாவமோசனஞ்செய் து நிற்கும், அந்தச் சித்திராநதியில் மூழ்குவாருக்குத் தானந் தருமம் தவம் வேறு செய்யவேண்டா. ஞானமுங் கலவி நலங்களும் பொருளுங் கிடைக்கும். தேவபதவியும் வேண்டும் வரங்களும் அந்த நதியே கொடுத்தருளும்.

திரிகூடமலைக்கு வடக்கு முகமாகத்தோன்றும் சித்திரா நதி திருமணக் கோலங்காண நம்பால் வந்தது. அங்குப்போ தற்கு அதையும் விடுப்போம். அந்த இடத்து அந்நதியிலே மூழ்கி, யகத்தியமுனியே! யரியதவஞ்செய்வாயாக'' என்று ஒரு பன்றியைத் தொடர்ந்து வேடன் ஒரு துறையிலே வீழ்ந்து மோக்ஷம் பெற்றதும் தலம் தீர்த்தம் மூர்த்தி வடவருவி சத்திபீடம் குறும்பலா பிலத்துவாரம் சித்திரசபை முதலியவற்றின் மான்மியமும் அருளிச்செய்து "உலகமெல்லாமொடுங் குங்காலத்துங் கெடாத புடார்ச்சுன புரத்திலே யிருப்பாய் அங்கே நாமே பிரமனாகி யுலகெல்லாம் படைத்து விஷ்ணுவாகிக் காக்கின்றோம். முனிவனே! யங்கே விஷ்ணுவாகியிருக்கு நம்மைப்பணிந்து சிவலிங்கமாக்கி மகுடாகமப்படி பூசை செய்து நமது மணக்கோலமுங்காண்பாய். திரிகூடமலைச்சாரலிலே யைஞ்ஞூறு யாகஞ்செய்து நான்கு வேதங்களும் பரவுஞ் சித்திர சபையிலே நமது நடனமுங்கண்டு திருக்குற்றாலத்தை வணங்கி யப்பாற்போய்ப் பொதிகை மலையிலிருப்பா'' யென்று அருளிச்செய்தலும், அவரை முனிவரெழுந்து வணங்கி வலஞ்செய்து, விந்தமலை வாதாவிக் கிடப்புயந்துடிக்க அவர்களை யொடுக்கும் வரமொன்று பெற்றுத் திரும்பவும் பணிந்து தீர்த்தம் வேண்டுமென்று காவிரி நதியையும் வேண்டுதலும், அந்நதி: சிவபிரானிடத்தில் "பெண்பாலாயுள்ளார். ஆண்பாலார் பின் போகலாமோ?'' வென்றுவினவ, அவர்

சொல்லுவார் "என தன்பனிருவினையை வென்றவன்; இவன் பின்னேகலா" மென்றனர். "நதிமாது நான்றிரும்பி வருங் கால மெப்போதென்று கேட்க, எம்பிரான் "அம்முனிவன் குறித்தகாலம் வரலா" மென்றனர். உடனே அகத்திய முனிவர் விடை கொண்டு புறப்பட்டுத் தென்றிசைக்கண்வந்து பொதிகை மலையிலிருக்கும்போது வடதிசையுந் தென்றிசையும் அமர் நீதிநாயனார் கோவணத்தின் பொருட்டாக ஏறு மொருதுலையினிரண்டு தட்டுப்போலுஞ் சமமாக இருந்தன. அதுகண்டு தேவர்களெல்லாரு மெம்பெருமானை யிமயமலையிலே பணிந்து முழங்கினர். அப்போது மேகம்போன்ற கூந்தலையுடைய பார்வதியை மணக்கோலஞ் செய்யத் தொடங்கினர்.

மாதர்கட்கு அறியாமை யியற்கைக்குணமாதலா லதனுலோ? உலகத்திலவரவர்கள் நினைத்த அவளவிலே யெம்பெருமாட்டிதோன்றுவள், அதனுலோ? எல்லாவுலகமுமீன்று அழகுக்கழகாயிருக்குமவளை யலங்காரஞ் செய்யத் தொடங்கிப் பூருவத்திலே செய்த பூசாபலத்தா லிலக்குமி கங்கைப் புனலாற் பார்வதியை யபிடேகஞ்செய்து வஸ்திரம் விபூதிதரித்து மேகமு முறவுகொள்ளுங் கூந்தலாகிய இருளின்மேலே நக்ஷத்திரங்கள் மொய்த்தாற்போலப் பலபூமாலைகள் புனைந்து அழகு நிறைந்த மேகத்திலே மின்னலைத்தளையிட்டதுபோல ச்சூரியப்பிறை சந்திரப்பிறை யென்னும் பணிகளைத்தரித்து

க் கூந்தலாகிய மேகம் நுட்பமாகிய மழைத்துளிகளைத் துளி த்தாற்போல முத்தாரத் தொங்கலைத் தொங்கவிட்டு நெற்றி ப்பட்டத்தையுங் கட்டி யொரு பிறைச்சந்திரன்மே லிரண்டு சூரிய ருதித்தாற்போல நெற்றியிலே *யிருவகைத் திலக முமிட்டுப் பற்களுக்கு நிகராக முத்தொன்று ஒரு வூசியினின் று தவஞ்செய்தல்போல முத்தாலாகிய மூக்கணியையணிந்து கண்ணாகிய கடலினின்றும் பாய்கின்ற சுறுமீனை யொத்து லாவக், காதிலே மகரக்குழையைத் தரித்து அந்தக் குழையூடு ருவிச் சென்று கூந்தலினும் பாய்கின்ற கண்ணாகிய பாணம் மேலும்போய்க் கயிலை நாயகர் மனத்தைக் கவலையடையச் செய்யுமென்றோ? வயிரமிழைக்கப்பட்ட கொப்பென்னுமா பரணத்தைத் தடையாகக் காதுகளிலே பூட்டி வலம்புரிச் சங்குபோன்ற கண்டத்திலே யணியுமங்கல நாணைக்கீழே தா ங்குதற்கு மார்பிலே பதக்கமணிந்து மங்கலமான செங்கைக ளிலே கங்கணம் சரிவளையல்களையிட்டுக் கண்ணாகிய கடலை வலஞ்செய்கின்ற மேகம்போலவும் அந்தக் கடலினின் றெழு ம் விடம்போலவுங் கண்ணைச்சூழக் கரியமையெழுதிச் சந்திர னை வைத்தாற்போலும் புனைந்த வெள்ளிய வளையலிடுதற்கா கக்குவிந்த தாமரையை (குவிந்தகையை)ச் சூரியனைவைத்த லர்த்தினாற்போலப் பொன்னாகிய கணையாழியை (மோதிரத் தை) விரலிலே யணிந்து எல்லாவுலகமும் பெற்று முதிராத

* இருவகை—சந்தனம், குங்குமம்.

கொங்கைகளே! சிவபிரான் உங்கள் சமயத்தைத அல்லது உங்கள் அழகை நோக்கப்பொருந்திய தவத்தையடைந்திரென்று சொல்லி, யாபரணங்கள் அக்கொங்கைகளைமுத்தியிடுதல்போல முத்தாரங்களை யணிந்து மலைகளின் முளைத்த வல்லிக்கொடியினையுங் கரும்பையு நிகர்க்கும்படி யக்கொங்கைகளிலே குங்குமத்தாலுங் கஸ்தூரியாலுந் தொய்யிலெழுதி விதவிதமாகிய மேகலாபரணங்களு மரிதாகிய மெல்லிய வஸ்திரமும் இடையைச்சூழப் புனைந்து அதனை வருத்தஞ்செய்து, பூவுமாபரணமுந் திருமேனியிலே பொதிந்து, அது கண்டு இடையினியென்ன செய்யுமென்றேங்குதல்போலப் பாதங்களிலே முழங்குகின்ற சிலம்பு பாதசரஞ் சதங்கை தண்டைகளைப் புனைந்து நின்று மணமகளாகிய பார்வதியை வலஞ்சுற்றிவந்து தெய்வம் பராவிக், கருப்புர தீபஞ்சுற்றித் திட்டி தோஷம் போக்கித் திருவடியை வணங்கி நின்றனள்.

அப்போது விவாக முகூர்த்தகாலம் வந்ததனாலே சத்தருஷிகளும் வந்து இமயவரசனை நோக்கிப் "பெண்ணைமணவறைக் கழைத்துவருக"வென்னலும், அவனது உத்தரவினால் மலைக்குல மங்கையர் மணவாட்டி முன்பு சென்று தெரிவிக்க, அவளும் விரைந்தெழுந்து சாசுவதி யிலக்குமி யிரண்டு பக்கமும் வணங்கிவர அவ்விருவர் கைகளையும் பற்றிக் காலை மாலையேத்துவார்க்குச் செல்வங் கல்வி மோக்ஷந்தருந் தனது கரங்களி னியல்பைக் காண்பித்துச், செம்பஞ்சுக்குழம் பூட்

டிய பாதங்களில் இந்திராணி பூக்களைச் சொரியப் பலபல சில ம்பு முதலியவை பைப்பையவென்றொலிக்கத் திலோத்தமை வஸ்திரந் தாங்கிவர வீர லக்குமி பக்கத்திற் காவல்கொண்டு வரக் கங்கை முதலிய பெண்கள் சாமரமசைத்துச் செல்ல உருப்பசி படிக்க மேந்த *யோகினி வெற்றிலைப்பை சுமந்து வர மேனகை நடைப்பாவாடை விரிக்க எவ்விடத்தும் மலை மடந்தையர் மங்கல வாழ்த்தெடுப்ப நாகருலகத்துப் பெண் கள் இரத்ந தீபங்களேந்த அன்ன நடையும் வெட்கமுறப் பூ ங் கொம்புகளினடுவே பொற்கொடிபோலத் துவண்டு இளம் பெண்யானைபோல நடந்து, தன் குலத்திரளினைக் கொங்கை கள் காட்டக் குணப்பெருக்கத்தைத் திருமேனி காட்ட நன் மைப்பெருக்கினைச் சுமந்து வளையு மன்றலர்ந்த பூங்கொம்பு போலப் பூமியிலே தாழ்ந்திறைஞ்சிச் சிங்காதனத்தி லெம்பி ரான் வலப்புறத்திலே வந்து மதியுடன் விதியிருந்ததுபோல விருந்தனள். மண் விண் முதலிய வுலகத்திலே புத்திரப்பே று பெற்றவரிற் பெண் பெற்றாரடையாத பெரும் பேற்றை யிமய வேந்தன் பெற்றனன். இக்காட்சியாற் பெறும் பே று முழுதுங் கண் பெற்றோரெல்லாமன்று பெற்றனர்.

இவ்வித நிகழுங்காலத்தில் இமய வெற்பரசியாகிய மே னை யாகாய கங்கை நீரால் மணமகனாகிய தம்பிரான் திருவடி வடித்தாமரைகளை விளக்கிச் சந்தனத்தினாலுமலராலு மருச்

---

* யோகினி – காளி.

சனை செய்தனள். அதன்மேல் இமய ராசன் மகளாகிய பார்வதியின் சிவந்த கையாகிய தாமரை மலரைக் கிருபா சமுத்திரமாகிய மணவாளர் கையிலே பொருந்த வைத்து மங்கலச் சொல்லால் வாழ்த்தி யுலகவாழ்க்கையாகிய பயிர் தழைய த்தாரை நீர்வார்த்தனன். முரசு பேரி துடி தடாரி முதலிய வாத்தியங்களும் வேதங்களு மங்கலச் சங்கங்களும் முனிவர ராசியும் நடன கீதங்களும் குரவையும் எட்டுத் திசையினும் பேரொலியாக முழங்கின. அந்தத்திருமணக் கோலக்காட்சி கண்டவரெல்லாரும் ஆனந்தக் கூத்தாடினர். ஆர்த்தனர். தலைமேற் கைகுவித்தனர். பேரானந்தத்துறையிலே மூழ்கி மூழ்கிப் பரமகீதம் பாடினர். பரவினர். அழியாத வின்பந்தேடினர். பிரமனாகிய உழவன் மணச்சடங்காகிய ஏர் பூட்டி யோமஞ்செய்கின்ற இடம் வயலாகச் சமித்துமுதலிய திரவியங்கள் விதையாக விதைத்துப் பசுவினெய்யாகிய நீரை வார்ப்பவார்ப்ப, யாகாக்கினியாகிய பயிர் வலஞ்சுழித்து மேலெழுந்தது. கலியாணமுரசமுழங்க வலம்புரி யொலிக்கப் பிரமன் கிரியைசெய்ய வேதமங்கலநாண்(திருமங்கலியம்) பார்வதி கழுத்திலேதரித்து அவள் கையைப்பிடித்து மணக்கோலங்காட்டி யெம்பிரானனவர் வானவர் வாழ்த்த இருந்தனர். ஆதிசேடன் ஆயிரப் பெருந்தீபமேந்த இலக்குமி சரசுவதி மங்களம் பாட மலைமகளாகிய மணவாட்டி பின்னேவர மணமகனாகிய பெருமான் அக்கினியை வலஞ்சுற்றிவந்து பொரி

யிறைத்து, ஓமம் நிறைவேற்றி நாயகி தனங்கள் தமது புயத்தைக் காணுந்தோறும் பருவதங்கள்போலப் பூரிப்ப அவள் கையைப் பிடித்த திருக்கரத்தா லவள்காலைப் பிடித்தெடுத்து அம்மியிலே வைத்து விண்ணிலே யருந்ததியைக் காண்பித்து விவாகமண்டபத்தைக்கடந்து உள்ளேசென்று சிறந்தவொரு மணவறையிலே மனைவியுடனே யெழுந்தருளியிருந்தனர்.

அப்போது இமயமன்னன் பலாச்சுளையும் பாலும் வாழைப்பழமுங் கருப்பம்பாகும் மாம்பழமுந் தேனு மமிழ்தம் போலத் திருத்தஞ்செய்து *பாசனத்தமைத்துக் கொண்டு வந்து வைக்கப், பெருமான் திருக்கையாற்றீண்டி மகிழ்ந்தன மென்றலும், உலகமெல்லாம் வயிறு நிறைந்தது. அதன்மேல் வாசனைச்சந்தனம் பன்னீர் முதலியவைகொண்டுவந்துவைக்க அவற்றையு மெம்பிரான் பரிசித்து மகிழ்ந்து சேடத்தைத் திருமணங் கண்டு நின்றாருக்கெல்லாங் கொடுக்கும்படி யருளிச்செய்தனர். நின்மலரான மாப்பிள்ளை யநுபவித்த மிச்சத்தை யிந்திரன் திருமால் பிரமன் உருத்திரர் பூதர் முதலியோரு மேனையு மவள்சுற்றத்தாரும் பெருமுழக்கத்தோ டநுபவித்துச் சென்னியிலேயுந் தெளித்துக்களித்தனர். தருமவழியிலே நின்றார் பெருமையும் துறவறத்திலே நின்றார் பெருமையும் இல்லறஞ் செய்வாரிடத்திலே யிவையவதனாலே யிதுவே நல்லறமென்று வானமுஞாலமுந் தெளியக்காட்டிப் பார்

* பாசனம் - உணவுவைக்கும் பொற்பாத்திரம்.

வதியை மணஞ்செய்து சிவபிரான் மாமனுகியமலையரசன் வணங்க மாமியாராகிய மேனைமகிழ வீற்றிருந்து தேவர்கள் வெண்டுகோளின் பொருட்டு மன்மதனுக்குயிர் கொடுத்தருளி மனைவியுடன் பிரம விஷ்ணுக்கள் போற்றக் கயிலாசமலையின்கண் வந்து சிங்காதனத்திலெழுந்தருளி யிருந்து திருமணந்தரிசிக்க வந்தோரனைவருக்கும் அவரவரிருப்பிடஞ் செல்ல விடைகொடுத்தருளினர். இங்ஙனங் கயிலாயமலையிலே நெற்றிக்கண்ணுடைய கருணைமேகம் இமயமலை மின்னெருபாலிருக்கத் தண்ணளியாகிய மழைபொழிதலாலே யூர்வன நிற்பன பறப்பன நடப்பன முதலிய வுயிரெல்லாம் பயிராய்ப் பதினுலுலோகமுந் தழைத்தன.

எம்பிரான் யோகத்திலிருந்தநாளி லெல்லாரு மின்பத்தை யிழந்திருந்தனர். பார்வதியை மணஞ்செய்து போகத்திலிருந்தநாளி லின்பத்தை யநுபவித்தனர்; ஆதலாலவரையன்றி யாதொரு செயலும் யாருக்குங் கிடையாது. சூரபன்மனுலே துன்பஞ் சகியாராய் மேருமலையிலே மறைந்திருந்த பிரமன் விஷ்ணுவாதி தேவர் கயிலாயத்தின் வந்து முறையிடுதலும், பார்வதி சமேதராகிய நிருமலர் கருணைகூர்ந்து, ஆறு திருமுகங்கள் இரகசியமாகக்கொண்டு ஆறு அக்கினிப்பொருள்களைத் தமது ஆறு நெற்றிக்கண்களினின்றுந் தோற்றுவித்தனர். தேவர்களுய்யவந்த அப்பொறிகளாறையும் வாயுவு மக்கினியுந் தாங்கிக்கொண்டுபோய்க் கங்காநதியிலே சேர்க்க அந்நதி இம

யமலையிலுள்ள சரவணப்பொய்கையிலே கொண்டுபோய்ச் செலுத்தியது. அப்பொறிகளாறும் பொய்கையிலுள்ள ஆறு தாமரைப்பூக்களின்மேற் சிவபிரான்றிருவருளாலே யாறுகுழந்தைகளாகிக் கார்த்திகை முதலிய ஆறு நக்ஷத்திரங்களாகிய தாய்முலைப்பாலுண்டு வளருங்காலத்தில் இமயமங்கையாகிய பார்வதி யெம்பெருமானுடனே யாங்குச்சென்று மைந்தனென்றழைத்தெடுப்ப, ஆறுவடிவமுமொருவடிவமாகி முகங்களாறுமிருந்து பார்வதிதேவி முலைப்பாலுண்டு கந்தவேளெனப் பெயர்பெற்றுக் கயிலாசத்திற்போய் வளர்ந்திருத்தலுஞ், சில நாட்சென்று அக்கந்தக்கடவுள் அண்டங்களெல்லாமதிர முழங்கிக்கொண்டு நாரதர் யாகத்திலிருந்துவந்த ஆட்டு வாகனத்தின் மேலேறி நவவீரர்சூழ மேடராசியிலே சூரியன்வந்தாற்போல இந்திரன் முதலிய தேவர் யாரும் பின்னிட்டோடக் கதிநடாத்திப் பின்பு பிரமாவைச் சிறையிலிட்டு அதன்மேல் விடுவித்து, அப்பாலிந்திரன் முதலானவரிடுக்கண் தீர்ப்பதற்குத்திருவுளங்கொண்டு நீலகண்டத்தையுடைய நம்பெருமானுரேவியருள, இந்திரனை மயில்வாகனத்திலேறி யக்கினியாகிய கோழிக்கொடியைத் தாங்கி யுருத்திரர் கொடுத்த பதினோராயுதங்களையும் பதினொருகரங்களிலே தாங்கிச் சிவபிரானருளிய ஞானசத்தியாகிய வேலாயுதத்தை யொருதிருக்கையிலே யேந்தி யிரண்டாயிரம் பூதவெள்ளங் தம்பிமாருடன் சூழத் தேவர்கள் வியாதிக்கு மருந்துபோல வெழுந்தருளி

வந்து சமுத்திரத்தை வற்றச்செய்து கிரவுஞ்சமலையைப்பிள
ந்து அசுரர் சேனையாகிய வெள்ளத்தைவேலாயுதமாகிய வட
வாமுகாக்கினிக் கிரையாக்கி மாமரமாகிய சூரன் வீரத்தைப்
பிளந்து விழ்த்தித் தேவர்களைச் சிறைமீட்டுக் கருங்கடலின்
மேலொரு சூரியன் வெண்பிறையுடன் றோன்றினாற்போல
மரகதநிறத்து மயில்மேலே யேறி வெள்ளிய கோழித்துவசந்
தாங்கித் தேவர்கூட்டத்துட் சென்று திருச்செந்தூர்த் தல
த்தை யடைந்து பின்னர்த் திரிகூடமலையிலே தரணி பீடத்தி
லே நீங்காதிருக்குந் திருக்குற்றாலநாதரைப்பணிந்து போற்றி
த்திருப்பரங்குன்றத்தின்கட்சென்று தெய்வயானையை விவா
கஞ்செய்து அதன்மேல் திருத்தணிகையிற்போய் வள்ளியம்
மையை மணந்து மலைகடோறுந் திருவிளையாடல் புரிந்து கயி
லாசத்தையடைந்து கந்தவெற்பிலிருத்தல்போல மீண்டு திரு
க்குற்றாலத்தை வணங்கி யதன்பக்கத்திலுள்ள இலஞ்சியிலே
குமாரக்கடவுளென்றுசொல்ல வெழுந்தருளி வீற்றிருந்தனர்.
சிவபிரான்திருமணக்கோல சரிதமிதுவென்று நைமிசாரணிய
முனிவருக்குச் சூதமுனிவரருளிச் செய்தலும், அவரை யம்
முனிவர் " சுவாமீ! அகத்தியமுனிவர் புதுமையாவுந் தொகு
த்தருளிச்செய்தீர். இனியவற்றை வகுத்துச் சொல்லியருள
வேண்டு"மென்று கேட்க அவ்வாறே சூதமுனிவர் சொல்லு
வாராயினர்.

இரண்டாவது திருமணச்சருக்கம் முற்றிற்று.

மூன்றாவது

## திருமால் சிவபிரானான சருக்கம்.

ஆயிரத்தெட்டு அண்டங்களையாண்டு அரசுபுரிந்த சூர பன்ம னிறக்கக் கூரியவேலாயுதத்தை யேந்தித் திருச்செந்தூ ரின்கண் ணெழுந்தருளியிருந்த குமாரக்கடவுளுக்கு அரிபிர மேந்திராதியர் சபையினடுவே தேவகுருவாகிய வியாளன் வாய்புதைத்துப் போற்றி விண்ணப்பஞ்செய்தது திருக்குற் றாலத்திலே திருமால் சிவபிரானாகிய மான்மியமென்றெடுத் துச் சூதமுனிவர் சொல்லுவார்:— படித்துநிறைந்த பலகலை யிலும் வல்லவர்க்குக் கதி காட்டுகின்ற முனிவரரே ! கயிலா சமலையின் முதிர்ந்த கல்லாலவிருக்ஷத்தின மர்ந்த குறும்ப லாவில் வீற்றிருக்கு முதற்கடவுளைப் போலுயர்ந்த கருணை மூர்த்தியுங் குற்றாலத்தைப்போலு மமர்ந்த தலமும், அகத் தியரைப்போல முனிவரரும், திரிகூட வடவருவியைப்போல மலைகளிலே நதியுந் திரிலோகங்களினுமில்லை. மூன்று லோகத் திலுள்ளாரு மிமயமலையிலே கூடியதனாலே வடபூமி தாழத் தென்பூமி யுயர, அவற்றைச் சமமாக்கும்பொருட்டுப் பிரமன் மாலிந்திராதியர் கூட்டமெல்லாமெதிர்நிற்கவும், சிவபிரான்றி ருவாக்கால் நீ போவாயென்று கட்டளையிட்டருளப் பெற்ற குறுமுனிவரது பெருமையை யார் சொல்லவல்லவர். மேலரு ளிச் செய்யப்பட்ட கட்டளையைத் தாங்கி யகத்தியமுனி வர் இமயமலையை நீங்கித் தென்முகங்கொண்டு நவகண்டங்க

ளுளொன்ருகிய குமரிகண்டத்தி லாயிரயோசனை தூரத்துள் வந்து வெற்றித்தண்டமாகிய கைவிளக்காற் கிரவுஞ்சமலைபி னிருட்கூட்டத்தைக் கடக்கும்போது அம்மலையை நோக்கி யெம்பிரானுகிய குமாரக்கடவுள் சத்திவேலாலே நீருய்ப்போ கக்கடவை யெனச்சபித்துக், கேதாரமலைக்கண் வந்து சிவபி ரானைப் பணிந்து விதர்ப்பதேசத்தைச்சேர்ந்து அதைக்கட ந்து காசி க்ஷேத்திரத்தையடைந்து மீண்டு நாரதமுனிவர் சூ ழ்ச்சியினுலே மேருமலையுடன் விரோதித்துப்பருத்தெழுந்து சூரிய சந்திரரைச் செல்லவொட்டாமலுயர்ந்த விந்தமலை தா முஞ்செல்லுதற்கரிதாய் *உயர்ந்தோர்க்கும் தாழ்ந்தோர்க் கும் மூன்று இரண்டு ஒன்றென்னச் சொல்லுமார்க்கமு மில் லாமற் கீழோர்க்குவந்த செல்வச் செருக்குப்போலிறுமாந்து நின்றதுகண்டு, அம்மலை யுயர்ந்த அவ்வளவு கையை யுய ர்த்தித் தாமரைமலரை முடியிலே கவிழ்த்தல்போல மலையுச் சியிலே பொத்திப் பாதலத்திலே யழுத்தலும், விந்தமலை நடு நடுங்கி "ஈசுரசிந்தையுடையாய் பிழைக்கும்படி கருணைசெ ய்க" என்று தலைவணங்கியது. வருமுன்னேயறிவர் மேலோர்

---

*உயர்ந்தோர்க்குந் தாழ்ந்தோர்க்கும் ஒன்று இரண்டு மூன்றுமார் க்கமென்று சொல்லுதற்குப்பொருள் - உயர்ந்தோரு முயர்ந்தோரு ஞ்சந்திக்கில் வழிமூன்று உயர்ந்தோருந் தாழ்ந்தோருஞ் சந்திக்கில் வழியிரண்டு தாழ்ந்தோருந்தாழ்ந்தோருஞ் சந்திக்கில் வழியொன்று என்பது. உலகவழக்கிற் காண்க.

வந்தாலறிவர் கீழோர். அப்போது முனிவர் "விந்தமே! நான் பொதியமலைக்குச்சென்று கயிலாயமலைக்குத் திரும்பும் வரை யிவ்வாறு உச்சியளவு பூமியிலே யழுந்திக்கிடக்க" வென்று சொல்லிச், சிவபிரானுக்கு அரைநாணும் வஸ்திரமுமாகிய பாம்பு மிருகங்கள்சஞ்சரிக்குங் காட்டிற்போய் நம்புகின்றவரைப்பகைசாதித்து வருத்தஞ்செய்யும் வில்வலன் வாதாவியிருக்கும் வனத்திற்சென்றனர். அதுகண்டு சுடுகாடு தனக்குப் பின்வருவதை யறியாத வில்வலன் தற்காலம் பின்விளைவறு தெரிந்திருந்தும் முற்காலத்திலே நமது குலத்திற் பிறந்த விருத்திராசுரனைக் கொல்வதற்குச் சமுத்திரத்தை யுழுந்தளவாக்கி யுண்ட இம்முனிவனை வெல்லுதற்கிதுவே சமயமெனக் குறிப்பாலுணர்ந்து கள்ளத்தனமாகத் தவவேடம் பூண்டு வந்து குறுமுனிவருக்கு முன்சென்று வணங்கி விருந்துசொல்லி யன்னமுதலியவை சமைத்துத் தன் றம்பியாகிய வாதாவியை ஆடாக்கியறுத்துப் பொறிக்கறிபண்ணி முனிவரைப் போசனஞ் செய்வித்துப் பிரமாவின் வரத்தினாலே யவர் வயிற்றைக் கிழித்து வெளிவரும்படி யொருதரம் வாதாவி யென்றழைத்தனன்,

உடனே கறியாகி அகத்தியர் வயிற்றினுட்சென்ற வாதாவி மறி (ஆடு) ஆகி வயிற்றைக் கலக்க, அவன் வஞ்சனையை முனிவரறிந்து சிவபிரான்வரத்தாலே தமதுகையினாலே வயிற்றைத் தடவுதலுஞ், சிவபிரானுண்டவிடம்போல வா

தாவி வயிற்றினுள்ளே சாம்பராயினன். முனிவர் வில்வலனை யுந் தருப்பைப்புல்லினுலே கொன்றுவிட்டுக் கோதமிநதியிலே ஸ்நானஞ்செய்து மல்லிகார்ச்சுனத்தில்வந்து வணங்கி மீட்டுந் துங்கபத்திரி நதியிலே தோய்ந்து, காஞ்சி சிதம்பரம் முதலிய க்ஷேத்திரத்துக்குச் சென்று போற்றி மணிமுத்தா நதிப்பதி யாகிய விருத்தாசலத்திற்போய்ப் பரவி யப்பாற்சென்றனர். அப்போது வில்வலன் வாதாவி பிரமச்சாயை காடெங்குந் தொடர்ந்து வழிப்பறி பறிக்குங் கள்ளர்போல வந்தலேத்து இரண்டு பிராமணப்பிள்ளைகள்போ லுருக்கொண்டுவரும் அடிக்கும் ஏகும் எவ்விடத்திலிருந்தும் பகை விளைக்கும் பழி குறிக்கும் வழி மறிக்கும். இவற்றைத் தீர்க்கும்பொருட்டுக் குறுமுனிவர் கொங்குநாட்டையடைந்து சிவபிரானைப் பூசனைசெய்திருந்தனர்.

இவ்வாறிருக்கத் தேவேந்திரன் சூரபன்மனுக்குப் பயந்து சீகாழியில்வந்து நந்தனவனம் வைத்து அதற்குத் தண்ணீர்விரும்பி விநாயகரைப் பூசைசெய்ய வாரம்பித்துப் பஞ்சகௌவியம் *ஐந்துபழச்சாறு ஐந்துதிரவியம் பஞ்சாமிர்தம் கஸ்தூரி சந்தன முதலியவற்ருலபிடேகஞ் செய்து வஸ்திராபரணம் மலர்மாலே சாத்திப் பாயாசம் அன்ன மோதகம் வடை யவல் கரும்பு பலகாரவருக்கம் முப்பழம் அப்பம் நிவேதனஞ்செய்து தூபதீபங்காட்டிக் கண்ணுடி குடை சாமரமே

* ஐந்துபழச்சாறு முதலியவற்றைச் சிவபூசைவிதியிற் காண்க.

ந்தி யாயிரநாமமுமெடுத்தோதி மந்திரம் ஓமமியற்றிச் சயசய வென்று தேவர்கள் வாழ்த்த யானைமுகப்பெருமானைப் பாத ங்களில் வீழ்ந்து பணிந்து திரண்ட மலர்மாலையுமறுகும் அணி பவனே! பார்வதி புத்திரனே! நடனஞ்செய்கின்ற நூபுரமணி ந்த பாதங்களையுடையாய்! நதிபதி நிதிபதி யதிபதியே! கடல் மடைபோலு மதமொழுக்குகின்ற யானைமுகமுடையாய்! கய முகாசுராரியே! குடம்போன்றவயிறுடையாய்! குணமமைந்த சிவபிரான் மைந்தனே! கணபதியே! யென்று பலபல நாமங்க ளையுந் துதித்து அருச்சனைசெய்தலும், அதை மகிழ்ந்து விநா யகக் கடவுள் ஐந்து கரமும் நான்கு புயமுங்கொண்டு சூரி யோதயம்போலத் தோன்றிநிற்க, இந்திரன் கண்களெல்லாந் தாமரைமலர் போலலர்ந்து தரிசித்து வணங்கி வீழ்ந்தனன். அவனை யவ்வெம்பிரான் கடைக்கணித்து "உனது பூசனைதோ த்திரமெல்லாவற்றையு மகிழ்ந்தோம். உனக்கு வேண்டும் வர ங்கேட்க" என்றருளுதலும், மீட்டு மிந்திரன் வணங்கித் து தித்துச் "சுவாமீ! சிவார்ச்சனைக்குரிய திருப்பள்ளித்தாம நந் தனவனங்கள்வாடின; அவைகள் தழைக்கும்பொருட்டு, அக த்திய முனிவர் கையிலே காவிரிநதி வந்திருந்தனள்; அவளை மீண்டு வரப்பணித்தருள்க" என்றனன். விநாயகக்கடவுள் அவ்வரந்தந்தருளிக் காக்கை யுருவங்கொண்டு அகத்திய ரிரு ப்பிடத்துக்குப் போய் நிற்க, அம்முனிவர் கரத்தை நீட்டி விரட்டுதலும், அவர்கமண்டலத்திலிருந்த நீரை மூக்கினாலே

காக்கையாகிய விநாயகர் கவிழ்ப்ப, அவரருள் வழியே பூமி யின்மேற் காவிரிநதி பிரவேசித்துச்சென்றது.

அதன்மேல் விநாயகர் ஒரு பிராமணப் பிள்ளையாகி நிற்ப, அவர் தலையிலே முனிவர் அடிப்பதற்குக் கையை யோங்குத லு, மதற்குப் பயந்து அப்பிள்ளை யோடுதல் போலத் திசைக டோறு மோடிப் பூமியிலும் சத்த சாகரத்திலும் மகாமேரு விலு மிதித்துத்தாவி யாகாயத்திலே குதித்துச்சாரிவிளைத்து முனிவரோடு பலபல திருவிளையாடல் செய்தலும், அகத்திய ரிளைத்து நின்று அந்தப் பிள்ளை மகிமையை நோக்கி எம்பெ ருமானே? என்றனர். அவரது தளர்ச்சியை யானைமுகப்பி ரான் கண்டு, ஒற்றைக் கொம்பு மிரண்டு பாதமு மூன்றுகண் ணும் நான்கு புயமும் ஐந்துங்கையும் அறுகம்புல்லணிந்த திரு முடியுந் தோன்றக் கருணையுட னெதிரே நின்றனர். அது கண்டு நம்பெருமானே? இதற்காக வந்தனர். நான் கொடுமை செய்தேன். அந்தோ! எம்பிரான் தலையிலே தாக்க எடுத்த கையிதுவோ? வென்று தமது தலையிலே இரத்த முண்டாகக் குட்டிக் கொள்ளும் அகத்தியரை விநாயகர் நோக்கி "மாதவ னே! பயப்படாதே நமது தலைவருந்த வுன்றலையிலே குட்டு மிதைப் பூசனையாகக் கொண்டோம். இவ்வாறுசெய்வார்க்கெ ல்லாம் மோக்ஷமுஞ் செல்வமுங் கொடுக்கின்றோம். உனக்கு வேண்டும் வரங்கள் கேட்பாயாக" என்றருளிச் செய்தனர். முனிவர் "சுவாமீ! யடியேன் கமண்டலத்திலே நீர் நிறையச்

செய்யவேண்டு" மென்று பிரார்த்திக்க விநாயகர், மேகஞ் சமுத்திர சலத்தை வாரியுண்டாற்போலத் துதிக்கையை நீட்டி யாகாய கங்கையைப் போலுங் காவிரிநீரை யள்ளிக் கமண்டலத்திலே பெய்து நிறைத்தனர். கமண்டலத்து நீர்ப்பெருக்கமும் பூமியிலே காவிரிநீர்ப்பெருக்கமும் பார்த்துச் சிவபிரானினு முயர்வாம் புதல்வன் மெய்யருளென்று துதித்துச் சிரகரகம்பஞ் செய்து தெண்டனிட்டு விடைபெற்றுத் தென்றிசை நோக்கி யகத்தியமுனிவர் சென்றனர். பெருச்சாளி வாகனமேறி விநாயகரும் வடதிசை நோக்கி யெழுந்தருளினர்.

காவேரி நதித்துறைபொருந்திய கும்பகோணம் திருவாரூர் திருவையாறு திருவலஞ்சுழி திருவிடை மருதூர் திருவரங்கம் திருவானைக்கா திருவெண்காடு வேதாரணியம் முதலிய பலதலங்களி லகத்திய முனிவர் சென்று பணிந்து சிதம்பரஞ் சபா நடேசர் திருவடிகளைப் போய் வணங்கிக் காவேரி சங்கமத்துறையிலே ஸ்நானஞ் செய்து சேது இராமேசுரம் கொடுங்குன்றம் காளையார்கோவில் திருப்புத்தூர் எடகம் திருவாடானை திருப்பரங்குன்றம் மதுரை திருநெல்வேலி முதலிய க்ஷேத்திரங்களைத் தரிசித்து ஆங்காங்குச் சிவலிங்கப்பதிட்டைசெய்து பூசித்துப் பொதியமலைக்குட் சென்று வடதிசைக்கனத்தையுந் தென்றிசை மெலிவையுந் தீர்த்துப் பின்னர்ப் பிறவிப்பிணியை நீக்கு மருந்தைக் காணும் பொருட்டுத் திரிகூடமலைச் சாரலை யடைந்து பற்பல காடுகளையுங் கடந்து

திருக்குற்றாலத்தலத்துப் பஞ்சக்குரோசத்தெல்லையிற் புகுத லுந், தென்றற் காற்றுச் சிவமணம் வீசி வந்துலாவக் கண்டு முனிவர் பூருவத்திற் செய்ததவ மினிமேற் பலித்ததென்று புயம்பூரிப்பச்சென்று இத்திரிகூடமலையிலே யாலகாலபானஞ் செய்தவரே விஷ்ணுவாயிருந்தனரென்று *நால்வகைத் தேவ ர்களும் போற்றுமந்நகரத்தை வலஞ்சூழ்ந்து பாற்கடல் கிட ந்ததுபோலும் தாமரைத் தடாகங்களைக் கண்டு அத்தடாகக் கரையோரம் அகத்தியமுனிவர் நெருங்குஞ் சமயத்திலே நி றைந்த நீர் கரைமேலே தாவி நீண்ட அலைகளையுள்ளே சுருட் டுங் காட்சி புறச்சமயத்தோரை யேகுகவென்று புறங்கையா ல் விரட்டி யகச்சமயத்தோரையுள்ளே வருக என்று விரைந் தழைத்தலை நிகர்க்கும். தடாகக்கரைகளிலே யலைகள்கொழி க்கு முத்தங்கள் விபூதியணிந்த சிவனடியார்கள் வருதல்போ லும், அலைகளினடுவேதுள்ளுங்கயன்மீன்கள் மறையுங்காட்சி யன்னிய சமயிகளிடந்தோறுமொளித்தல் போலும். நீர்த் துறை தோறுந் தவளைகளொலித்தல் முனிவரைக் கண்ட தொண்டரரகர வொலிமுழக்குதல்போலும். ஆகாயத்தினின் றுமமுததாரைகள் பொழிதல் திரிபுராந்தகர் கருணைவெள் ளஞ் சொரிதல்போலும், வயல்கடோறுங் கரும்புகள் வெடி த்தமுத்தங்கள் தம்மிடம் வருகிறவர் போகிறவர் தரத்துக்கு த்தக்கபடி மகிழுங் கணிகைமாரைப்போலவும் பாஞ்சராத்திரி

* நால்வகைத் தேவர் - சூரியர் உருத்திரர் வசுக்கள் மருத்துவர்.

களைக்கண்டு பழிக்கின்ற நகையைப்போலவுஞ் சைவரைக்கண்டு மகிழ்ந்திடு புன்சிரிப்பைப்போலவும் பொலிந்து விளங்கின. சிவந்த நீண்டதோகையாகிய காவியுடை யுடுத்து முத்தாகிய விபூதி புனைந்து தலையிலே கதிர்களாகிய செஞ்சடைபின்னித் தரத்துக்குத் தகவளைந்த செந்நெல் அகத்தியமுனிவரை யீண்டுவரத்தவஞ் செய்தோமென்று வணங்கு மற்ற முனிவர்களைப்போலிருக்கும். சம்பந்தசுவாமிகள் கூன்பாண்டியன் சுரந்தவிர்த்தகாலத்திலே கவர்படுமனத்தையுடைய சமணரைப்போல் வாழைகள் இடைபழம் பழுத்தன. வையைநதியிலே வெற்றியடைந்தவிருப்பமுள்ள வொருமனத்தராகிய அம்மூர்த்தியைப்போலப் பிரகாசிக்குஞ் செம்பழுக்காய்க் கமுகமரங்கள். பூந்தேனைவிரும்பித் தாதளைந்தவண்டுகள் தடத்திலேமூழ்கி நீறணிகின்றசிவனடியாரை நிகர்க்கும். விபூதியணிந்த தொண்டர்கட்கெல்லாம் அன்னமிடுவாரைப்போல மகரந்தங்களைப் பொழியுந் தாழைகள். திருக்குற்றலத்தலத்தெல்லையி லகத்தியர் வருதலுஞ், சூரியன் மறைந்த தோற்றம் பண்டைக்காலந் தக்கன்வேள்விப்பிரயோசனத்தாலவன் கூட்டத்தினின்ற தனக்கு யாது துன்ப மிம்முனிவர் செய்வாரோவென்று அத்தமனமலையிலே போயொளித்தலை யொப்பாகும். தடாகம் வயல்களிரண்டிடத்தும் அரும்புவிரிந்து நீலோற்பலந் திசைதோறு மலர்ந்தகாட்சி. எழுசமுத்திரத்தையு முண்டவனிவனோவென்று மகிழ்ச்சி யெய்தி நீரரமகளிர் பார்ப்பது போன்

றிருக்கும். அகத்தியரைக்கண்டு நித்திரைவிட்டுச் செங்கழுநீர்க்கண்ணுலே நோக்கி யாம்பலாகிய வாய்திறந்து வண்டோசையால் வருகென அழைத்து நீலமலர்த்தாதாகிய சுண்ணப்பொடியைத்தூவித் தாமரையாகிய கரங்களைக்குவித்தது சிறியமாலைக்காலம். அப்போது ஆகாயத்திலே யனந்த நக்ஷத்திரங்கள் தோற்றுவன பூமிதேவிவாட்டந்தவிர்க்கவந்த அம்முனிவரை விண்மடந்தை காண இரண்டுகண்கள் போதாவென்று பல கோடி கண்களைப்பெற்றதுபோலும். மிகுந்த செஞ்சடைகள் சூடி மேனியிலே விபூதியணிந்து முனிவர் கூட்டத்தினடுவே யகத்திய முனிவர் வருதல் போல நிலவுலகத்திலிருள் கெட்டோடச் செக்கர்வானத்திலே நக்ஷத்திரங்கள்சூழச் சந்திரனுதயமாயினுன். அவ்விடத்திலிருந் திராக்காலத்தைப் போக்கி விடியற்காலத்திற் சந்தியாவந்தனஞ்செய்து விபூதி தரித்துப் பஞ்சாக்கர செபம்பண்ணிச் சிவபிரானது தாமரைமலர் போலுந்திருவடிகளை வணங்கித்துதித்துப் பூசைசெய்ய நினைத்து அலைகள் கொழிக்கும் வெள்ளிய மணலிலிங்கமமைத்து *நால்வகை மலர்களாலருச்சித்துத்துதிப்ப வெள்ளியசங்கமுழங்க எழுந்துவந்து குறுமுனிவரவ்விடம் விட்டுப்பெயரும்போது கோழிகள் கூவுதல் சைவமுனிவன் வருகின்றுனென்று அத்தலத்திலுள்ள விஷ்ணுசமயத்தார்க்குச் சொல்லுதலைப்போலும்,கொன்றைமரம் †திருப்பள்ளித்தாமங்கொடுக்கக் காந்தளா

* நால்வகை மலர் - கோட்டுப்பூ கொடிப்பூ நீர்ப்பூ நிலப்பூ.

† திருப்பள்ளித்தாமம் - சிவபூசைக்கு வேண்டுமலர்.

கிய கையாற் சிவார்ச்சனைசெய்ய மாந்தளிராகிய கைகளைக் குவிப்பக் குயில்கள் பல்லாண்டுகூற அளி (அன்பு) பயில்கின்ற பழமையாகிய சோலைகள் பலகடந்து முனிவர் சென்றனர். பறவைக் கூட்டங்களெல்லாம் பாவ புண்ணியங்களை யெடுத்துப் பேசும் யானையுங் கொலை செய்யாமற் சிவபூசைசெய்யும். நரியும் ஆலயத்தை வலஞ் செய்து செல்லும். சைவநன்னெறியாலே பலசாதி வண்டுகளுங் கள்ளுண்ணப்படாத செண்பகப் பூங்காவிலே யம்முனிவர் காலையிலே பன்னிரண்டு மாதங்களினுஞ் சூரிய சந்திர ருள்ளே பிரவேசிக்கக் கூடாத சோலையி னிருள்களெல்லாம் போக்கவேண்டி யவ்விருவருமோருருக் கொண்டு வந்தாற்போலச் சிவந்த சடையும் வெள்ளிய விபூதியும் விளங்கப் புகுந்தனர்.

பிரமன் வரத்தாற்றவமொருவடிவு கொண்டுவந்து சாஸ்திரவராய்ச்சி செய்து சமுத்திர சலத்தைப் பானம்பண்ணிய அகத்திய முனிவர்க்காகப் பூருவத்திலேயுள்ள மால்வடிவ நீங்கிச் சிவவடிவந் தோன்றினாற்போலச் சூரியனுதய மாயினன். மாதவசிகள் பிராமணர் கற்பவர் கல்விச்சாலை தேவர் குலங்களிருக்கு மிடத்தில், வேதம் அங்கம் மிருதி ஞானபோதம் பதினெண் புராணமு முழங்கின. ஒரு பக்கத்திற் கிளிகள் வேதமோதும். ஒருபக்கத்தி லொருகிளிக்கு மற்றொரு கிளியுபநிடதப் பொருளுபதேசிக்கும். வேதசிவாகமப்பொருள்களொருபக்கம் பயிலப்படும். சருகுணையுண்டு தவமியற்றுவர்

தவமணமொரு பக்கத்திலே மணக்கும். முனிவரை நோக்கிப் பிரமாவின் புத்திரனிவனோ வென்று கிளிகளொரு பக்கம் பேசும். இம்முனிவன் பிரமனுக்கு முன்னுதித்தவனோ பின்னுதித்தவனோ? முற்காலத்திலே யிந்தத்தலத் திலிருந்ததவசியோ ? வென்று சாரிகைப் பறவைகளொருபக்கம் பேசும் சந்திரபதவிக்காகச் சாந்திராயண விரதஞ்செய்பவரும் மந்திர முருப்போடுகின்றவரும் தேவபோகத்தை யிச்சித்துத் தருமஞ் செய்பவரும் இந்திர பதவியையுத்தேசித்து யாகஞ்செய்கின்றவரும் திக்குப் பாலகர் பதவியை வேண்டிச் சிவபிரானை வலஞ் செய்கின்றவரும் வித்தியாதரர் சித்தர் கிம்புருடர் முதலியோர் பதவியை விரும்பி நாட்கணக்காகத் தலவாசஞ் செய்பவரும் பூலோகத் தரசை விரும்பிப் புண்ணியம் புரிபவரும் பாதலத் தரசை வேண்டித் தவஞ்செய்கின்ற சர்ப்பக் கூட்டங்களும் பிறப்பிறப்பை விரும்பாமற் சரியை கிரியை செய்கின்றவரும் விருப்பு வெறுப்பற்று மோக்ஷத்தை விரும்புகின்றவரும் ஆகிய அதிசய மனைத்துஞ் செண்பகப் பூங்காவிலே நோக்கி முனிவரவ்விடத்துத் தவஞ்செய்யாமற் சென்ற காலத்துக்கு வருந்துவாராய் விருக்ஷங்கள் பறவை விலங்கு மனிதர் முதலிய சராசரங்களெல்லாந் தேவராகித் தங்கியிருத்தலைப்பார்த்து நகரமெல்லாஞ் சிவபுரமாகக்கண்டு நான்வணங்குதற்கு வாணனைப் போலிரண்டாயிரங் கைகளினிவேண்டுமென்று அவ்வனத்தை விட்டு நீங்கிக் கயிலாசத்தி லிருந்து

வந்த சித்திரப் பூங்கங்கையை நிலையா யிருக்கும்படி சிவபிரா ன்றிருமுடியிற் சாத்துந் திருப்பள்ளித் தாமம் போல ஆங்க மைத்து மலை மார்க்கங்களிற் சென்று அங்கே தங்கு முயிர்க ளெல்லாம் விரோதிக்கும் நெறியைக் காணுமற் பாம்புகளிரு க்குங் குகைகளில் மான்களுடன் புலியையுங் கலைகளோடு மானைச்சேர்ந்த சந்திரனையுங் கண்டு அளி (வண்டு) (அன்பு) விரும்புகின்ற சோலை நின்மலராகிய சிவபிரானைச் சேர்ந்தவர் போல வுயர்ந்த வொளி பரவலால் கற்பகமென்று மேனைய மரங்களென்றுந் தெளியமுடியாமல் திகைத்துநின்று, கல்லெ லாமிலிங்கமாக ஆகாயமெல்லாம் புனல்கள்தூவச் சோலைபூவா லருச்சித்துக் கனிகளாலே யமுதமூட்டக் கூட்டமாகிய ரத்ந தீபங்களேந்த மேகமெல்லா முரசொலிமுழக்குஞ் சிவநெறிப் பெருக்கத்தைப் பார்த்தனர். அதன்மேல் பிரமனைமதியாமற் பிரளயத்தைக் கணக்கிடு வாரும் நரைதிரை யில்லாதவரும் பிறப்பிறப்பற்றவரும் மறப்பு நினைப்பில்லாதவரு மிரவு பகல ற்றவரும் சூரியனெங்குதிப்பனென்று கேட்பவரும் இடை பிங்கலை வழிச்செல்லுஞ் சுவாசத்தைச் சுழுமுனைவழிச்செலு த்திச்சலனமற்றிருப்பவரும் மூலாதார நாடிதிறந்துமேற்போ ய்ச் சிவபிரானுடைப்பற்ற நடனந்தரிசிப் பவரும் நனவிலேபுல கந்தோறு நாடாத தெல்லாம் நாடிக் கனவிலே சஞ்சரிக்கின் றவரும் சுழுத்தியிற்சென்று மனத்தை யடக்குவாரும் மனங் கெடத் துரியத்திற் போய்த்தன்னையுணர்ந்து அதீதமார்க்கத்

தின்மேவித் தலைவனை யாராய்கின்றவரும் முக்கோணத்திலே யக்கினியைக் காற்ருலேமூட்டிச் சூரியமண்டலங்கடந் தப்பாற்போய் மிகுந்த பிரகாசப்பட்டு விளங்குஞ் சந்திர மண்டலத்திலே யமுதமொழுக அதையுண்டுறங்குகின்றவரும் அட்டமாசித்திபெற்றுச் சித்தராய்த் திரிகின்றவரும் பத்தியினுலே முத்தியை யிச்சித்து மேலான யோகஞ்செய்கின்றவரும் சத்தினி பாதமென்னு நால்வகை வழியிலே நடப்பவரும் காயசித்தி பெற்று வீற்றிருக்கின்றவரும் இரும்பைப் பொன்னுக்கி முதியரை யிளையராக்கித் தம்பதி சமேதராய்க் குகையிலிருக்கின்றவரும் இந்திரன் குபேரன் செல்வங்களை யுவர்த்துப் பொன்னைத் துரும்பாக நினைத்துத் துறவின்ப மநுபவிப்பவரும் பிரமன் விஷ்ணு ருத்திரர்கள் சாரூபத்தை யடைந்தவரும் சிவசாரூப்பியம் பெற்றவரும் இப்படி யெண்ணில்லார்தாமிருக்குமிடங்களை யகத்திய முனிவர்கண்டு, இவர்களி லொருவரே யேழுலகத்தையுந் தாங்க வல்லவர். அங்ஙனமாக நீலகண்டத்தையுடைய பெருமானென்னை வரவழைத்து இம்மகிமையெல்லா முள்ளங்கை நெல்லிக்கனி போலக் காட்டியடிமைகொண்டருள வன்றே? அந்தோ! திரிகூடமலையி னதிசயமனந்தங்கோடி. யெம்போலியர்க்குள்ளே யானேயெதிர்தொழும் பாக்கியம் பெற்றேனென்று புளகம்போர்ப்ப மெய்யெல்லாம் விதிர் விதிர்ப் பெய்தச் சிரகரகம்பஞ்செய்து,வேடர்காடுந் தேவர்கள்வனமுஞ் சிற்றார்களும் அருவியொழுகு மலை

களுஞ்சூழ்ந்து தானவர் முதலியோர்முழங்குஞ் சங்கவீதியை ச்சார்ந்தனர்.

பூமிதேவியின் ஆபரணம்போலு மணிமாடங்களையுடைய வீதியுஞ் சரசுவதிக்கு நிகராகிய வடவருவித்துறையும் அதைச்சூழ்ந்த மலையுந் தேவர்களும் பொன்னுலகமும் பூமியிலே வந்தாற்போலுங் குற்றாலத்திருநகருங் கோயிலுங் கோபுரமும் வெற்றிக்கொடியுங் கண்கள் களிகூரக்கண்டு விஷ்ணுவைப்போலக்காலைநீட்டி விண்ணு மண்ணுமளந்த துசத்தம்பத்தையுந் திருமதிலின் விசேடத்தையுஞ் சோலையையு மண்டபத்தையும் அண்டகூடமும் அதன்பாலடுக்கிய நல்லவரைக்குலமும்போலப் பார்த்துத், தாம் (அகத்தியமுனிவர்)ஒரு வாயினாலேயுண்டு முன்னாளுமிழப்பட்ட விஷ்ணுவைத் தன்னுள்ளேயடக்கித் *திரிலோகங்களையும் நான்குவாயாலுண்டுமிழுந் திருக்கோயிற் பெருமையைக்கண்டு கருவாயில்கடப்பவர்க்கு இந்தத்தரிசனமொன்று போதுமென்று கைகளைக்குவித்து இரண்டு பக்கமும் பொன்மழை பொழிய எழுகடலும் போயுள்ளே யிறங்கும் வாயினையுடைய மகாமுனிவர், துதித்தனர். ஒருயுகத்திலே பிரமனாகி மற்றொரு யுகத்திலே விஷ்ணுவாகியிருந்தகடவுள் மற்றொரு யுகத்திற் சிவபிரானாக வீற்றிருக்

---

* திரிலோகங்களையும் நான்கு வாயாலுண்டுமிழ்தல் - மூன்றுலகத்தாரும் நான்குபக்கமுமுள்ள நான்கு வழியா லுள்ளேவந்து தரிசித்துப்போதல்.

கும் க்ஷேத்திரமிதுவோ? பிரமன் விஷ்ணு கற்பாந்தத்தினு ம
றியாத இத்திருக்குற்ருலத்தலத்தைவந்து சேரப்பூருவத்தில்
என் பிதாவாகிய பிரமன்செய்த புண்ணியமோ? யான்செய்த
மாதவமோ? காரணம். செண்பகாடவி வளமும் வடவருவித்
திரிகூடமலேயின் சிறப்பும் மூன்றுசத்திகள் தோன்றுதற்கிட
மாகிய தரணிபீடமுஞ் சிவத்தின்செயலு மென்னெருநாவாற்
சொல்லத்தக்கவோ? வேதங்க ளாயிரநாவாற் சொல்லற்பால
வோ? மேருமலே கயிலாயமலே சிவலோக மிவற்றிற் பலகோ
டி தலமான்மியங்களே வேத நூல்களிற் பயிலுந்தோறுந் திரு
க்குற்ருலத்தலத்தி லெனக்கிருக்கும் ஆசை மிகுதியைச் சிவ
பிரான் தெரிந்தன்ரே கேட்டவரந் தந்தருளினர். தேவர்கள்
பொருட்டுத் தென்றிசைக்கண் வருமெனக்கு ஊழிதோறுஞ்
சிலம்பு முழங்க நடனஞ் செய்வாரது திருக்குற்ருலமானது
குளிக்குந் துறையிலே குருடனுக்கு வலம்புரிச்சங்கத்தின்
முத்துக் கிடைத்ததுபோற் கிடைத்தது. அத்தலத்தைத்
தனியனுய் வறியனுய்ப் பிச்சையெடுப்பவனெய்துந் திரவியம்
போலுமடைந்தேன். பூலோக கயிலாயமாகிய திருக்குற்ரு
லங் கிடைத்தது. இனி யெந்தவுலகமும் வேண்டேன். சிவ
லோகத்தினு மாசைவையேன். இதுவே சாலோக முதலாகச்
சொல்லப்பட்ட நான்குமாம். என்று மனங்களிக்கக் கண்களி
லானந்தவெள்ளம் பொங்கப் புயம் பூரிப்ப வுடல் புளகமேற
வுரைதடுமாற நின்று பரவசரா யகத்தியர் முக்கண் மூர்த்தி

யாகிய சிவபிரானிடத்தில் வைத்த அன்பாலே யாங்குள்ள வைணவப் பிராமணரது மதமடக்கு முபாயமெல்லாமறந்து செல்லுதலும், அவரைச் சங்கவீதி வடதிசைவாயில்காக்குங் காவலாளிகள் சிவனடியார்க ளுள்ளே போகக்கூடாதென்று வந்து தடைசெய்தெதிர்த்தனர்,

முனிவர் தடுப்பவர்காவலாளிகளோ?பிராமணரோ? வென்றுகேட்கு முன்னரே பிராமண ரெங்கும்பரந்துவந்து தடுப்பது தெரிந்து, அறிவில்லாதவர்களே! சிவபிரானுக்கும் விஷ்ணுவுக்கும் பேதம் யாதிருக்கின்றது? விஷ்ணு பத்தவதாரத்திலுஞ் சிவபிரான் நிக்கிரக மநுக்கிரகஞ் செய்ததை மறந்தீரோ? விஷ்ணுமூர்த்தி கண்ணைப்பிடுங்கி யருச்சனை செய்த காலத்திலே சிவபிரான் சலந்தராசுரனை யடர்த்த சக்கரங் கொடுத்தகருணை யறியீரோ? * விருந்தை மயற்பிணி போக்குதற்கு உமாதேவியார் துளவமாகிய பச்சிலைமருந்தளித்தது தெரியாதோ? மண்ணுலகத்தார் விண்ணுலகத்தார் முதலிய யாவருமோட அவர்களைத் தொடர்ந்தோடி யாலகால விடஞ் செல்ல விஷ்ணுமூர்த்தி சரீரங்கருகிவிடுதலும், அவ்விடத்தைச்சிவபிரானுண்டு காவாவிட்டா லாரோடு நீங்களிங்கிருப்பீர். எங்குச்சென்றுயிர்பிழைப்பீரறிவில்லாதவர்களே! பலநாள்களையுணர்ந்து மதியில்லாதவரே! உங்களுக்கு விரித்தெடுத்

* விருந்தை - சலந்தராசுரன் மனைவி, இச்சரிதங் கந்தபுராணத்திலுங் காஞ்சிப்புராணத்திலுங் காண்க,

துச்சொன்னாலுமொன்று மறியமாட்டீர். எம்பெருமானுடை
ய கீர்த்தியை உமது கடவுளாகிய விஷ்ணு அறிவர். இதுவன்
றி யுடலுயிர்போல விஷ்ணுவுஞ் சிவபிரானு மிருப்பதறியீர்.
சிவனடியாரையோ? தடுக்கின்றீர். மாயவனையே மறுக்கின்றீ
ராவீர். கௌதமர் கண்ணுவர் பிருகு துருவாசர் ததீசிமுனி
வர் முதலோரிட்டசாபத்தினாலே பகுத்துணர்வில்லீர் என்று
வெளியிலேவந்து, தவநிட்டையிலே வலியராயிருந்தாலுஞ்
சிவனடியாரைநீக்குகின்ற இவரை நீக்குவேனென்றுநினைத்து
ஊக்கமுடையானொடுக்கம், பொருதகர்தாக்குதற்குப் பின்வா
ங்குதல்போல அகத்தியர் பரசமயக்குறும்பெறிந்து சிவசம
யக்கொழுகொம்பாகி, முருகக்கடவுளிருக்கும் க்ஷேத்திரம்
விசாரித்துச் சித்திரகங்கையாகிய வுத்தரவாகினி யலையாகிய
கரத்தாற் காட்ட இலஞ்சி யென்னுந் தலத்தின்கட்செல்வார்.

மல்லிகை சிறுசண்பகம் குருக்கத்தி ஆத்தி மகிழ் மா
வெட்சி முல்லை பாதிரி குரா கோங்கு வில்வம் சந்தனமுதலி
ய விருக்ஷங்கள் பக்கமே நெருங்கி நந்தனவனங்கள் தளிர்க
ளாகிய கைகுவித்து மலரைச் சொரியுஞ் செண்பகப் பூங்கா
வில் வச்சிரத்தாற் கால்செய்து மரகதத்தாற்கழுத்துவைத்து
ப் பாளைகள் முத்தைச்சொரிந்து வயிடூரியம் புருடராகம் பூத்
து நீலங்காய்த்து உச்சிமேலே கோமேதகம்விளைத்துப் பவள
ம் பழுத்துக் கமுகமரங்கள் பச்சை ரத்நம் வேய்ந்ததெனப்
புச்சிலையால் வெளியடைத்த பந்தரினடுவே பக்கத்திலுள்ள

நதியின் கயல்மீன்கள் சோலைதோறுங் குதித்துப்பாய வீழுங் கனிகள் முருகக்கடவுள்பாணம் பாய்தலாலறுந்து வீழுமசுரர் தலைகள் போலத்தோன்ற, வேறுநதியிலோடிச்செல்லும் பவளவாயன்னங்கள் அசுரராலே சிறையிருந்த தேவர்கள் விடுபட்டு வான்வழியாகச் செல்லுதல்போலத் தெரிய, வாளைமீன் வெடிதாவப் பிளவுபட்டு வீழ்கின்ற மாங்கொம்பு குமாரக்கடவுள் வேலாயுதத்தாற் சூரனாகிய மாமரத்தைப் பிளத்தல் காண்பிக்கக், காட்டுக்கோழியு மயிலு மவ்விடத்திலே கலந்து வருந்தோற்றம் அக்கடவுள் கொடியும் வாகனமும் வருதல் போலத் தோன்றத், தென்றற்காற்றுத் தவழ்ந்து வழிகாட்ட, வருகென வுபசரிப்பார் போலக் குயில்கள் கூவக், கிளிகள் சடாக்ஷரத்தை யோதிச்சமயங்காட்டச், சிவந்த தளிர்கள் கைகாட்ட, மந்தாரமலர் தீபங்காண்பிக்க, முருகக்கடவு ளிருப்பிடமிஃதென்று நதிகளிற் குதிகொள்ளுங் கயல் மீன்கள் கண்ணாற்காட்ட, அங்கேசென்று, சண்பகச்சோலை வளர்ந்துஆகாயத்தைக்கிழிக்க அந்தவழியே யங்கிருந்து விமானம்வந்திருந்தாற்போன்ற சிகரத்தையுடைய ஆலயத்திலிருக்குந் தேவதேவனைக் கோழிக்கொடிதாங்கிய வீரனைத் தெய்வயானை வள்ளியம்மை யிருவருக்கு நடுவேதங்கிய சிந்தாமணிபோல் விளங்குகின்றவனை அசுரகுல நமன்போல்பவனைச் சைவவைதிக மார்க்கத்தின் றாய்போல்பவனைக் கற்பகச்சோலை நிகர்வானைத் தேவேந்திரன் கிரீடமணி யொப்பவனை வேடுவர் குடி

யிலே சம்பந்தஞ்செய்த கந்தனை வேதப்பழம் போல்பவனை மூன்று கண்களையுடைய ஞானமலையிற்பிறந்த ஞானசமுத் திரத்தைக் கிருபை வாழ்வைப் பன்னிரண்டு சூரியரொருங் குதயஞ் செய்யும் உதையமலைகள்போலப் பன்னிரண்டு பொற்குழை மேலேவிளங்கும் பன்னிரண்டு குண்டலங்கள் பொலியும் புயங்களையுடையானை மேருமலையருவிபோலு முப்புரிநூலுடையானைத் தென்னிலஞ்சிநகரத்துப்பெருமானைச்சகல கலைகளுக்குங் குருவானவனைத் தரிசித்து, வேல் பாணம் வச்சிராயுதம் அங்குசம் கொடி அபயம் வலப்பக்கத்துக் கைகளிலும், வில் மழு தண்டு வங்கியம் வரதம் இடப்பக்கத்துக் கைகளிலு மிருக்க ஆறுகிரீடமுந் தோன்ற மயிலாகிய மலைமேலே சூரியன்போன்ற மேலானசோதியைத் தொழுது வீழ்ந்தெழுந்து சந்திரன் போன்ற ஆறுதிருமுகங்களுங் கருணைபொழிகின்றபன்னிரண்டு கண்களும் வேதம்பழுத்த கனிவாயும் நூபுரமணிந்த பாததாமரைகளுங் கண்குளிரக்கண்டு வாய்குளிர வாழ்த்திக் கரங்குவித்து மனங்குளிர அகத்திய முனிவர் மகிழ்ந்து துதிப்பராயினர்.

சமுத்திரத்தைக் குடித்து மலையை யிடித்த வேலாயுதத்தை யுடையாய்! உதயகாலத்திற்றோன்றுஞ் சூரியனே! மாலையில்வருஞ் சந்திரனே! கயிலையங்கிரிக்கடவுள்வாழ்வே!உமாதேவி வயிற்றிற்றோன்றியமணியே! யடியேனிடத்திற் பால் தேன்பாகுபோலும் வேதப்பொருளை யருளிச்செய்தவனே!

வித்தியாதரர்க்கு மந்திரோபதேசஞ் செய்யு மேகமே! அசுர விருள் விடியக்கூவுங் கோழிக்கொடியுடையாய்! தெய்வயானை யுடன் விளையாடும் யானையே! வள்ளிக்கொடிபடர் மலையே! சூரரைக்கொல்ல அஞ்சுமுகம் (பயப்படுமுகம்) கூடாதென்று ஆறுதிருமுகங் கொண்டெழுந்தருளியவனே! தேவர்கட்குத் தலைவனே! கங்கைபுத்திரனே! கார்த்திகை புதல்வனே! இல ஞ்சியிலெழுந்தருளியிருக்கின்ற கடப்பமாலை யணிந்த குமார தேசிகனே! போற்றி போற்றி யென்று நாத்தழுதழுப்ப மெய் வெயர் வரும்பப் புளகம் போர்ப்பப் பரவசராய் நின்று துதிக்கு முனிவரைப் பார்த்துக் குமாரக்கடவுள் உயர்ந்த கரு ணைகூர்ந்து "உன்னுடைய தோத்திரத்தை மகிழ்ந்தோம். இந்தத் தோத்திரத்தைச் சொன்னவருக்கு மோக்ஷமாகிய பேரின்பம் நினைத்தவாறே யருளுவோம். உனக்கு வேண்டும் வரத்தை யினிக்கேட்பாயாக" என்னலும், அகத்தியர் உடல் பொருளாவிக்குடைய தேசிகனே! சிவபிரான் றிருமணஞ் செய்த காட்சியும் அவர் நடனஞ்செய்கின்ற காட்சியுந் தரிசி க்க மேருமலையிலே தவஞ்செய்து, இமயமலையிலே பார்வதி தேவி திருமணக்குழாத்திற் சென்றேன். பூபாரஞ் சமமாதற் பொருட்டு எம்பிரான் அடியேனைத் தென்றிசையில் விடுத் தனர். அப்போது திருக்குற்றாலத்திலே யிருக்கும் விஷ்ணு வைச் சிவமாக்கிப் பூசைசெய்து மணக்கோலமுநடனமு மாங் கே தரிசிப்பா யென்றனர்.

அவ்வாறு கோயிலுட்செல்லும்போது சந்நிதியிலே வைணவப் பிராமணர் தடைசெய்தனர். திருவருளுக்குப்பயந்திங்குவந்தேனிதற்குறுதி தேவரீரருளிச்செய்ய வேண்டுமென்று துதித்தனர். அதுகேட்டுக் குமாரக்கடவுள் "முனிவனே! யஞ்சாதே வஞ்சகமறையோரை அவர் வஞ்சகவடிவத்தாலே வெல்லுதல் வேண்டும். ஆதலால் வைணவக்கோலத்தோடு நீ கோயிலினுட் சென்று வேதமந்திரத்தால் விஷ்ணுவைச் சிவலிங்கமாக்கி மகுடாகமவிதிப்படி பூசை புரிக" என்றனர். உடனே முனிவர் மகிழ்ந்து "சுவாமீ! சிவார்ச்சனை செய்புமாகமங்களை யெனக்குபதேசித் தருளுக" என்றுதுதித்தலும், குமாரக்கடவுளப்பொழுதே சிவாகமமிருபத்தெட்டு முபதேசித்தருளினர். பிரம விஷ்ணுக்களு முணராத வுபதேசப்பொருள்களை யநுபூதியோடு முனிவர் பெற்றனர். உண்மைத் தவமன்றி யுலகின் மிக்கபொருளுண்டோ? அதன்மேலிங்ஙன முபதேசித்த சற்குரு மூர்த்தியை முனிவர் பூசை செய்யத் தொடங்குவாராயினர்.

* பஞ்சசுத்தி முறைப்படியே வாசனைத்தயிலம் பஞ்சகௌவியம் பஞ்சாமிர்தம் நெய் தயிர் தேன் பால் கருப்பஞ்சாறு கனிரசம் இளநீர் சந்தனம் மந்திரகலசநீர் முதலாய வபிடே

---

* பஞ்சசுத்தி - பூதசுத்தி, தானசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி. இவற்றுட் பூதசுத்தியை ஆன்மசுத்தியென்றுஞ் சொல்வர்.

கஞ்செய்து மந்திரபுட்பஞ் சாத்தித் திருவொற்றுடை கலை
கள் சாத்தி யுபவிதம் மான்மதங் குங்குமங் கலவை புழுகு
சாத்தி யிரத்நாபரண மணிந்து பூமாலை புனைந்து சுத்தான்ன
நிவேதித்துக் கருப்பூரதீபங்கொடுத்துப் பலகாரவருக்கத்து
டன் முக்கனி தீம்பால் முதலியவைகளை மகாநைவேத்தியஞ்
செய்வித்துச் சோடசோபசாரஞ் செய்து புட்பங்களைத்தூவி
யெந்தையே! திருப்பரங்குன்றி லிருக்கு மிறைவனே! திருச்
செந்தூர்ச்சேந்தனே! பழநிமலைத்தேவே!சிவகுமாரனே! யோ
கவாழ்வே! பழமுதிர் சோலைக்கந்தா! இலஞ்சிக் குமரதேசிக
னே! போற்றி போற்றி யென்று முனிவர் தொழுதனர். அவ
ருக்கிரங்கி முருகக்கடவுள் முனிவர் நினைத்தவெல்லா முடி
யும்படி வரங்கொடுத்தனர். அவ்வரம் பெற்று அன்றிராத்திரி
யிலகத்தியர் வெண்மணலை இரண்டு இலிங்கமாகக் குவித்துச்
சிவபூசைசெய்து மறுநாள் விடியற்காலத்து மவ்வாறே பூசி
த்து இரண்டு இலிங்கங்களையு மொன்றுசேர்த்து *இருவாலுக
நாயகனென்று திருநாமஞ் சாத்திப் பின்னுமருச்சனை யியற்
றிப் பூருவயுகத்திலே அயன்மாலான மூர்த்தியைச் சிவலிங்க
மாக்க விடைபெற்றுக்கொண்டு திரும்பினர்.

சிவபிரானே திரிகூடமலையிற் பிரமன் விஷ்ணுவாயினர்.
ஆதலாலே யவரைப்போற்றுத லவரடியார்களுக்கு முறை
யாமென்று வேதங்களெல்லாம் விரித்துச்சொன்ன பிரமா

---

*இருவாலுகநாயகன்—இரண்டு வெண்மணலாலாகிய இலிங்கம்,

வின் புத்திரனுகிய அகத்திய முனிவர் கணப்பொழுதினுள் விஷ்ணுபத்தர்கள் வேடங்கொள்வாராய்த் துளபமாலை யணிந்து நெற்றியிலூர்த்த புண்டரஞ்சாத்தி யெட்டெழுத்துச்சரித்து, உண்மையெட்டுகின்ற பஞ்சாக்கரத்தைத் தியானித்துப் பரமபாகவதராய்க் காதினில் துளசிமணி சொர்ன குண்டலங்கள் சாத்தி ஆதி அச்சுதன் கோவிந்தன் ஆலமர்கடவுளென்று சொல்லப்பட்ட சிவன் விஷ்ணுவின் பொதுப்பெயர்களைச் சொல்லிச் சங்கவீதியிலேவந்து கங்கையிலேமூழ்கிச் சந்தியாவந்தனமுடித்து விஷ்ணுவை விரைவிலே பணிவாரைப் போல வருதலும், வைணவரெல்லாங் குருவென்றெழுந்து வீழ்ந்து தலைவணங்கிப்பரவினர். அவர் பணிதலெல்லாஞ் சிவனுக்கும்விஷ்ணுவுக்கும் பொதுவாகப்பகவற்கேயாகுக என்று ஆசீர்வதித்துப்பின்னர் ஒப்பில்லாதவனே! யெங்கிருந்து வந்தாயென்று கேட்போர்க்கெல்லாம் திருமலைமுளரிக்கண்ணன் றிருப்பதி யிருந்தோமென்று * சிலேடையாகக்கூறி யாமுன் செய்த ஒப்பில்லாதபெரிய தவத்தாலீண்டு † திருமுற்றம் பரவவந்தேம், பூசைக்கு வேண்டுந் திரவியமெல்லாங் கொணர்

* சிலேடையாவது-திருமலை முளரிக்கண்ணன் றிருப்பதி யென்பதற்குத் திருமலையாகியதாமரைக்கண்ணனுடைய திருப்பதிக்ஷேத்திரமென்றும், சிறந்த கயிலாயத்திலிருக்கும் அக்கினிநேத்திரத்தையுடைய சிவபிரான் சிவக்ஷேத்திரமென்றும் பொருள்கொள்ளுதல்,

† திருமுற்றம்- திருக்கோயிற் சந்நிதானம்,

மினென்று, வேதியர் வீதியைவிட்டு நீங்கிவந்து துசத்தம்பத்தை யிறைஞ்சியேத்தி வைணவர்கூட்டஞ்சூழ வசந்தவீதியை வலம்புரிந்து, ஆலயங்கடவுள்வடிவாக வாயிலைந்தும் ஐம்பொறிகளாக விஷ்ணுசங்கமே வீதியாகச் சக்கரமே சிகரமாகப் பதினெட்டு ஸ்மிருதியும் பதினெட்டுப்படிகளாக வேதமே குறும்பலாவாக விளங்குமற்புதத்தைப் பரவித்தொழுது வடக்குக்கோபுர வாயிலுட்புகுந்து வயிரவரிருக்கையை வணங்கிக்கோயிலை வலஞ்சுற்றிச் சன்னிதிவந்தனைசெய்து மேற்றிசைவாயிலுக்கிறைவர் வீற்றிருப்பு மேனைத்தேவர் கூட்டங்களையும் வணங்கிச் சோமேசரையும் பராசத்தி பீடத்தையும் பணிந்து உள்ளே புகுதலுங், துவாரபாலரிலொருவ ரிவர் நேற்றுவந்தவரென்ன, ஒருவர் நாமறியோ மென்ன, இவ்விருவரையுங் கையமைத்து அப்பாற் போய்த் துளவமாலையணிந்த மார்பினையுஞ் செம்பொற்கிரீடம்புனைந்த தலைபினையுமுடைய விஷ்ணுமூர்த்தியைக் கண்கள் களிப்பத்தரிசித்துக், கருணைக்கடலாய்த் திருமேனி பச்சிலைக்காடாய்க் கண் வாய் முகங் கை கால் கொப்பூழ் தாமரைமலர்பூப்ப ஒருகைசங்கு மொருகை சக்கரமுந்தாங்கி யிரண்டு சுடருதித்த நீலமலைபோல நின்ற அம்மூர்த்தியைப் பூசிக்க, முன்னம் பிராமணர் கொணர்ந்த பொருளெல்லா முள்ளேவாங்கி வைத்துக் கூட்டங்களையெல்லாம் வெளியேபோக்கித் திருக்கடைக்காப்புச்செய்து பச்சை மலைபோலுந்திருமேனிபவளமலைபோலாக ஆசைமிகுந்த

மனத்தாற் * கூர்மவேட்டுவத்தியானஞ் செய்து விபூதி ருத் திராக்ஷந் தரித்து மனவொருமைப்பட்டுத் திருமாலுக்கு ஞ் சிவபிரானுக்கும் † பொதுவகையாகவுந் திருமாலுக்குச்

---

* கூர்மவேட்டுவத்தியானம்-ஆமையும், குளவியும், நினைத்தப டி முடிதல்.

† பொதுவகை-முத்தனே முளரிக்கண்ணு மூலமென்றழைத் த வேழப்பத்தியினெல்லை காக்கும்பகவனே திகிரியாளா கத்தனே அருள்சூற்கொண்டகந்தரக்கறுப்பினுனே நத்தணிசெவிய கோல நாடுதற் கரியநம்பி, அண்டர்தாம் பிழைக்குங் கட்டாலமர் கறைக்க ண்டமேயாய் வண்டுல வலங்கலார்க்கு மருமத்தே னிதழியுள்ளாய், ஆழியும்வளையுமேற் பாயணிமணிப்பணிகள் பூண்பாய் வாழியந்தா ங்கமாக மருவுமா திரையையாவாய். என்பன. திருமாலுக்குப்பொ ருள்கூறுங்கால்-பிரீதியையுடையவனே தாமரைக்கண்ணை யுடைய வனே மூலமென்றுகூப்பிட்டயானையின் அன்பினளவிலே(சென்று) இரக்ஷிக்கும் பகவனே சக்கரத்தையாள்பவனே கடவுளே கொடுக்கி ன்ற நீருண்டமேகத்தைப்போலுங் கருநிறமுடையவனே சங்கந்தாங் கிய அழகிய வராகாவதாரமுள்ளவனே தேடுதற்கரிய புருடோத்த மனே. இடையர் கயிற்றுலுரலிற் கட்டுங்கட்டாற் கட்டுண்டவனே வளர்தங்கிய துளவமாலை நிறைக்கு மார்பிலே தேனூறு மதரத்தை யுடையாளாகிய இலக்குமியையுடையவனே. சக்கரமுஞ் சங்கமுமே ற்பவனே வரிசையாக ரத்நாபரணங்களுமணிந்தவனே! அழகிய சீரங் கம் (இட) மாகப்பொருந்திய காவிரிநதியை யுடையாய் யெனவும், சிவபிரானுக்குப் பொருள் கூறுங்கால், (இயல்பாகிய) மலரகிதனே அக்கினிக்கண்ணுடையவனே ஆதியாகிய மென்மையுடைய வளர்

*சிறப்புவகையாகவுந் தோத்திரஞ்செய்து, தாமரை மலர்கள் போலக் கரங்களைத் தலைபிலேகுவித்துக் கயிலாயமலையிற் சிவ பிரானருளிச்செய்த மெய்ம்மையை மனத்திலேநினைத்துச், சங்கிருந்தகையில்மானிருக்கவுந் துளபமாலையிருந்ததலைபிலே மூன்றாம்பிறைச்சந்திரனிருக்கவும் பொட்டிருந்த நெற்றியிற் கண்ணிருக்கவும் ரத்நாபரணமிருந்த மார்பிலே சர்ப்பாபரண மிருக்கவும் நீண்டதிருமேனி குறுகுக குறுகுக என்று பரவி யகத்தியமுனிவர் திருவடியின்கீழே யணுகும்போது,திருக்கு ற்றாலத்தில் தேவதேவனாகிய விஷ்ணுமூர்த்தி தவம் தருமம் பொருள் தெருள் சைவம் நன்மை மனுநீதிமார்க்கம் நிறை தவம் மெய்ம்மை புதுமை சரியைமுதலிய † சதுட்டையம்

---

ந்த மூங்கில் வரிசைகளையுடைய திருநெல்வேலியைக்காக்கும் பகவ னே கயிலாசமலையை யுடையவனே. கடவுளே கருணையே குடிகொ ண்ட நீலகண்டத்தையுடையவனே. சங்கக்குழை புனைந்தகாதுகளை யுடையாய். (விஷ்ணுவாகிய) பன்றி தேடுதற்கரிய பெரியோனே. தேவர்கள் பிழைக்குமுறுதியாற் பொருந்திய நீலகண்டத்தையுடை யவனே வண்டுகள் தங்கிய தேனிறைந்த கொன்றைமாலையணிந்த மார்புடையவனே சமுத்திரஞ்சூழ் முலகிற்பரந்த அழகிய ஆபரண மாகச் சர்ப்பங்களைத் தரித்தவனே இரகசியமாக, அன்பரிடத்திற் றங்கிய திருவாதிரை நக்ஷத்திரத்தையுடையாய் எனவுங்கொள்க.

* சிறப்புவகை-முத்தலைவரையாய் முளரிக்கண்ண என்பன. இவற்றின்பொருள் திரிகூடமலையையுடையாய் தாமரைக்கண்ண னே யென்பனவாம்.

† சதுட்டையம்-காரணத்தாலாகிய நான்குகாரியப் பொருள்.

மோக்ஷம் ஆகிய இவைகள் உலகமெல்லாம் பெருகத்திருமே னி குறுகிச் சிவலிங்கவடிவாயினர்.

சித்திஞலே இரும்பு பொன்ஞனற்போல அகத்தியமு னிவர் பத்தியினுலே மால் (மயக்கம்) ஆகியிருந்த வடிவத்தை யுடையவர் சத்தும், அசத்தும், சதசத்துமாகிய ஞானநித்திய நிமலானந்த நிட்கள சகள மூர்த்தியென்னும் சிவபிராஞயின பின்னர் வேதங்களுந் தேவவாத்தியங்களுமுழங்கின. தேவர் கள் புஷ்பவருஷம் பொழிந்தனர். அடியார்குழாங்கள் தொழு தன. உயிர்களெல்லாஞ்சிறப்படைந்தன. திரிகூடப்பெருமான் கீர்த்தி மூன்றுலகமும் பொதிந்தன. திருவெண்ணீறுவிளங்கி யது. கொன்றைமாலைபணிந்த சடையுடைய கருணையங்கட லைத்தரிசித்து முனிவரானந்தக்கூத்தாடி யுரோமஞ்சிலிர்ப்பப் புளகாங்கிதங்கொண்டு மார்பும் புயமுந் துடிக்க மனமும் வாக் குந் தமிழ்ச்சொல்வேதங் குளிர்க்கப் பேரானந்தக்கடலின் மூழ்கி யநுபூதியாகியவிபூதியைச் சிவலிங்கப்பெருமானுக்குச் சாத்தித் தியானபூசைமுடித்துப் பிராமணர் கொணர்ந்துவை த்த பூசாதிரவியங்களைக் கமண்டலநீராற் சுத்திசெய்து நூறு உருத்திரமந்திரத்தால் பஞ்சகௌவியம் பஞ்சாமிர்தம் பால் கங்கைநீர் முதலியவற்றையபிடேகம்பண்ணி மிக்க வாசனையு ள்ள கலவைச்சந்தனஞ் சாத்திப் பீதாம்பரந்தரித்து ரத்நாபர ணங்களும் பூமாலைகளும்புனைந்து மந்திரத்தாற் பாயசம் நிவே தித்துப் பஞ்சவாசத்தோடு கூடிய தாம்பூல நைவேத்தியஞ்

செய்து சங்கக்கோயிற் றிருக்கதவந்திறந்து சங்கத்தொனி முழங்க அடியார் கூட்டமெல்லாந் துதித்துப்பரவச் சோட சோபசாரஞ்செய்து *ஐந்துவிதமாகிய ஓமாக்கினி காரிய முடித்து வேதவிதி மந்திரத்தாலே யாயிரத்தெட்டு வில்வங் கொண்டருச்சித்து நீலமலர்களை விடுபூவாகத்தூவி மந்திரவிதிப்படி நின்மலராகிய சிவபிரான் றிருக்கரத்திலே சிவபூசைப் பலனை கொடுத்து மனங்கசியக் கண்கள்களிப்பச் சரீரம் விதிர்ப்ப நின்று தோத்திரஞ் செய்வாராய்ப் பராபரனே! பரம யோகி! பராங்குசா! பரசுபாணி! நிராமயா! நிமலா! நித்தனே! நின்மலனே! திரிகூடத்திலே சராசரமெல்லாம்பெற்ற தற்பரா! சிற்பரா! என்றுயிரங்கோடி நாமமெடுத்தோதிப் பிரமனே! பிரமன்மா லறியாத பரமனே! சண்பகாடவியாய்! மரகதக் கொடி மருவிய மாணிக்கமலையே! யன்பருக்கன்பனே யயனரி யாகித் தென்பூமியின் குறையை நீக்கச்சிவமாகி நிறைந்தாய்! ஆதிமத்தியாந்தரகிதனாகிய திருக்குற்றலத்திறைவனே! போற்றி போற்றியென் றேத்திப் புகழ்ந்து சாஷ்டாங்கமாக வீழ்ந்து வணங்கும் அகத்தியமுனிவரை யங்குநின்ற வைணவப் பிராமணரெல்லாம் பார்த்து இவன் பகைவனுவானோ? ஏதோ இடையூறு வந்ததென் றுள்ளேபுகுந்து சங்குசக்கரந் தாங்கித் தாமரைபூத்த கருணைக்கடலாகிய விஷ்ணுமூர்த்தியைக் காணூர். கருணையொரு வடிவாய்ப் பூமி யந்தரஞ் சுவர்க்க

* ஐந்து ஓமாக்கினி - பரார்த்த பூஜாவிதியிற் காண்க.

மூன்று மருவுபேரொளியாகிய மாணிக்கமலேபோன்ற சிவபி ரானேக்கண்டு வணங்கிஞரில்லேக் குருவாகிய அகத்தியமுனி வர்மேற் கோபங்கொண்டனர்.

சாலஞ்செய்தவன் யாவனே? வென்பர். யாது தந்திர ம் விளேத்தனனென்பர். சைவன்போல நேற்றுவந்த பிராம ணனிவனே யென்பர். அந்தோ! அறிந்தோமில்லேயே யென் பர். அடையாளம்போல நாமந்தரித்து நன்னெறிபோல ஞா னம்பேசித்துளவமாலே சூடிவந்தது மிம்மாயஞ்செய்ய வென் பர்: இவன் குள்ளவடிவாயது விரகமோ கள்ளமோவென்பர். பொய்மையாளஞகிய இவனுக்குப் பூசை யோமம் செபமெல் லாம் பாருங்களென்பர். திருமலே முளரிக்கண்ணன் திருப்ப தி யிருந்தோமென்று சிலேடையாக எம்பெருமானே யேத்தி ஞனென்பர். கருமலேபோன்ற மாயவனே நெற்றிக்கண்ணு டைய சிவஞக்கி நம்மிடத்திற் றுக்கத்தையுண்டு பண்ணிநின் ற பொலிவினேப்பாருங்களென்பர். வஞ்சகமனத்தஞகியவிவ னேத்தலேவாயில் கடந்துபோவதற்கு முன்ன மிறுகும்படிகட் டுவோமென்று தண்டாயுதங் கயிறுகொண்டு வலியான் முன் னங் கொக்குத்திரள் வந்ததுபோல வந்தனர். அது தெரிந்து அகத்திய முனிவர் ஒருகையிலே தருப்பைப்புல்லேவாங்கித் திருக்குற்ருலநாதரை நினேத்து ஆயிரங்கோடி காகத்துக்கு ஒரு கல்லேப்போல விடுத்தனர். அத்தருப்பைசென்று வைண வர் நெருங்கித்தாக்கும் ஆயுதங்கட்கு ஆயுதமாகி மோதிச்செ

ல்லுதலும், பிராமணர் ஓங்கும் கையானது வியாதமுனிவர் விஷ்ணுவேதெய்வமென்று பொய்ச் சத்தியங்கூறித் தூக்கிய கைபோலத் தம்பித்துநிற்கப்பயந்து, பரமயோகி! யுனக்கடைக்கலம் அபயந் தந்தருளுக என்றனர். முனிவரவரை "யஞ்சற்க" என்று தாக்கு மந்திரத்தால்விட்ட தருப்பையைச் சாந்தி மந்திரத்தால் வரவழைத்துக் காத்தருளிக் குறும்பலா ஈசர் பாதத்தைப்பரவியேத்திப் பொன்மயமாகிய சங்கக்கோயிலை வலஞ்செய்யும்போது வைணவப்பார்ப்பார் கூட்டமெல்லாஞ் சந்திரனைத்தொடருஞ் சகோரப் பறவைகள்போல முனிவர் பின்னே செல்லுதலும், அவரை முனிவர் பார்த்துத் "திரிகூடநாதர் சங்கவீதியின் தென்மேற்குப்பக்கத்தில் விஷ்ணுமூர்த்தியைவைத்துப் பூசித்துவாழுங்கள் சீதரன்சமயமென்றுஞ் சிவபிரான் சமயமென்றும் பேதஞ்செய்யாதிருங்கள்" என்றனர். அங்ஙனமே செய்வோமென்று அந்தப்பிராமணர் முனிவரை வணங்கிச்சென்றனர். அதன்மேல் அகத்தியமுனிவர் குற்றலநாதர் மாலாயிருந்தகாலத்தில் அவருக்கீசானதிசையிற் சிவமாக எழுந்தருளியிருந்த கூத்தனுகிய நம்பெருமான் பூசனைபுரியுஞ் சிவப்பிராமணரை யழைத்து அவர்கள்பிள்ளைகள் அவர்கள் மைந்தர்களனைவருக்கும் வேதசிவாகமங்களை யுபதேசித்துச் சிவபுராணமு மறிவித்துச் சைவபூசை விதியுந் தத்துவமு முணர்த்தத்தொடங்கினர்.

மூன்றாவது திருமால் சிவபிரானுன சருக்கம் முற்றிற்று.

நான்காவது

## சிவபூசை விதியுரைத்த சருக்கம்.

*குதத்தினிரண்டுவிர லளவின்மேலே முக்கோண வடிவமாக மூலாதாரம் விளங்கும். கோசத்துக்கும் நாபிக்கும்நடுவிலே நாற்சதுரமாகச் சுவாதிட்டானம் விளங்கும். நாபிக்கமலத்திலே மூன்றாம்பிறைபோல மணிபூரகம் விளங்கும். இருதயத்திலே முக்கோண வடிவமாக அனாகதம் விளங்கும். கண்டத்திலே யறுகோண வடிவமாக விசுத்தி விளங்கும். இலாடத்திலே வட்டவடிவமாக ஆஞ்ஞை விளங்கும். இந்த ஆறாதாரங்களுக்கும் முறையே விநாயகர் பிரமன் விஷ்ணு உருத்திரன் மகேசுரன் சதாசிவம் ஆகிய அறுவருந்தெய்வங்களாம். பிருதுவி அப்பு தேயு வாயு ஆகாயமாகிய வைந்தும் ஆறாதாரங்களுக்கு முறையே பூதங்களாம். இவற்றுள் மூலாதாரத்துக்குஞ் சுவாதிட்டானத்துக்கும் பிருதுவி பூதமாம்.

சிவம் சத்தி சாதாக்கியம் ஈசுரம் சுத்தவித்தையாகிய வைந்துஞ் சிவதத்துவங்களாம். கலை காலம் வித்தை நியதி மாயை அராகம் புருடன் ஆகிய வேழும் வித்தியாதத்துவங்களாம். பிருதுவி அப்பு தேயு வாயு ஆகாயம் ஆகிய வைந்துபூதங்களும், மெய் வாய் கண் மூக்கு செவியாகிய வைந்து பொறிகளும், சத்தம் பரிசம் உருவம் இரசம் கந்தம் ஆகியவைந்து

* குதம் - மலத்துவாரம்.

புலன்களும், வாக்கு பாதம் பாணி பாயு உபத்தம் ஆகியவைந்து கன்மேந்திரியங்களும், மனம் புத்தி அகங்காரம் சித்தம் ஆகிய அந்தக்காரணங்கள் நான்கும் ஆகியவிருபத்துநான்கும் ஆத்துமதத்துவங்களாகும். இம்மூன்றுவகையாகிய முப்பத்தாறு தத்துவங்களும் உன்னிலேக்கருவிகளாம்.

ஆகாயத்தினிடமாய்நின்று காது ஒலியையறியும். காற்றினிடமாய்நின்று சரீரம் பரிசத்தையறியும், அக்கினியினிடமாய்நின்று நேத்திரம் உருவத்தையறியும். புனலிடமாய் நின்று இரசத்தை நாக்கறியும். பிருதுவியினிடமாய் நின்று நாசி வாசனையையறியும். வாக்கு ஆகாயத்தினாலே வசனிக்கும். பாதம் வாயுவினாலே நடக்கும். பாணி யக்கினியினாலே யிடுதலேற்றலேச்செய்யும். பாயு அப்புவினாலே மல சல மோசனஞ் செய்யும். உபத்தம் பிருதுவியினாலே யானந்திக்கும். மனம் வாயுவினாலே நினைப்பும் சஞ்சலமுஞ்செய்யும். அக்கினியினாலே புத்தி நிச்சயஞ்செய்யும், அப்புவினாலே சித்தம் சிந்தனை செய்யும். பிருதுவியினாலே யகங்காரம் ஓங்கியெழும். இவை முழுதும் யோக்கிய காண்டமென்று பெயர் பெறும். கலை கிரியையை யெழுப்பும். வித்தை ஞானத்தையெழுப்பும். நியதி கனம் பலத்தைநிச்சயிக்கும். அராகம் ஆசையையெழுப்பும். காலம் கன்மபலத்தை யூட்டும். மாயை மறைக்கும். புருடன் கருவிகளைத்தொழிற்படுத்தும். இவைகளுக்குப் போக காண்டமென்று பெயராம். சுத்த வித்தை ஞானமிகுந்து கிரியை

குறைந்திருக்கும். ஈசுரம் கிரியைமிகுந்து ஞானங் குறைந் திருக்கும். சாதாக்கியம் ஞானமுங் கிரியையுஞ் சமமாயிருக் கும். சத்தி கிரியையாயிருக்கும். சிவம் ஞானமாயிருக்கும். இந்தத்தத்துவங்களைந்துக்கும் பிரேரகாண்டமென்று பெய ராம். சிவமுதலிய வைந்து தத்துவமுஞ் சுத்தமாயையாம். கலைமுதலிய வேழுஞ் சுத்தாசுத்தமாயையாம். பிருதுவி முத லிய விருபத்துநான்கும் அசுத்த மாயையாம். இவற்றைப் பதி பசு பாசக்கிரமத்திற் கண்டுகொள்க.

பிருதுவியின்கூறு தோல் எலும்பு நரம்பு மயிர் தசை. அப்புவின்கூறு இரத்தம் சுக்கிலம் மூளை மச்சை ஓடுநீர். அக் கினியின்கூறு நித்திரை பயம் ஆகாரம் சோம்பல் மைதுனம். வாயுவின்கூறு நடத்தல் ஓடல் நிற்றல் இருத்தல் கிடத்தல். ஆகாயத்தின்கூறு கோபம் மதம் குரோதம் மோகம் உலோபம் இவையிருபத்தைந்தும் பஞ்சபூதகாரியங்களாம்.

சூக்குமைவாக்கு நாதசொரூபமாய் அதனுள்ளொளியாக விளங்கும். பைசந்திவாக்கு நினைவுமாத்திரையாய் விளங்கும். மத்திமைவாக்கு செவிக்குவிடயமாகாமல் கண்டத்தினுள்ளே புணரத்தக்கதாய் விளங்கும். வைகரிவாக்குச் செவியாற் கேட்க வெளியே புறப்பட்டு விளங்கும். * எடணை, † அத்த

---

* எடணை: ஈடணையின் மரூஉ. அதாவது இச்சை.

† அத்தவேடணை - பொன்னாசை.

வேடணை *புத்திரவேடணை †யுலகேடணை யென மூன்றும், சாத்துவிகம் இராசதம் தாமதம் எனக் குணங்கள் மூன்றும், இவை முறையே யுத்தமம் மத்திமம் அதமமாம். உதானன் உண்ட அன்னசாரத்தை யுடலெங்கும் பரவச்செய்யும், வியானன் தோலெங்கு நிறைந்து பரிசத்தை யறிவிக்கும், சமானன் எல்லாவாயுக்களையும் ஏறுதல் குறைதல் செய்யவொட்டாது சமனுக்கும். அபானன் மலசலங்கழிப்பிக்கும். பிராணன் லலாடத்தானத்திலே தோன்றி யெப்போதும் போக்குவரவு செய்துகொண்டிருக்கும், இவ்வைந்து வாயுவுந் தெய்வவாயுவென்று சொல்லப்படும், தேவதத்தன் வியர்த்தலும் ஓடுவித்தலும் போர்செய்வித்தலுஞ் செய்யாநிற்கும். கிரிகரன் தும்மலும் மயிர் சிலிர்த்தலுஞ் செய்விக்கும். கூர்மன் நீட்டல் மடக்கல் செய்விக்கும். நாகன் கொட்டாவி யுண்டு பண்ணும். தனஞ்செயன் உயிர் உடம்பைவிட்டுப்போனாலுந் தானின்று பின்னர்க் கபாலத்தை வெடித்துப் பிளந்துபோகும். இவ்வைந்து வாயுவும் கன்மவாயு வெனப்படும்.

பிங்கலைநாடி மூலாதாரத்திலேதோன்றி யாறுதாரத்திலு மும்மண்டலத்திலு மூடுருவிச்சென்று நாசி வலப்பக்கத்திற் சுழுமுனையிலே யிணங்கி யிடப்பக்கத்திலே சுத்தரிக்கோல் போல மாறுடிச்சென்று கபாலத்திலே யேறிநின்று போன வழியே திரும்பி யிருப்பிடத்துக்கு வரும். இடைகலை நாடியு

---

* புத்திரவேடணை - பிள்ளையாசை. † உலகேடணை - மண்ணாசை,

மூலாதாரத்திலேதோன்றி மேற்கூறியபடியே வலப்பக்கத்தி லே மாருடிச்சென்று திரும்பிவந்து நிற்கும். சுழுமுனைநாடி மூலாதாரத்தினின்றும் ஆருதாரத்திலு நடுவிலே யூடுருவிக் கபாலத்திலேறிப் பிரமரந்திரத்தைமுட்டி நடுநாடி பிரண்டிலு மீண்டுவந்து நிற்கும். இப்படியே மற்றை ஏழுநாடியும் மூலா தாரந்தொடங்கி, அவற்றுள் புருடன் வலக்கண்வரையும் காந் தாரி இடக்கண் வரையும் அத்தி வலக்காதுவரையும் அலம்பு ருடன் இடக்காதுவரையும் சிங்குவை நாக்கினளவும் சங்கினி குறியினளவுங் குரு குதத்தினளவும் வந்துநிற்கும். இந்தநாடி பத்தும் பத்துவாயுவும் மூன்றுகுணமும் மூன்று ஏடணையும் இருபத்தைந்து *பூதியமும் நாலுவாக்கும் கன்மேந்திரியங்க ளின்ருெழிலாகிய வசனமுதலைந்தும் ஆகிய அறுபதும் புறநி லைக்கருவிகளாம். உண்ணிலைக்கருவிகள் முப்பத்தாறுஞ் சே ரத்தத்துவந் தொண்ணூற்ருறெனப்படும்.

நரம்பு இரத்தம் தோல் எலும்பு விந்து மூலம் தசை யெனத் தாதுக்களேழு. மோகம் காமம் மதம் குரோதம் மா ற்சரியம் உலோபமெனஉட்பகைகளாறு. அன்னமயகோசம் பிராணமயகோசம் மனோமயகோசம் விஞ்ஞானமயகோசம் ஆனந்தமயகோசம் எனக்கோசமைந்து. இடந்தோறுந் தன் சேனைகளையிருத்திவிட்டுக் †கோயிலினுட்புகு மரசன்போலச்

* பூதியம் - பூதகாரியம்.

† கோயில் - அரண்மனை.

சரீரத்தினுள்ளே புகுந்திருக்கும் ஆன்மாவின் அவத்தையை ந்து. அவையாவன: மாத்திரைகள் பத்து இந்திரியம் பத்து வாயுவைந்து அந்தக்கரணம் நான்கு புருடனென்று ஆகிய முப்பத்தைந்து தத்துவங்களுடன் ஆன்மா இலாடத்தானத்திலே நிற்பது சாக்கிராவத்தையாம். மேற்சொன்ன தத்துவங்களுள் இந்திரியம் பத்து நீங்க வொழியிருபத்தைந்து தத்துவங்களுடன் ஆன்மா கண்டத்திலே நிற்பது சொப்பனவத்தையாம். புருடன் சித்தம் பிராணவாயு இம்மூன்று தத்துவங்களுடனே ஆன்மா இருதயத்திலே நிற்பது சுழுத்தியவத்தையாம். மேற்கூறிய மூன்றிலே சித்தநீங்கிய வொழியிரண்டு தத்துவங்களுடனே யான்மா நாபித்தானத்திலே நிற்பது துரியாவவத்தையாம். அதைக்கடந்து புருடனோடு ஆன்மா மூலாதாரத்திலே நிற்பது துரியாதீதாவத்தையாம். இந்தத் தத்துவங்களெல்லா மாயைமலமாம். கன்மமலம் நன்மை தீமையென விரண்டாம். செம்பிலுற்ற களிம்பைப்போல ஆன்மாவுள்ளபோதே யிருந்து அறிவை மறைப்பது ஆணவமலமாம். இந்த மும்மலத்துள்ளு மழுந்து மான்மாவானது சகலம் கேவலம் சுத்தமாகிய மூன்றவத்தைகளைப்பொருந்தும்; அவற்றுள் தத்துவங்களெல்லாவற்றையும் நீங்கிச்சருவசங்காரகாலத்தில் சிருட்டிகாலமளவும் ஆணவமலத்தான் மறைப்புண்டு யாதொரு நினைப்புமின்றி யிருப்பது கேவலாவத்தையாம். முப்பத்தாறு தத்துவங்களோடுகூடி யேனைத்தத்துவங்களை விட்டுப்

பிரிந்து எல்லா யோனிகளிலும் பிறந்து நரக சொற்க புவன மூன்றினுள்ளும் நல்வினை தீவினைப்பயன்களை யனுபவிப்பது சகலாவத்தையாம். அவ்விரண்டவத்தையும் சனனத்துக்குக் காரணமாகும். ஒப்பற்ற திருவருளால் ஐந்தவத்தையும் பொருந்தி அவற்றைக்கடந்து அப்பாற் சென்று நிற்றல் சுத்தமாகும் இந்தநெறியை யுணர்ந்து சிவபிரானைப் பூசைசெய்பவருக்குப் பிரகாசிக்கும் பூசாவிதியை யினிச்சொல்லக் கேட்பீராக.

பத்தி பயம் அன்பு நல்வழி குணம் ஆசாரம் அறிவு இவைகள் சென்மவாசனையிலுடையவர்கள் பூசைபண்ணுதற்குரியவர். சித்திரசபையிலே நடனஞ்செய்யுஞ் சிவபிரான் பூசைக்குப் பொருந்திய சுத்தியைந்துள்ளன. அவற்றுள் ஆன்மசுத்தி மானதசுத்தியின்பொருட்டு விடிவதற் கைந்து நாழிகைக்குமுன்னெழுந்திருந்து இயன்றமட்டுஞ் சுத்தி செய்து விபூதி தரித்து உருத்திரன் சதாசிவன் இவர்களைத் தொழுதெழுந்து வெளியேபோய் வடக்குங் கிழக்குமல்லாத திசையிலே கோபுரந் தெரியாத இடத்தில் தண்ணீர்க்கரை பசுக்கொட்டில் மடம் சோலை விளைநிலம் அறுகம்புல்முளைத்த பூமி மரத்துநிழல் சுத்தநிலம் மயானம் உவர்நிலம் இல்லாத இடத்தில் சந்திரன் பசு பிராமணர் கிழக்கு முதலியவற்றைப் பாராமல் மூக்குநுனியைப்பார்த்துக் கீழேயொரு துரும்பை யிட்டு வஸ்திரத்தைத் தலையிலேதரித்து இரவிலே தென்றி

சையையும் பகலிலே வடதிசையையு நோக்கி மௌனமாக விருந்து மலங்கழித்துப்பின்பு மண் செங்கல் முதலியவற்றுற் சுத்திசெய்து இடக்கையினுலேகுறியைப்பிடித்தெழுந்துபோய்த் தீர்த்தமல்லாத சலக்கரையி லொருமுழந்தூரவிருந்து கார்காலமல்லாதகாலத்திலெடுத்துவைத்திருந்தமிருத்திகையினுற் குதத்தை யைந்துதரமுங் கோசத்தை யொருதரமும் இடக்கையைப் பத்துத்தரமும் இரண்டுகையை எழுதரமும் இரண்டு கால்களை ஒருதரமுந் தேய்த்துச் சலத்தாற் கழுவிச் சௌசமுடித்தபின்னர் நுரையில்லாத நீரினுலே சுத்தமான இடத்திற்போய் வடக்குங் கிழக்கு நோக்கி யாசமனஞ்செய்து, நாரத்தை மா இருப்பை *கடு மகிழ் மருது நாவல் பூல் †இறலி நாயுருவி ‡சங்கு குருக்கத்தி ஆத்தி அசோகு சண்பகம் வன்னி ஈந்து §அழிஞ்சில் கடம்பு இவற்றொடு தில்லை பராய் ஆல் அத்தி நீங்கிய மற்றைப் பாலுமுள்ளு மொருங்கு பொருந்திய மரங்களிலே துறவி யெட்டங்குலநீளமும் கிருகி பன்னிரண்டங்குல நீளமும் ஒருவிரற்பருமையுமாகப் பிராமணரல்லாத பின்மூன்றுவருணத்தாரு மேற்சொல்லியவளவையிலொவ்வொரு விரன்முறையே குறைந்தவளவாகப் பற்கொம்புகள் நறுக்கி அவைகளாலே துறவியர் வடக்குங் கிருகியர் கிழக்கும் நோக்கியிருந்து தந்தசுத்தி செய்யக்கடவர். நவமி

---

* கடு - கடுக்காய்மரம். † இறலி - இத்திமரம்.

‡ சங்கு - ஓர் முட்செடி. § அழிஞ்சில் - ஓர் மரம்.

சங்கிராந்தி பிரதமை சஷ்டி அமாவாசை பௌர்ணமி விதிபாதம் இத்தினங்களிலே பல்விளக்கலாகாது. பற்கொம்புகொண்டுவந்து கொடுப்பவர் தம்மாணுக்கரும் பிறருமாவர். பற்கொம்பு கொண்டுவந்து கொடுப்பவ ரில்லாதவிடத்திலும் பல்விளக்கலாகாதென்று விலக்கிய நாளிலும் விளக்கற்குரிய மரங்களின் புனிதமாகிய இலைகளினாலே விளக்குக. இதுவு முடியாவிடத்திலே பன்னிரண்டுதரம் வாயிலே நீரைவார்த்துக் கொப்புளித்தாற் றந்தங்கள் சுத்தியாகும். அதன்மேல் ஆசமனஞ்செய்து கிரமப்படி யொழுங்காக நீர்த்துறையிலே ஸ்நானம்பண்ணிச் சந்தியாவந்தன முடித்து விபூதிதரித்துக் கண்டத்திலே முப்பத்திரண்டு உருத்திராக்கமணியுங் கையிலே பன்னிரண்டுமணியும் முடியிலே முப்பத்தாறு மணியும் மார்பிலே ஐம்பத்தொருமணியும் இடையே படிகம் பவளம் முத்து பொன் முதலியவற்றி லியன்ற தொன்றைக் கோத்துத் தரித்துச் சிரசிலே யொருமணியுங் காதிலே பதினொரு மணியுந் தரிக்கவேண்டும். இம்மணிகளை யதிகமாக விரும்புவோர்க்கு ஆயிரமணி தரிப்பது விசேடமாம். எந்த இடத்திலேனும் பஞ்சாக்ஷரஞ்சொல்லித்தரித்துச்சென்று கோயிலிற் றிருக்கடைக்காப்புத்திறந்து தூபதீபமியற்றிச் சுத்தப்படுத்தித் தருப்பை சமிதை திருமஞ்சனம் புட்பமுதலிய பூசாதிரவியங்களால் நித்தியம் நைமித்தியம் காமியமாகிய பூசைகளைச் சிவலிங்கப்பெருமானுக்குச் செய்துவரல்வேண்டும். இவற்

றுள் திதி நக்ஷத்திரம் வாரம் பிரதோடம் அயனம் விஷு சங்கிராந்தி *இருமண்டலம் இவ்வொன்பதினும் பூசித்தலே நித்தியபூசையாம். நைமித்தியபூசை (இந்நித்தியபூசையின் குறைபாடு நீங்குதற்குப் பூசிக்கும்பூசை) †சானித்தியபூசை ‡வற்சரபூசை மாதவிழா §மாதபூசை யென நான்கு வகைப்படும். காமியபூசை (ஒன்றை யுத்தேசித்து அப்போதப்போது செய்யும் பூசை) தபனபூசை கிருத்திகைத்தீபம் தீபாவளி ¶சங்கபூசை புதியநெல்லரிசி யன்ன நைவேத்தியபூசை யென ஐந்துவகைப்படும். பூசைசெய்யுங்காலம், ‖மகாசந்தி காலை யுச்சி மாலை யென நான்கு சாமமும், உபகாலம் அருணசந்தி யுஷற்காலம் சிறுகாலை யென நான்குசாமமுமாம்.

இவைகளுட் பூதசுத்தி முதலிய சுத்திகளெல்லாம் இரண்டு அத்திரமந்திரத்தாற் சலம் புரோக்ஷித்து விநாயகரைப் பூசித்து ஆசாரியர் சொன்ன முறைப்படி சங்கற்பஞ்செய்து சந்தனங்கலந்த சலத்தாலுங் கங்கை முதலிய புண்ணியநதி

---

* இருமண்டலம் - மகுடாகம பூசாவிதியிற் காண்க.

† சானித்தியபூசை பூசாவிதியிற் காண்க.

‡ வற்சரபூசை - வருஷாபிஷேகபூசை.

§ மாதபூசை - மாதாந்தத்திற் செய்யும் பூசை.

¶ சங்கபூசை - சங்காபிஷேக பூசை.

‖ மகாசந்தி முதலிய எட்டுச்சாமத்தையும் வரையறுத்தறியவேண்டுமேல் மகுடாகமம் வல்லார்வாய்க் கேட்டுணர்க.

களின் சலத்தாலும் ஒருகுடத்தை நிறைத்துவைத்துப் புண்ணியாவாகனஞ்செய்து, அக்குடத்தைச்சூழ ஒன்பது கலசம் நீர் நிறைத்துவைத்து முறையாகச் செபஞ்செய்து பஞ்ச கௌவியங்கூட்டி, நெய் தயிர் பால் சருக்கரை தேன் இவற்றால் சிவமந்திரஞ்சொல்லிப் பஞ்சாமிர்தஞ்சேர்த்துச், சாந்தி யோம முடித்துவைத்துக்கொண்டு திரிகூடநாதரை வணங்கிச் சந்தனாதித்தைலம் பஞ்ச கௌவியம் பஞ்சாமிர்தம் நெய் பால் தயிர் தேன் கருப்பஞ்சாறு பலகனிரசம் இளநீர் சந்தனக்குழம்பு தபனகும்பம் இப்பன்னிரண்டும் பன்னிரண்டுமந்திரஞ்சொல்லி யபிடேகஞ்செய்க, அங்ஙனஞ் செய்யும்போது வாசனைத்தயிலத்துக்குப்பின் நென்மாவும் பஞ்சகௌவியத்துக்குப்பின் எலுமிச்சங்கனிரசமும் பஞ்சாமிர்தத்துக்குப்பின் நெல்லியும் நெய்க்குப்பின் வெந்நீரும் பாலுக்குப்பின் சருக்கரையும் தயிருக்குப்பின்பாசிப்பயிற்றின்மாவும் தேனுக்குப்பின் புட்பசலமுங்கருப்பஞ்சாற்றுக்குப்பின் கழுநீர்க்கொட்டமும் பலகனி ரசத்துக்குப்பின் பஞ்ச வில்வமும் அபிடேகஞ்செய்யவேண்டும், அதன்பின் பாயச நிவேதித்துத் தூபதீபமும் நீராஞ்சன தீபமுங் கொடுத்து, இளநீரும் வாசனைகலந்தசலமும் அன்னாபிடேகஞ்செய்து தூபதீபங்கொடுத்து வில்வங் கலந்த நீரும் சங்காபிடேகமுஞ்செய்து நவகலச நீராட்டி மந்திரபுட்பஞ்சாத்தி மந்திரான்ன நிவேதித்துத் திருவொற்றுடைசாத்திப் பீதாம்பரமுதலிய வஸ்திரமும் பனிநீர் சந்

தன முதலிய வாசனுதிரவியமும் புனைந்து இரத்நாபரணங் கள் பலவுமணிந்து நல்ல புட்பமாலைகளுஞ்சாத்திச் சுத்தான் னமும் பலகார வருக்கங்களுங் கனிவருக்கங்களும் வர்க்கான் னங்களுந் தாம்பூலமும் நிவேதித்துத் தூப தீபாராதனைமுறை ப்படிபுரிந்து, தமிழ்வேத பாராயணத்துடன் திருச்சின்ன முழங்கக் குழல்வாய்மொழியம்மையையு மிவ்வாறே பூசை செய்து பரிவார தேவதைகளுக்கும் பற்பலராற் பூசைசெய் வித்து விபூதி முதலிய திருவருட் பிரசாத வினியோகஞ் செ ய்க. இவ்வாறு செய்வது படித்தரப் பூசையாம். இனிவிசேட பூசையும் ஆகமப்படி செய்யவேண்டும்.

அபிடேகஞ்செய்யும்போது ஒவ்வொரு அபிடேகத்துக் கு மிடையிடையே சுத்த சல மபிடேகிக்கவேண்டும். தேன் சருக்கரை தயிர் பால் இவைக ளொன்றற்கொன்று இருமட ங்கும் நெய் நான்மடங்குஞ் சேர்த்துச் செய்வதே பஞ்சாமிர் தம். பகலெடுத்ததிருமஞ்சனம் இரவினுக்காகும். இரவெடுத் த திருமஞ்சனம் பகற்காலத்துக்காகாது. இரவிலே திருமஞ் சன மெடுக்கவேண்டுமானல் தீபமாவது பொன்னாவது சலத் திலேகாட்டி யெடுத்தல்வேண்டும். அலரி வில்வம் மூன்றித ழ்வில்வம் தாமரை நூற்றிதழ்ச்செந்தாமரை நாயுருவி தரு ப்பை முல்லை சிறுசண்பகம் தும்பை வெண்காக்கணம் வெள் ளெருக்கு பெருந்தும்பை கழுநீர் நீலம் இப்பதினைந்து பூவு மொன்றற்கொன்றுயர்ந்தது. நீலமலரைப் புதுமலர்போலநின்

மாலியமானாலுங் கழுவிச்சாத்தலாம். பத்திரங்களுள் நூறு பங்கதிக மருக்கொழுந்து; அதற்காயிரம்பங்கதிகம் வில்வமாம்.

சிவபிரானுக்கு இருபத்தெட்டாகமங்களும் அவயவங்களு மாபரணங்களுமாம். அவற்றுள் காமிகம் திருவடி. யோகசம் கணைக்கால். அசிதம் முழங்கால். காரணம் கெண்டைக்கால். தீபத்தம் தொடை. சூக்குமம் குய்யம். சிந்தியம் விரல்கள். விமலம் நாலுகைகள். அஞ்சுமான் முதுகு. சுப்பிரபேதம் கொப்பூழ். விசயம் வயிறு. சுவாயம்புவம் தனம். வீரம் கழுத்து. நிசுவாசம் மூக்கு. சந்திரஞானம் மார்பு. சித்தம் நெற்றி. விம்பம் முகம். ஆக்கினேயம் கண். புரோற்கிதம் நாக்கு. இரௌரவம் காது. இலளிதம் கன்னம். மகுடம் தலை. பரமேசம் முத்துமாலை. வாதுளம் பரிவட்டம். கிரணம் ஆபரணம். காலோத்திரம் சந்தனம். சருவோத்தமம் உபவீதம். சந்தனம் காதணிகளாம். இவற்றுள் மகுடாகமமே யுயர்ந்தது. ஆதலாலவ்வாகமப்படியே தொன்றுதொட்டுத் திருக்குற்றாலநாதருக்குப் பூசைசெய்யும்விதி யமைந்தது. ஆவாகனம் தாபனம் சன்னிதானம் நிரோதனம் அவகுண்டம் முத்திரை பாத்தியம் ஆசமனம் அருக்கியம் மலர்தூவல் ஆகியஇவற்றால் ஈசனைப்பூசையும் ஆசாரியர் * பத்துவிதப்படுவர்.

அபிடேகப்பொருள்களுள் தயிலம் ஆரோக்கியத்தையும் நென்மா கருப்பஞ்சாறு இலக்குமி பார்வையையும் எலுமி

---

* பத்துவிதப்படுதல்-மகுடாமத்திற்காண்க.

ச்சங்கனிரசம் வெற்றியையும் நெய் புத்திரப்பேற்றையும் பஞ்சாமிர்தம் தேன் இராசத குணத்தையும் நெல்லி ஐவசுரியத்தையும், பால் சத்துருநாசத்தையும் தயிர் புத்திர விருத்தியையும் வெந்நீர் ஆயுளையும் சருக்கரை பயற்றின் பொடி இராச்சிய தோஷநீக்கத்தையும் சுத்தசலம் செங்கழுநீர்க்கொட்டம் பிறவிநீகத்தையும் ஐந்து பழச்சாறு பாவநீக்கத்தையும் சந்தனநீர் இளநீர் உலகத்துக்கும் அரசருக்குஞ் சுகத்தையும் அன்னபிடேகம் * அன்னசமிர்த்தி வில்வநீர் புத்தி முத்தியையும் சங்கநீர் நவகும்பநீர் இராச சுகத்தையுங் கொடுக்கும். சாந்தியோமம் உலகசுகத்தைத்தரும், மந்திரபுட்பமும் மந்திரான்னமுங் கொள்ளை, முதலிய பெருங்கேடுகளை நீக்கும். வத்திரம் வத்திரலாபத்தையும் மலர் மோக்ஷத்தையும் பூணூல் யாகப்பேற்றையும் சந்தனக்குழம்பு பெருஞ் செல்வத்தையும் அன்னம் சாரூபத்தையும் தூபம் ஆசமனம் அருக்கியம் சானித்தியத்தையும் மணியோசை இராக்கதபயமின்மையையும் தீபம் மோக்ஷத்தையும் ஆலத்தி சித்தியையும் கருப்பூரதீபம் இலக்குமி கடாக்ஷத்தையும் நீராஞ்சனம் சத்துருநாசத்தையும் விபூதி அரசாட்சியையும் தாம்பூலம் இலக்குமியருளையுங்கொடுக்கும். குடைசாமரம் வேதபாராயணம் சிவபிரான் திருநடனத்தைக்காட்டும். மத்தளவோசை தானிவிபருத்தியையும் †கரடி வெற்றியையும் ‡படகம் பாவநாசத்

* அன்னசமிர்த்தி - பரார்த்த பூசாவிதியிற் காண்க.

† கரடி - ஒரு வாத்தியம். ‡ படகம் - ஒரு வாத்தியம்,

தையும் திமிலே காமியம் பலவற்றையுங் கொடுக்கும். இவை யொருநாளுக்கு ஒருமடங்கும் பிரதோடத்துக்கு நூறுமடங் கும் பிறதலத்திற் பலனைத்தரும். திருக்குற்றாலத்தலத்தி லா யிரமடங்கு பலனைத் தருமென்று வேதஞ் சொல்லாநிற்கும், என்று கூத்தனுலயத்து ஆதிசைவப்பிராமணருக்குச்சிவாகம வொழுக்கங்களெல்லாங்கூறிச் சமயவிசேட நிருவாணதீக்ஷை களை யுபதேசித்து அவர்களைப் பொன்னாசனத்திலிருத்தி யபி டேகஞ்செய்து சிவமூலமந்திரத்தைச்சொல்லி நித்தியம் நை மித்தியம் காமியம் சரியை கிரியை யோகம் ஞானம் பஞ்சசு த்தி விபூதிசாதனம் எண்வகைப்பத்தி *ஐந்துபதம் †நாற்கதி ஆ‡றத்துவாவுங் கூறித் திருக்குற்றாலநாதரைப் பூசைசெய்க வென்று அகத்தியமுனிவ ரருளிச்செய்தனர். திரிகூடத்துத் திருமாலைச் சிவபிரானாக்கித் தென்பூமியை வடபூமிக்குச் சம மாக்கித் தேவர் முனிவர்க்கெல்லா முதன்மைபூண்டனர். சிவ னடியார் பெருமையை யந்தோ! யாவரறிபவர். இவ்வாறு திரி

---

* ஐந்துபதம் - சிவமூலமந்திரத்தின் ஐந்தெழுத்து; ஒவ்வொரு எழுத்தும் ஒவ்வொருபொருளைத் தருதலாற் பதமென்றார்.

† நாற்கதி - சாலோகம் சாமீபம் சாரூபம் சாயுச்சியம்.

‡ அத்துவா - ஆன்மாக்களைப் பரகதியடைவிக்கை காரணமாகிய வழி; அது: மந்திராத்துவா, பதாத்துவா, வர்ணாத்துவா, புவனாத்துவா, தத்துவாத்துவா, கலாத்துவா; இவற்றின் விரிவைச் சைவசித்தாந்த நூல்களிற் காண்க.

கூடநாதரைப் பூசைசெய்யுஞ் சிவப்பிராமணருள்ளே தாமு மொருவராயிருந்து பூசித்து, அகத்தியமுனிவர் ஆடிமாத முதல் மார்கழிமாதம்வரை திருக்குற்றாலத்தில் வசித்தனர். இதுவே தமிழ்முனிவர் செய்கையென்று சூதமுனிவர் சொல்லுதலும், நைமிசாரணியமுனிவர் "சிவகதை யெட்டினுள்ளே திரிகூடமலை தீர்த்தம் மூர்த்தி தலம் பராசத்தி குறும்பலா ஆகிய ஆறும் அருளிச்செய்தீர். மற்றையிரண்டினிலொன்றாகிய வேடன் சரிதம் அருளிச்செய்க" என்று கேட்கச் சூதமுனிவர் சொல்வாராயினர்.

நான்காவது சிவபூசைவிதியுரைத்த சருக்கம் முற்றிற்று.

---

## ஐந்தாவது
## நதிவீழ்வேடன் கதிபெறு சருக்கம்.

மயக்கத்தை மருவி மிகுந்தயானைகள் மாலைக்காலத்திற் செங்காந்தட்பூவைத் தீயென்று பயந்து அவ்விடம் விட்டுப் பெயர்ந்து மேகத்தைக் கையாற்பிசைந்து அத்தீயை யவிக்க வூற்றும் நீரையுடைய அருவியாகிய மாலையைத்தரித்த விசாலமாகிய கொல்லிமலையிற் பிரம்பை வேலியாகவுடைய சிறுகுடிவாழ்க்கைக் கொடிச்சியர் மூங்கில்வேலியைக் கொண்ட இடங்களிலே வேட்டையாடுகின்ற வேடர்களைப்புன்சிரிப்பாகிய வேலியினால் வளைத்தாற்போல அம்மலையைச்சூழ முத்தங்கள் பிரகாசிக்கும், அத்தன்மையுடைய பெரிய கிரியிலு

ள்ளவேடர் சிங்கத்தையொத்தவர். கருங்கடல் போன்றமே
னியர். வடவைத்திப்போலுங் குடுமியுடையவர். கொடும்பா
தகஞ்செய்யும் வில்லேந்தியவர்; மலை நெல்லை யரிதல்போல
அகிலுஞ் சந்தனமரமு மொய்த்தகாட்டை வெட்டி யழிப்ப
வர்; வரிசையாக வித்தி விளைத்த தினைக்கதிரைக் கொய்யவ
ருங் கிளிக்குலத்தை விரட்டத் தெய்வத்தன்மையுடைய சங்
கத்தையொத்த கண்டத்தினையுடைய கிளிபோன்ற பெண்க
ளைக்காவல் வைப்பவர்; ஒருகாலையுடையது தாமரை மலரெ
ன்று அதனை நீக்கிய மாதரை யிருகாலையுடைய பரண்மேல்
வைத்துப்புருவமாகிய வில்லுங் கண்ணாகிய பாணமும் பற்று
வென்று இரண்டு கைகளிலுங் கற்களுங் கவண்களுங் கொடு
ப்பவர்; அப்பெண்க ளிசைப்பாட்டாகிய தேனையுண்ண அவ்
விடத்துத்தேவர்கள் வந்து திரிவர்; அவரை யாகஞ்செய்கின்
ற பிராமணர் அவிப்பாகங் கொடுக்கத்தேடுவர்; அக்கொல்லி
மலைமேலே சருகையுண்டு வருந்திக்குகையிலேவாழ்ந்து, என்
று மீளுதலில்லாதவராகிய முனிவர் கிளியோட்டுகின்றவா
சனை தங்கிய கூந்தலையுடைய வேடிச்சியர் மழலைவார்த்தையா
கிய இராகத்துக்கு மனமுருகி யுடலிளைப்பர். இங்ஙனங் கனி
த்ததன்முஞ் சிவந்தவாயுங் கருங்கண்ணுமுடைய அம்மங்கை
யரை வேடர் தினைப்புனங்காக்கவோ? ஆங்கு வைத்தனர்,
அப்புனத்தை யழிக்கவும் அம்மலையில் வாழு முனிவர் துறவி
னை யழிக்கவுந் தவத்தினை யழிக்கவுமன்றோ? இதுநிற்க, அப்

பெண்கள் கொங்கையினால் ஆண்யானையும் நடையினாற் பெண்யானையும் கண்ணால் மானும் சாயலான்மயிலும் இசையாற் குயிலும்போல்பவர். அவர்கைக் கவண்கற்கள் அவரிசையினாலுருகி யழிந்தன. வளைந்த இளஞ்சந்திரன்போலும் நெற்றியுடைய அர்மங்கையர் கிளிகளைத் துரத்தும் பால்போலும் நல்ல அழகிய வோசையே பசிய கிளியை யழைப்பன. காட்டினிடத்து உரல்போன்ற பாதத்தையுடைய யானைகளும் பிடிகளு நெருங்கத் தினைப்புனமழிவது. அங்ஙன மழிதலுங் குறிஞ்சி நிலமாக்களு முல்லை நிலமாக்களுங் கலந்து நெருங்கித் தொடுசெருப்பணிந்து வில்லேந்திப் பாணம்பிடித்து நெருப்புங்காற்று நிகராமெனத் திசைதோறும் வேட்டையாடுதற்கு நிறைவர். அவ்வனத்தில் வாழும் பாவைமார் புருவவில்லுங் கட்பகழியு மொய்த்தல்போலக் கொம்பு சங்கம் வலை பாணம் வில் வல்லையம் வாள் மொய்ப்ப வேடுவர் மொய்ப்பர், மானையும் * கடமானையுந் தாக்குவர். ஆண்யானை பெண்யானைகளை வளைப்பர், மற்றை மிருகங்க ளடிச்சுவடுபற்றிப் பின்செல்வர். பூனைபோன்றவரும் புலிபோலப்பாய்வர்.

மிக்ககுரலையுடைய மதயானைக்கூட்டங்களெதிர்த்து வருதல்கண்டு அவ்வீரர் அவ்யானைகளினடிவயிற்றிடை மலைக்குகையிலே நுழையு மிடிபோல நுழைந்து காலுங் கொம்புந் துண்டாகவெட்டி மத்தகம்பிளக்க விஷ்ணுவைப்போலக் குத்

* கடமான் - ஒரு மிருகம்,

துவர். கொலைசெய்கின்ற வஞ்சகத்தையுடைய புலிகள் மே லே பாய்ந்துவரக்கண்டு பின்னிடாமல் வில்லிலே நின்றும் பாணங்களைவிடுத்து வாயைக்கிழித்துப் பற்களையுதிர்த்து நக ங் கால்களைத்தறித்துச் சரீரநடுங்கக் கொல்லுங்கள் குத்துங்க ளென்று நெருங்கி வாளினாலே கொல்லுவர். மேகத்தை யெ திர்க்கு மலையைப்போலக் கரியை யெதிர்த்துத் தண்டினாலு முசுண்டியாலுந் தலையிலேயடித்து முன்னே யொரு அடித் தூரம்போ யிரண்டடி யதனை யிழுத்தலைத்தலைத்துப் பருக் கங்கற்களிலிருத்திக் காலினாலே மெய்நடுங்கவுதைப்பர். பன் றிகள் பிறைபோன்ற கொம்புடனே கீழ்ப்பார்வையாக நிற்ற லாலே நேரேசெல்லா திடத்தினும் வலத்தினுஞ் சுற்றிவந்து வட்டமாகவு நீளமாகவுஞ் சிலம்பஞ்செய்து இருளொடு இரு ண்மலைந்தாற்போலப்பொருது சாரிகைதிரிவர். உறைகழித்த வாளாயுதத்தை யசைத்து வீரரெதிர்த்தலுந் தரியாமல் மிக்க வெடிகுரலோடு திசைகடோறுமோடிப் பன்றிகள் கலப்பக் காடு காவற்கட்டிக் கைவலைவீசி வீரர் நெருங்கினர்.

அதுகண்டு துன்பமுற்று உலகமெங்கு மொருபன்றி குதித்தோடியது. அதற்குப்பயந்து மேற்கு வடக்குக் கிழக் குள்ளார் இடத்தினும் வலத்தினும் விலகினர். ஒருவேடன் மட்டு மஞ்சாது வடபக்கத்தெழு மப்பன்றியைத் தென்றி சையினின்று மேகத்தைப் பாண்டியன் வளைத்தல் போல வளைத்துத் தடுத்தனனாய்ப் புண்ணுண்டாம்படி பலவாயுதங்

கொண்டடித்தனன். உடனே மண்ணைக்கிளைத்துக்கொண்டு ஞூரத்துடனப்பன்றி பொருது நேர்வர, வேடனும் பின்வாங்காமலெதிர்க்கப், பன்றி விண்ணைக்கிழித்துச்சென்றாலும் விடமாட்டானென்று பயந்து கண்ணுக்கெட்டாத திசைகடோறு நுழைந்துசென்றது. அப்போது வேடன் யுத்தஞ்செய்து சாரிசுற்றி வலம் வருதலாற் சரியையாளரையும் பூச்சரஞ் சொரிதலாற் கிரியையாளரையும், பன்றி மலை காடுகளிற் புகுந்தொளிக்கும்போது தானுமொளியிருந்து பொறிபுலனடக்கி யொடுங்கியிருத்தலால் யோகியரையும் நிகராவான். பன்றியைக் காணுதற்குமுன் சகலரைப்போலவும், பன்றியின் சுவடுகண்டபின் பிரளயாகலரைப்போலவும், கண்டும் அது எட்டாதிருக்கும்போது விஞ்ஞானகலரைப்போலவு மவ்வேடனிருப்பன். அவ்வேடன் குறிப்பை நோக்கும் பாவனையாலும் ஒரு சமயமவன் புரிசமுறுதலாலும் பன்றி ஆசாரியனைப்போன்றிருக்கும். தன்னினமாகிய மிருகங்களுடன்கூடிப்பின்பு பிரியுமப்பன்றியைப் பிரியாது தொடர்ந்தேகுதலால் தத்துவங்கடந்து செல்லும்போது நீங்காத அப்பன்றியின் ஆணவமலமேபோல வேடனிருந்தனன். காடுகடந்து மலையைத்தாவித் திரிகூடமலையிற்புகும் பன்றி நனவு கனவு சுழுத்தியைக் கடந்து துரியத்தை யணுகுவானையொத்திருந்தது.

சிவமதுகங்கையுஞ் சண்பகப்பூந்தடாகமு மற்றுமுள்ள வாவிகளுந் தென்றற்காற்றுலாவுஞ் சோலைகளுஞ் சுற்றித் திரி

கூடாசலபதியைத் தேடும் விஷ்ணுவாகிய பன்றியையும்போ ன்றது. அதன்மேல் தன்னிலைகுலைந்து காட்டில் வலிகுன்றி வலையைக்கிழித்து வாள்வெட்டுண்டு வேடன் விடும் பாண முதலியவற்றுக்குத் தப்பி மேகங் கடலிற்படிந்தாற்போலச் சித்திராநதியிலொரு மடுவிலேபோய்ப் பன்றிவிழுந்தது. இங் ஙனம் பயந்து பன்றி விழுந்தவுடனே வேடனு மந்தத்தடத் திலே பன்றியைக்கொல்ல விழுதலும், அப்பன்றியே யெதி ர்த்துவந்தாற்போல அங்குள்ள முதலையொன்று வேடனையெ திர்த்தது. பன்றி நீரைநீந்தி வெளியேறி யோடிச்சென்றது. முதலை வாலால் வேடனையடித்து வாயாற் கவ்வி யுள்ளேயிழு த்தலும், வேடனுஞ் சினந்து முதலைமேலே குதித்துக் கையி லிருக்கிற வாளினன் முதலையைப் பிளக்குமுன் அம்முதலை பற்களால் வேடன் சரீரத்தைப்பிளந்துவிட்டது. பூமியிலோ டுந்தேர் நீரிலோடாது. நீரிலோடுந் தோணி பூமியிலோடாதெ ன்னும் பழமொழிப்படி வலிமையுள்ள வேடன் முதலையாலி றந்தனன். எவ்வளவு வலிமையுள்ளாரையுந் தானபலத்தா லெளியரும் வென்றுவிடுவர். கொலைபாதகனுகிய வேடன் திரிகூடத்துச் சித்திராநதியில் மாசிமாதம் வீழ்ந்த விசேடத் தால் ஆகாயத்திலிருந்துவந்த விமானத்தின்மேலேறிக் கயிலா ய மலையைச் சேர்ந்து சிவகணங்களோடிருந்தனன். இந்தத் திரிகூடமலைநதியில் வீழ்ந்திறந்தவன் கயிலாயமலைபினுச்சியிற் போயிருந்தனனுதலால் தென்றல் தவழுந் திரிகூடமலையுங்

கயிலாயமும் வேறென்ன முடியுமோ? நதிவீழ்வேடன் கதி பெறு காதையை யிங்ஙனம் சூதமுனிவர் சொல்லிச் சித்திர சபையில் அகத்தியமுனிவருக்காகச் சிவபிரான் றிருநடனங் காட்டியதால் அதன் மான்மியத்தைக் கூறுதுமென்றனர். அதுகேட்டு நைமிசாரணிய முனிவர் அவரை வணங்கி வாழ்த்தி யேழு பிறவியாகிய மான்கள் மாயத், தென்றலாகிய புலி பாய்கின்ற திரிகூடமலைச் சிவபிரான் றிருவடித்தாமரையைப் போற்றி வரம்பெற்றதேவர்கள் பூசைசெய்த மான்மியத்தை யருளிச்செய்யவேண்டுமெனப் பிரார்த்திக்க அவ்வாறே சூத முனிவர் சொல்வாராயினர்.

ஐந்தாவது நதிவீழ்வேடன் கதிபெறு சருக்கம் முற்றிற்று.

---

## ஆறுவது
## வானவர்வழிபடுசருக்கம்.

பிரமா விஷ்ணுவாகிச் சிவபிரானுகிய குறும்பலா ஈசரை மனமுருகிப் பூசனைசெய்து தரிசித்துப் பெறத்தக்கபொருளைக்கருதித் திரிகூடமலையிலே தமது சிவத்துரோகந் தீர்த்துத்தம்பதவியை யளித்த அவரைப் பூசித்துத் துதிக்க வரப்பிரசாத முன்னே வாங்கியிருக்குந் திக்குப்பாலகருந் தேவரும் ஆகாயமார்க்கமாகக்கலந்துவந்தனர். விஷ்ணுவாக நீண்டிருந்தவர் அகத்தியமுனிவருக்காகச் சிவனுகக் குறுகியிருக்கு மற்புதத்தைக்காணும்பொருட்டு முனிவர் சித்தர் கருடர்

கிம்புருடர் கந்தருவர் முதலியோர்களு மாங்குவந்து சேர்ந்த னர். சர்ப்பசயனத்திலே துயிலு மாயனுந் தாமரை மலரிலே யிருக்கும் பிரமனுந் தேவராசனாகிய இந்திரனும் மற்றைத் தேவர்களுமொன்றுசேர்ந்து, மூன்று சிகரமும் பிரமலோகம் வைகுந்தலோகம் இந்திரலோகம்போலுந் திரிகூடமலையிலே காலையிலே சிவமது கங்கையிலுஞ் செண்பகாடவித்துறையி லும் வடவருவியிலும் ஸ்நானஞ்செய்து, அருவி: யலையாகிய கையாற் சந்தனமும் அகிலும் பொன்னும் மணித்திரள்களுங் கொழித்து வீசலால் திருவலமிடுவார்க்கு அத்தொழிலிடைய ருத சங்கவீதியினை வலம்வந்து, உட்புறமதிலுருவாக ஐந்து வாயிலும் ஐம்பொறிகளாகக் கோபுர நான்கும் அந்தக்கரண ம் நான்காக மூன்று வீதியும் மூன்றுலக மாகவிளங்குந் தரணி பீடத்தையும் பரஞ்சோதியாகிய சிவலிங்கப் பெருமானையுந் தரிசித்துத் துதித்து ஆனந்தக்கூத்தாடிப் பாடித் துள்ளித் திரிகூடமலையைக் கயிலாயமலையாக மதித்துக் கருணாநிதியா கிய சிவபிரான் திருவடிக்கீழே தலைவணங்கி யானந்தக்கடலி லழுந்தினர்.

அதன்மேல் ஆகாயகங்கை நீரையுங் கற்பகப்பூமாலையி னையும் அவ்விருக்ஷத்தின் கிளைகள்கொடுத்த வஸ்திராபரண ங்களையும் காமதேனுவருளியபாலையும் உருத்திராக்க மாலை யையும் நீண்ட அலையிலுண்டாகிய அமுதத்துடனே யெடுத் துக்கொண்டு, வாயு திருவலமிட வருணன் சலந்தெளிப்பச்

சூரியர்கள் திருவிளக்குகளேந்தத் தேவர்கள் புட்பமாரிபொழியத் திசைதோறுந் தேவதுந்துபி வாத்தியமுழங்க அட்டவசுக்கள் வேதங்களால் வாழ்த்த இந்திரனேவல்கேட்ப வனைத்திக்குப்பாலகர் வாயில்காப்பத் தேவப்பெண்கள் சாமரம் வீசப்பிரமன் சாந்தியோமங்கிரமப்படிசெய்ய விஷ்ணுமூர்த்தி வந்து திருக்குற்றாலநாதரைப் பூசைசெய்தனர். அதன்மேன் முறைப்படி பிரமனிந்திரன் திக்குப்பாலகர் சூரியர் வசுக்கள் முதலிய தேவர்களுமவ்வாறே பூசித்தனர். இவ்வாறு தேவநாட்டுப்பொருள்களாற் பூசித்துப் பலநாள் கழியவும், எம்பிரான் வெளிப்படாததனாலே முன்னாளில் யானைபூசித்த செண்பகப்பூவாலும் நீராலும் அருச்சனைசெய்யத்தொடங்கினர், அங்ஙனம் அருச்சனையே பொருளாகக்கொண்டு அரிபிரமேந்திராதிகள் வழிபாடுசெய்தபோது, திருவெண்ணீரும் மான் மழுவு மொருபாதி பச்சைநிறமுந் தோன்ற வேதங்கட்குங் காண்பரிய தம்பிரா னெதிரெழுந்தருளினர், உடனே எல்லாருங் கைகுவித்து வணங்கி மனங்குளிரச் சரீரம் புளகமுற ஆனந்தக்கண்ணீர் பொழியத்தரிசித்து, நீரேயடைக்கலமென்று திருவடியைத் தொழுதனர். அவர்களில் பிரமனும் விஷ்ணுவும் யாங்கள் செய்கின்றசெய்கையை நீங்கினோம். உயர்ந்த உம்முடையமுடியும் அடியுந்தேட நெடுங்காலஞ்செல்ல, அப்போது சிருட்டிதிதிசெய்தீர். எங்கட்குங் காட்சிதந்தீர், ஆளுந்தகுதியுடையீர். உமது திருவருள் வாழிவாழி யென்று

துதித்துச்சென்றனர். அவ்விருவருஞ்சென்றபின் மற்றைத் தேவர் சுவாமியைநோக்கி யும்மைத்தினந்தோறும் பூசனைசெய்ய வரந்தந்தருளுமென்றுகேட்க, "எப்போதும் நீங்கள்பகற்காலம் பூசைசெய்யுங்கள் இராக்காலம் அகத்தியமுனிவன் பூசைசெய்க" என்று சிவபிரான் கட்டளையிட்டனர். நாகர் இயக்கர் சித்தர் வித்தியாதரர் முதலாயினோர் சுவாமியை யிந் நகரத்திலே இடபவாகனத்திலெழுந்தருளிக் காட்சிகொடுத்தருளுக என்று பிரார்த்தித்தனர். "திருவிழாத்தோறும் அங்ஙனமெழுந்தருளுவோம் வந்து தரிசியுங்க"ளென்று அவருங் கட்டளையிட்டனர். அவரவ்வரங்கொண்டுசென்றபின் தேவர்கள் திரிகூடநாதரைத் தைமாதப்பிறப்புப் பௌர்ணமி பூசம், மாசிமாதச் சிவராத்திரி பங்குனியுத்திரம் சித்திரைமாதப் பிறப்பு பரணி, சித்திரைப் பௌர்ணமி, வைகாசிமாதவிழா ஆனித்திருமஞ்சனம் மாதபூசை பிரதோடம் சங்கிரமம் திதி வாரமுதலிய புண்ணியதினங்களிலே பூசனைசெய்து சென்றனர். திரிகூடநாதரைத் தேவர்கள் வழிபாடுசெய்த முறை துபியென்று வியாதமுனிவர் மாணுக்கராகிய சூதமுனிவர் சொல்லியபின் நைமிசாரணியமுனிவர் வேண்டுதலால் அகத்தியமுனிவர் பூசித்த மான்மியங் கூறுவாராயினர்.

ஆறவது வானவர் வழிபடு சருக்கம் முற்றிற்று,

---

ஏழாவது

## குறுமுனி வழிபடு சருக்கம்.

தேவர்கள் வழிபாடுசெய்து வரம்பெற்று வானுலகத்திற்சென்றபின் ஆகாயத்திலே கிளைகள் அசைந்து நடிக்குங் குறும்பலாவீசர் பூசைசெய்தற்கும் பொதியமலையில் வாழும் யோகியராகிய அகத்தியமுனிவர் பெரிய தவசிகள் வணங்கத் திரிகூடமலைக்கண் வந்து மனங்களிக்க வணங்கி, அவ்விடத்தெதிர்கொண்டுவந்த பிராமணர் சைவரோடுமகிழ்ந்து வடவருவியிலே தீர்த்தமாடி விபூதி யுருத்திராக்கம் புனைந்து சங்க வீதியினை வலஞ்சுற்றிவந்து திரிமூர்த்தியுமான சிவலிங்கப்பெருமான் முன்னே நான்கு வேதங்களு முழங்கத்தோன்றி, ஐவகைச் சுத்திபுரிந்து சட்கருமத்தையு முணரு மெட்டுவிதமாகச்செய்கின்ற பத்திநிறைந்த மறையோருடன் பூசை செய்யத்தொடங்கி மகுடாகமஞ்சொல்லிய மந்திரத்தாலே திருமுடியிலே வாசனைத்தயில்மாட்டிப் பஞ்சகௌவியமும் பஞ்சாமிர்தமு மபிடேகஞ்செய்து உவர்ச்சமுத்திரத்தையடக்கியகையாலே மற்றையாறு சமுத்திரத்தையு மடக்குதல் போல நெய் பால் தயிர் தேன் கருப்பஞ்சாறு சுத்தநீர் இவைகளையெடுத்து விதிப்படி பல சாரமாகிய மதுரத்தினு மதுரம் பெறச்சொரிந்து இளநீர் சந்தனக்குழம்பு புனிதஞ்செய்பு மன்புமிகு முறைப்படிபெய்து கங்கையாதிய நதிச்சலங்கள்பூரித்த கும்பாபிடேகமும்புரிந்து, சிவபிரானை விஷ்ணுகோல

மமைத்கல்போலப் பீதாம்பரமும் நால்வகை வாசனைச்சந்தன
ங்களும் அன்றலர்ந்த பூமாலைகளும் புனைந்து பாயச நிவேதித்
துப் பல வாத்தியமுழங்கப் பேரொளிக்குமுன்னே பலவகை
ப்பட்ட சிற்றொளிகளெல்லா நின்று சீர்பெற நடிக்குமுறை
போலத் தீபவுபசாரஞ்செய்து நான்குவேதமும் முத்தமிழும்
ஞானசாகரத்திற் படிந்தாற்போலத் தோத்திரம்புரிந்து தெ
க்ஷிணாயனமாகிய ஆடிமாதப் பௌர்ணமி பூரம் சோதியிலும்
ஆவணிமாதமூலம் ஆதிவாரம் திருவோணம் சதுர்த்தியிலும்
புரட்டாசிமாதக் கேதாரம் நவராத்திரி தசமி யுற்சவத்தி
லும் ஐப்பசிமாதப்பிறப்பு துலாராசிசேர்ந்தமகநாள் ஏனைய
விசேட தினங்களிலும் அருச்சனைசெய்து துதித்துவருங்கா
லத்திலே அவ்வகத்தியமுனிவரியற்றும் பூசைத்தொண்டு மன்
புந் திருக்குற்றாலநாதர் திருவுளத்துள்ளே நிறைவுதோன்ற
மகிழ்ந்து தமது இடப்பக்கத்தில் வீற்றிருக்குங் குழல்வாய்
மொழி மூலத்தானத்தின்பக்கமே யெழுந்தருளி, முற்காலத்
திலே தேவர்கள் போற்ற மேற்றிசையிற்சென்று தருப்பாச
னத்திலே யிருந்து பூரணக்ஷத்திற்கொண்ட தவப்பெருங்கோ
லத்தை யுவந்து பார்வதிதேவிக்கருள்புரிந்து அவளை வலப்ப
க்கத்தில்வைத்துப் பிரமன் மணச்சடங்கியற்ற விஷ்ணுமூர்
த்தி தாரைவார்க்கச் செய்த திருமணக்கோலக்காட்சியைக்
கொடுத்தருளினர்.

வேதவிருக்ஷமாகிய குறும்பலாவேபந்தர். வேதன்கிரியை
செய்பவன், விஷ்ணு தாரைவார்ப்பவர், இலக்குமியே வரி

சைசெய்பவள். தலம் நன்னகர். கற்பகம் சங்கநிதி பதுமநிதிக ள் ஏவல்செய்பவைகள். அகத்தியர் முதலிய ருஷிகளும் தே வர்களுந் திருமணக்கோலந் தரிசிப்பவராஞ லந்தமணக்கோல க்காட்சியின் பெருமையைச் சொல்ல வல்லவர்யாவர். திருக் குற்றாலநாதரைப் பொன்னூசல் பாராட்டும் விளையாட்டிலுந் தீபாவளியிலும் பூசித்துத் துதித்துக் கார்த்திகைமாதச் சோ மவாரம் *விருச்சிகச்சுடர் கார்த்திகைத்தீபம் மார்கழிமாதத் திருப்பள்ளியெழுச்சி திருவாதிரை ஊஞ்சல் விளக்குமுதலி ய வருடமாத விசேட நித்தியங்களிலும் மனவாக்குக்காயங் கள் வழிபட, ஆடிமுதன் மார்கழியிறுதியாகிய இராக்கால பூ சனையைமுடித்துக் கோயிலை வலஞ்செய்தேகிச் செண்பகச் சோலையைநோக்கி யகத்தியர் தென்றிசையிற்செல்லச், சூரிய னும் வடதிசையிற்சென்றான். (உத்தராயணம்வந்தது) அச் சோலையே யாகசாலையாக ஆங்குள்ளவாவியே குண்டமாகக் கமுகமரங்கள் தூவிய பூவே பொறிகளாக நாலுபக்கமுமல ர்கள் தேனூறிய நெய்வார்ப்ப நீலோற்பல மலரே புகையாகத் தாமரைமலரே யக்கினியாகத் தோன்றுவதை யகத்தியர்கண் டு, அதன்மேல் ஆங்குநின்றவர் பரவச், செந்துக்கள் கரிந்து விழும்படி சோலை நிழலெல்லாம் வெயிலாகச் சுடுதலைநோக்கி மூன்றுயோசனை தூரத்திலுள்ளோர் வலிய வினையாகிய தளி ர்களைத் தென்றற் காற்றாகிய கன்று தின்று தின்று கெடுத்

* விருச்சிகச்சுடர் - கார்த்திகைமாதப்பிறப்பு.

தலேயும் பார்த்து, அப்பால் வடவருவி நீரிலொரு துளிபட்டு நனேயவந்து பருவதம் போன்ற பாவங்களேப் பறிகொடுப்பவரையும் மனிதரைத் தேவர் வணங்குந் தானத்தையும் பார்த்துக், கூடவந்த ருஷிகளே யழைத்துப் பெரிய யாகஞ்செய்யும் ஓரிடத்தைச் சார்ந்திருந்தனர்.

அப்போதங்கு வந்த பாண்டியராசன் அகத்திய முனிவர் குறிப்பறிந்து சம்புத்தீவுஞ் சிறிதென்னும்படி பெரியயாகசாலே யொன்றமைத்து மேருவைப்போல யூபத்தம்பமு நாட்டி மலேயினேயும் அலேயினேயும் போல எண்ணில்லாத யாகப்பொருள்களுங் கொணர்ந்து குவித்தான். உயர்ந்த பொருள்கள் முழுவதுங் கற்பக விருக்ஷங் கொடுப்பத் தேவர்கள் துதிப்பப் பிராமணர் யாகக்கிரியைகள்செய்ய மேலோரெல்லாம் உன்னததானத்தி லமைந்திருப்ப, அசுரகுலங்கெட, இந்திரன் சந்தோஷிக்கச் சோதிட்டோமம் மத்திபம் அக்னிட்டோமம் வாசபேயம் அதிராத்திரம் சோமம் சாதுரம் காடகம் மயேந்திரம் புண்டரீகம் அசுவமேதம் நரமேதம் பிரமமேதம் இராசசூயம் முதலிய யாகங்களுக்குள் வேதவிதியை யுணர்ந்து மூன்றுலகமும் புகழ ஐஞ்ஞூறுயாகங் கிரமப்படி செய்தனர். யாகமுகத்துத் தோன்றும் புகை யண்டத்தினடியி னின்றுமெழும் புகைப்படலம்போலும். வலஞ்சுழித்து மேலெழுமக்கினி யுகாந்தகாலத் தக்கினியைப் போலும். அகத்திய முனிவர் காலாக்கினி ருத்திரரை நிகர்ப்பர். திரிகூடத்துயாகசாலே

யிலே யாகஞ்செய்தவ ரேறிச்செல்லும் ஆறுகாற்றேருக்குத் தோற்றன்றோ காலேயி லொற்றைச் சக்கரத்தையுடைய சூரி யன் றேருங்கடேலிலே புகும். மலேயிலேவிழும். மாலேயிலே சந்திரன்றேரும் ஆகாயத்திலே விமானமாகச்செல்லும். ஒரு யாகபலன்தேவபோமுகம் நூறுயாகபலன் இந்திரசெல்வமும் ஆம். இவைகளேயுணராத தக்கன் ஒருயாகஞ்செய் தகந்தையி ஞலே தலேயிழந்தனன் *சகரர் தொண்ணூற்றென்பது யாக ஞ்செய்து சாம்பராயினர். பெரியமகம் ஐந்நூறியற்றித் திரி கூடநாதர் திருவருளே யகத்தியமுனிவர் பெற்றனர். அகந் தையற்றூர்க்குத் திரிலோகத்தினுஞ் செய்யக்கூடாத கரும மொன்றுமில்லே.தெக்ஷிணுயனமாதமாறும் அகத்தியமுனிவர் குற்றலநாதரைப் பூசித்து யாகஞ்செய்து பெறற் கரியதவஞ் செய்யுந் தமதிடத்தை நாடிச்சென்றனர். தேவர்கள் உத்தரா யணமாதமாறும் பூசித்துத் தமதிடம்போய்ச் சேர்ந்தனர், அந்தக்கதைக ளிவையென்று சூதமுனிவர் சௌனகாதிமுனி வர்க்குணர்த்திப், பின்னு மம்முனிவர் வேண்டுதலால் சித்தி ர சபையி னந்தரங்கத் திருநடனத்தைப் பகிரங்கமாக நம் பெருமான்செய்த மான்மியத்தைச் சொல்வாராயினர்,

"ழாவது குறுமுனி வழிபடுசருக்கம் முற்றிற்று.

---

* சகரர் - சமுத்திரத்தைத் தோண்டியவர்; இவர் சூரியகுலத் தாசராகிய அறுபதினுயிரவர்,

எட்டாவது

## வாசுகி தவம்புரிந்த சருக்கம்.

ஞானசொரூபராகி யாவருமறியாமல் நாததத்துவத்தின் முடிவாகிய வெளிவீட்டிலே நிருத்தனஞ்செய்யு நம்பெருமான் பராசத்தி தரிசிக்க ஆனந்தக் கூத்தாடுஞ் சபை ஞானசபையாகும். யுகாந்தகால வெள்ளத்திலே யுலகமெல்லாமழியினும் அழியாத திரிகூடச் சித்திரசபையிலே யவர் நடனம்புரிவதைக் கொவ்வைப் பழம்போன்ற இதழையுடைய குழல்வாய்மொழியம்மையைத்தவிர வேறொருவரறியமாட்டார். ஆதலாலந்நடனம் மகாபரம ரகசியமாகும். வேதங்களெடுத்துச் சொல்லும் அந்நடனத்தைக்காண மிகுந்தஆசைகொண்டு பிரமனும்விஷ்ணுவுஞ் சண்பகவனத்திலேதவஞ்செய்திருந்தனர். தமாதமுதலாறு மாதந் தேவர்கள் அருச்சனை புரிந்து திரிகூடநாதர் சித்திரசபைத் திருநடனத்தில் விருப்பத்தோடு யரியதவஞ்செய்தனர். இன்னும் இந்திரன்முதலிய தேவரும் அகத்தியர் முதலிய ருஷிகளுந் திரிகூடத்திலே தவஞ்செய்ய வாஞ்சையுற்றனர். எம்பெருமான் றிருநடனஞ்செய்யுந் திருவடியி லாசைகொள்ளாதவர்யாவர்? சிவமதுகங்கையிலே மூழ்கிச் செண்பகத்தடாகத்திலே தோய்ந்து வடவருவித் தீர்த்தமாடிச் செண்பகக்காவிலே தவமாகிய தேனை மொய்க்கும் வண்டுபோலத் தவத்தோர்சங்க மொய்த்தன. இவ்விதம் பிரமன் முதலிய யாவரு நல்ல தவஞ் செய்திருக்குங்காலத்திலே

பல தலைகளையும் பிளந்த வாயினையும் விஷப்பற்களையு முடைய சர்ப்ப அரசர் வணங்கும் வாசுகி (அட்ட நாகங்களிலொன்று)யென்பவன் பலத்தாலும் அறிவாலு முயர்ந்த ஆதிசேடனாகிய தன்றுணைவன் முற்காலத்திலே சிதம்பரத்திலே சபாநடேசர் திருநடனம் பணிந்தானென்று அந்நடனத்தைத் தானும்பணிய நினைந்து திருக்கயிலாசமலையின்கட் சென்று மகாமேருமலை சிவபிரான் புயமலைக்கு நாணும்படி திரிபுரசங்காரஞ்செய்தகாலத்திலே நாண் (கயிறு) ஆகவும் பாற்சமுத்திரத்திலே யமுதங்கடையும்போது மந்தரமலையாகிய மத்துக்குக் கயிறாகவுமிருந்த தன்னுயர்ச்சிக்குத்தக்கவாறு அவ்வெம்பிரானை வணங்கி, ஐம்பொறிகளையுடைய சரீரங்களாகிய பாவைகளைச்செய்து விஷயங்களாகிய சூத்திரங்களை யுண்டுபண்ணிமனமாகிய கயிற்றிலே பூட்டிக் * கலாதி யேழுதாளங்களை யடித்துப் பஞ்சகிருத்தியங்களாலசைத்து ஆட்டுங்கூத்தனே சரணமென்று துதித்தனன்.

அதுகண்டு கயிலாசபதி "பிலவாசியாகிய சர்ப்பவேந்தனே! நீ வந்த காரியமென்னை" யென்று திருவாய்மலர்ந்து கேட்க, வாசுகி பிறவிப்பிணிக்கு மருந்தாயுள்ளவரே! யும்மைத் தரிசிக்குந் தன்மையினாலே தணியாத காதலோடும் வந்தேன். திருவருளாலே தெரியப்படுத்துவே" னென்று அதுபெற்று நடுங்கி யொடுங்கி வாய் புதைத்துப் "பூதநாதரே! கங்காள

* கலாதியேழு- வித்தியாதத்துவங்கள்.

ரே! வேதங்களுக்கு மெட்டாத வுமது திருநடனந் தரிசிக்கு மாசையுடனே வந்தே" னென்றனன். சிவபெருமான் உமா தேவியார் திருமுகத்தை நோக்கித் தமது சடைமேலிருக்கும் பிறைச்சந்திரன் தளிர்த்தாற்போலும் புன்சிரிப்புச் செய்து திருக்கடைக்கண்களி லமுதமொழுகக் கனிவாய் மலர்ந்தருள் செய்வார். அடியார்கட்கு இடபவாகன தரிசனம் வேண்டும் விதத்தாலருள் செய்வோம். திருநடனக்காட்சியப்படியன்று: ஞானமேலீட்டால் ஆதிசேடன் அனந்தயுகங்க ளரியதவஞ் செய்து மற்றோருகத்திலே சிதம்பரத்திலே வணங்கப்பெற் றான். கனந்தங்கிய வுண்மைத்தவ மவனைப்போல் நீயு மூழிகா லஞ்செய்க" என்று கட்டளையிட்டனர். அதுகேட்ட வாசுகி "சுவாமீ! யநேகயுகங்களுமுமைப்பிரிந்திருந்து தவஞ்செய்யச் சகியேன். திருக்கண்கண்டவர் தீவினைகாண்பாரோ? எம்பெரு மானே! யருளாலேயடிமைகொண்டீர் ஆளக்கடமையுமக்கே" யென்று வணங்கினன். பெருமான் வாசுகிபிரிவாற் றாமைக் குத் திருவுள்ளமிரங்கி யநேகங் கட்டுகளாயிருக்கும் பல்கரு ம்புகளைத் தின்னுதவிதம் அக்கரும்புகளின் சாரங்களை வட் டாகத்திரட்டிக் கொடுப்பதுபோலச் சொல்லுவார் "பாடுகின் ற பூதங்களேவல்செய்யப் பாண்டரங்க மன்றிலே யாடுங்கூத் துங், காளி கருவபங்கஞ்செய்யுநடனமுங், கொடியமுயலகனை மிதித்து மோதுங் கூத்தும் பிறரறியத்தக்கனவைகளாம். நினை த்தவையெல்லா நல்குங்கூத்து நன்னகர்மாகிய திருக்குற்றால

த்திலே நந்தேவியறியுந் திருக்கூத்து. அந்தக் கூத்துக்காரண்ப தற்குப் பிரம விஷ்ணுவுந் தேவரு முனிவரும் அகத்தியரு முற்காலத்திலே புலதலங்களிலே யநேக யுகந் தவங்கள்செய் தனர். அங்ஙனஞ்செய்து பவர்கருத்து நிறைவேறாம லிந்த யுகத்திலு மெமது திரிகூடத்தில்வந்து தவம்புரிந்திருந்தனர். பிறதலங்களிற் பல்லாயிரவருடஞ் செய்த தவப்பலன் திருக் குற்றாலத்தல மோராண்டிலே கொடுக்குமென்னும் வேதவா க்கியத்தா லவர்களாங்கு அநேக குளிகைகளை யக்கினியிலிட் டு வீணாகவலைந்த இரசவாதிகள் *பரிசவேதிக் குளிகை பெற் றாற்போலவந்தனர்.

சந்தனக்கட்டைகளையு மகிற்கட்டைகளையும் அலைகள் சுருட்டி முத்துக்களையெறிந்து பொன்கொழித்துச் சங்கினை த்திரட்டுஞ் சித்திராநதியி னிருகரையிலுந் தென்றல்தவழுஞ் செண்பகச்சோலை யடைந்திருந்து தவஞ்செய்பவர் மனத்தி னினைத்தவையெல்லாஞ் சித்தியாகும். இதுசத்தியம் சர்ப்ப வரசே! மதுரையம்பதி வெள்ளியம்பலமுஞ் சிதம்பரம் பொ ன்னம்பலமுந் திருவாலங்காட்டு இரத்நசபையுந் திருநெல்வே லித் தாம்பிரசபையு மெல்லாருக்கும் பொதுவாகும். திரிகூ டமலைச் சித்திரசபையோ நமது பரம ரகசியத்தானமாகும். உலகத்திலுள்ள நதிகளிலெல்லா மாடினபலனைச் சித்திராநதி கொடுக்கும், உயர்ந்த புனிததலங்கள் தரும்பிரயோசனமெ

* பரிசவேதி - தொட்டபொருளைப் பொன்னாகச்செய்தல்.

ல்லாந் திருக்குற்றாலத்தலந் தந்தருளும். எல்லா மூலலிங்கங்க ளையும் பரவும்பலன்களைத் திருக்குற்றாலலிங்கமே யருள்செய் யும். பரிசுத்தமாகிய அத்தலத்தை நோக்கிவந்தா லடிக்கடி யோர்புத்திரப்பேறு வாய்க்கும். உருகுகின்ற அன்புடைய வாசுகியே! யறிந்தாவ் தறியாமலாவ் தத்தலத்திலே தங்கினு லுந் தீயபாதக வினையகன்று திருக்கயிலாயமலையைச்சேர்வ" ரென்று கண்டகசேதனன் சரிதையைச்சொல்லி விடைகொ டுத்தருளினர்.

அவரது பெருங்கிருபைக்கு மனமுருகி நைந்து அவ் விடைபெற்றுநடந்து ஆற்றிலுள்ள சங்குகளீன்ற முத்து க்களை முட்டையென் றன்னப்பறவைக ளடைகிடந்துகலிக் குந்திரிகூடபுரத்தில் வாசுகிவந்துசேர்ந்து, சந்திரன் முடியிலே தவழுதலாலே அம்மலையே சிவவடிவென்றும் உந்தி நீர்ச்சுழி பூத்தும் பூமியைப்பிளந்தும் வானளவு நீண்டிருந்ததால் விஷ் ணுவென்றும் பூமேலாய் (பூமியின்மேலாகி)நான்குமுகத்தும் வந்து வேதங்கண் முழங்குதலாலே பிரமனாகவும் நினைத்துவ ணங்கினன். ஆகாயத்தையளாவிய மலையி னுச்சியிலிருந்து குதித்தலாலே தேனருவியை யாகாய கங்கையென்றே யதிச யித்து * அாவப்பலதலையால் நிரைத்த மணிகளா லருவியை த்துணைவனாகிய ஆதிசேடனென்னச் சிறிதுசந்தேகித்தான். அம்மலையை இந்திரதநுசா லிந்திரனென்னத் திகைத்தான்.

* அரவம்-முழக்கம்.

தேவர்க ளகலா திருத்தலா லு மெப்பொருளுமளிப்பதனுலுஞ் சண்பகவனத்தைக் கற்பகவனமாகப்பார்த்துத் தருமம்வள ர்ப்பதனுலும் பச்சைநிறமுள்ளதாலும் பராசத்திவடிவமாக த்கண்டு வணங்கி யதன்மேலாங்குள்ள முனிவர்கூட்டத்தை த்தரிசித்து நின்றனன்.

தொழுதகைகள் கிளைகளாகச் சடையாகியவிழுது வீழ ச்செய்து ஆலமரம்போல நிற்பவரையுங் கறையான் சரீரமெ ங்கும்பரந்து புற்றெடுப்பப் புற்ருகி வான்மீக முனிவரொப்ப வரையுஞ் சரீரமுழுது மயிர்போர்ப்ப உரோமசமுனிவர் நிகர் ப்பவரையும் ஒருகா லூன்றுகாலாக வொருகாலைத்தூக்கி அரி பிரமேந்திரர் பதவியை யாராய்ந்து தவஞ்செய்பவரையும் பா தங்களைத் தலைமே லேறச்செய்து பூமியிலிருக்கின்றவரையும் ஒரு நிலையிலேநின்று நடையற்றிருக்கின்றவரையும் ஊசிமே லொருகாலையேற்றி யொருவிரல்மேலே நிற்புவரையும் நாசி மேலே பிராணவாயு நடவாமலிருக்கின்றவரையும் வாசி(சுவா சம்) மேலேறி வீதி (பிரமாந்திரவெளி) யிலே வலம் வருகின் றவரையுஞ் சூரியசந்திரர்கள் பயப்படத், தவாக்கினியையெ ழுப்புகின்றவரையுஞ் சருகு இலை நீர் சூரியகிரணம் வாயு கனி காய் கிழங்கு இவைகளை யொருபொழுதேனு மிருபொழுதே னு முண்டிருப்பவரையு மிவ்வுணவு மில்லாமலிருப்பவரையும் விருக்ஷங்களாய் நிற்கின்றவரையும் அக்கினி மத்தியிலிருக்கி ன்றவரையும் பதுமைகள்போலே நிற்கின்றவரையும் ஊனு

றக்கமின்றி யடங்கி மலைவாய்க் கல்லாய்த் தங்குகின்றவரை யும் உணவுசுருங்கினுஞ் சரீரமெலிவின்றி யிருப்பவரையும் மேருமலையிலிமயமலையிலின்னும் வேறு உயர்ந்தமலைகளினுங் காடுகளினும் பற்பல தலங்களினும் ஒரு யுகம் நான்கு யுகம் மனுவின் ஆயுட்கணக்கின்படி யெழுபத்தொருயுகந் தவஞ்செய்தவரையும் பதினாலு மனுக்கள் வாழ்நாள் முறைப்படி யாயிரஞ் சதுர்யுகங் கழித்துப் பிரமன் பகற்காலத்தை முடிவு கண்டவரையுந் திரிகூடமலையிலே வாசுகி கண்டு திகைத்து நின்று, இவ்விதந் தவஞ்செய்வார் முன்னே நானென்ன தவத்தைச் செய்வேன். முக்கண்மூர்த்தி யாஞ்ஞைப்படி தவமுற்றினு முற்ருவிடினு மித்தலத்திலே புல்லாய் மரமாய் நின்ருலும் நிந்தைக்கிடமாகிய பாம்புப் பிறவிப்பாவம் போகுமென்று தெளிந்து, அவ்விடத்து அரியதவவேள்விசெய்யு மகத்தியமுனிவர் பாதங்களைத் துதித்துப் பஞ்சாக்கரதீக்ஷைபெற்று விபூதி ருத்திராக்ஷதாரணஞ் செய்து நம்பெருமானுகிய சங்கக்குழையாரைப் போற்றித் தவத்துரிமைபூண்டு காற்றேயாகாரமாகச் சலத்திலு மலையினு மக்கினியிலும் இவ்விரண்டாயிரவருடங் கடுந்தவஞ்செய்யுங் காலத்தில் தேவர் தேவனுகிய சிவபெருமான் திருவுள்ளமிரங்கிப் பார்வதியின் திருமுகத்தை நோக்கித் "திரிகூடமலையிற் சித்திரசபை நடனங் காணும்பொருட்டுப் பிரமனுதிதேவர் தவஞ்செய்கின்றனர், கல் மலை மரமாய்ப் புற்ருய்த்தேவர்மெலிந்தனர், சர்ப்பவரசாகிய

வாசுகியுமிளைத்தனன். யாகஞ்செய்து குறுமுனிவனு முடிவி ல்லாத தவஞ்செய்தனன். ஆதலினுங்குப்போவதற்கு வருக" என்று பார்வதியுடனே கயிலாசமலையைநீங்கிச் செண்பகவன த்தி லெழுந்தருளினர்.

எட்டாவது வாசுகி தவம்புரிந்த சருக்கம் முற்றிற்று.

---

## ஒன்பதாவது
## திரு நடச்சருக்கம்.

அன்பினுலே யிருக்கும்போதும் நீங்கும்போதுந் திருக் கயிலாயமலையைவிட்டுப் பிரியமாட்டாரென்றுசொல்ல வெள் விடை மேலே சிவபிரானெழுந்தருளி விநாயகர் பின்னு முரு கக்கடவுள் முன்னு நடக்க, உமாதேவியுடனே திரிகூடமலை யைநோக்கி வரும்போது, நன்னகரிடமெல்லா மிருள்போய்ச் சோதிபரந்தது. தவஞ்செய்வாருக்கு வலப்புயந்துடித்தன. கைகள் தலைமேலேறின. புளகமாகிய போர்வை மூடின. உரோமம் பொடித்தன. அவற்ருல் தவசிகள் சிவபிரானெ ழுந்தருளும் நல்ல சகுனங்க ளிவையென்று மேகவரவுபார் க்குஞ் சாதகப்பறவைகள்போலவுஞ் சூரியோதயம்பார்க்குஞ் சக்கரவாளப்பறவைகள்போலவும் வடதிசையை நோக்கி நின் றனர். அப்போது நீலகண்டமுந் திரிநேத்திரமும் நான்குபுய மும் மணிவடமுங் கொன்றைமாலையு முப்புரிநூன்மார்பமும் சங்கக்குழைகோத்த சர்ப்பக்கயிறுடையசெவியும் உருவமும்

விளங்க எம்பிரான் வந்து காட்சி தந்தருளத், தவத்தோர்தரி சித்து ஆனந்தப்பெருக்கென்னுங் கடலைத்தாவிப் பிறவிவே ரறவீழுந் தருக்குலம்போல வீழ்ந்து பணிந்தனர். அவரை யெம்பிரா "னெழுக" வென்று கருணையாற் பார்த்துச் சோலைசூழ்ந்த நன்னகர்த் திரிகூடத்துக் குறும்பலாவிருக்ஷத்தின் வடபக்கத்திலே சென்றனர். கடல்சூழ்ந்த வுலகத்திலே தவமல்லால்வேறுண்டோ? அதன்மேலெம்பிரான் இந்திரன் பிரமன் விஷ்ணு முதலிய வானவர் முனிவர்காணத் திருக்குற்றாலச் சித்திரசபையிலே திருநடனஞ்செய்ய வெழுந்தனர்.

வாணாசுர னாயிரங்கைகளா லடிக்கு மிருதங்க வோசை யாயிரவிதமாகக் கங்காநதிபாயுங் கடல்போல முழங்கப், பானுகம்ப னிரண்டாயிரங் கரங்களா லெடுத்தூதிய சங்கவோசை யலையாகிய கைகளாற் சமுத்திரம் ஆயிரம் வலம்புரிச்சங்கத்தை முழக்கியது போல் முழங்கத் தும்புரு நாரதரிருவருமேழிசையமுதந் திருச்செவிதோறும் வார்ப்ப வேதங்களாயிரநாமமெடுத்தோத ஆகாயகங்கை யலைகளாலே நீர்த்துளிகளை வீசக் குறுமுனிவரும் வாசுகியுந் தனித்தனி மகிழ்ச்சியடைய, ஒருகையிலே மழுவாயுதம் பிரகாசிக்க ஒருகையிலே யுடுக்கு முழங்க இரண்டு கைகளிலே யபயவரத மெல்லாவுலகத்தையுங் காக்கக் கருணைபரந்த திருவுள்ளத்தா லெல்லாவுயிர்களுங் குளிர்ச்சியடையக் கொன்றைமாலை தேனைச்சொரியப் பிறைச்சந்திர னிளநிலாவொழுக்க உமாதேவியாரிரண்டு

நேத்திரமுங் களிக்க வொரு திருவடித்தாமரையைத் தூக்கி யொரு திருவடிமலரான் முயலகன்மேலே வேகமாகச் சதி (தாளவொற்றுப்) பொருந்தமிதித்துச் சங்கக்குழை நிலவொளியைப் புயமலைகளிற் பரப்பப் பார்வதியம்மை தாளங் கையிலெடுத்தடிப்ப வாயினாலினிய விசைச்சுவை யமுதூற்றச் சரசுவதி நாற்கவிவளம்பாடத் திருமேனி யநேகாயிரஞ் சூரியன் போற் பிரகாசிக்க நிறமுள்ள திருமுகமாகிய செழுமதிமகிழ்ச்சியாகிய நிலவைவிச இராப்பகலறியா தியாவருந் திகைப்பப் பிரகாசமுள்ள மணிகள்பதித்த கழலணிந்தபாதந் தொண்டர்கள் தீவினையைக்கெடுக்கக் கட்கடைக் கருணைவெள்ளம் வெளிப்பட்டு நினைப்பவர் மனமாகிய வாய்க்கால் வழியேசென்று கரைபுரண்டெழுந்து பக்குவப்பட்டவர் தராதரந் தெரிந்து பாயச் சருகையுண்டு தவஞ்செய்த முனிக்கரடுகள்தழைப்பப் பிரமன் றுதிசெய்யத் திருமாலுக்கதிசயம்பயப்ப இடம் வலந் தெரியாமற் றேவர்களிற்ப இந்திரன் நடனமும் நிற்றலுமறியாதவனாயிருப்ப அடைவுசாரிபார்த்துப் பிரமன் அசைவின்றிச் சித்திரப்பொதுவி லோரோவியம்போன்றிருக்க, இத்தகையபொலிவினாலே சூரியன் சந்திரன் அக்கினிமண்டலமோ மலர் தழை பொருந்திய முடியினாலே சோலைக்கூட்டமோ சங்கக்குழையினாலே சந்திரன் விமானமோ நீலகண்டத்தினாலே மேகந்தாங்கியமேருவோ புயங்களாலே மலைக்கூட்டமோ ஏகவெளியால் ஆகாயத்திந்திரசாலமோ எனவும் விண்ணவரு

மண்ணவருந் திகைப்பப் பிறைச்சந்திரனுந் தும்பைமாலையும் பேதந்தெரியாமல் வண்டுகள் சுழலாநிற்பத் திருச்சாந்து மேகத்தையொப்ப முப்புரிநூலின் பிரகாச மின்னற்பிரகாச நிகர்ப்ப வெண்டலைமாலைகள் பிரகாசிப்பன. அவற்றைச் சந்திரக்குழுவென்றெழுந்து கூட்டமாகிய படத்தையுடைய கங்கணமாகிய பாம்புகளாரவாரிக்கத் தேவர்கள் சய சய சயவென்றொலிக்கச் சித்திரசபையினிடத்து நடனம்பணிவாருக்கு முத்தி தகுந் தகுந் தகுமென நடனம்புரிந்தனர். தேவதுந்துபியே * துடியாம். தாளமடிப்பவள் உமாதேவியாம். சுருதிவேதங்களாம். இசைபடிப்பவள் சரசுவதியாம். பார்ப்பவர் அயன்மா லிமையவராம். சருவலோகநாயகனே நடிப்பவன். சபையோ சித்திரசபையாம் என்றால் நடனஞ்செய்யுங் காட்சியின் பெருமையை யாவர் சொல்ல வல்லவர்.

அழகிய கிருபைக்கண்ணுடையவரே! யுமதநிசயத்திருநடனந் தரிசிக்க அனந்தமாங் கண்கள்வேண்டும். எங்களுடைய கண்கள் நாடுதற்கெளியதாகிய காட்சியைச் செய்தருளுமெனப் போற்றித் திருமான் முதலிய தேவரேத்தெடுத்தலுஞ், சிவபிரானவர்கள் விருப்பத்தின்படி நடனஞ்செய்து முடித்துச் சிங்காதனத்தில் விற்றிருந்தனர். தேவப்பெண்கள் சாமரந்தாங்கினர், சனகாதிபருங் காசிபர் முதலோரும் அகத்தியரும் வாசுகியும் பிரமன் விஷ்ணுவு மேனையரு மெம்பிரானைப்

* துடி - ஒருவாத்தியம்,

பரவினர். திக்குப்பாலகர் பல்லாண்டு கூறினர். தேவர்களெ
ங்கும் வியாபித்தார்த்தனராய் மலர்மாரி தூர்த்தனர். அதன்
மேல் எம்பெருமானைப் பிரமன் விஷ்ணு தேவர் முனிவருச்
சனை புரிந்தனர். புடார்ச்சுனபுரமாகிய திருக்குற்றாலத்து மூ
ன்று யோசனைதூரமுள்ள தானத்தைத் துர்க்கைகாப்ப ஆல
யத்தைத் துர்க்கை யேவல் செய்பவள் காப்ப மதில்களை வயி
ரவர் காப்ப மலைத்தன்மையாகிய திருக்குற்றாலத்தற்புதத்
தைக்கண்டு, விஷ்ணு பமைப்றியாதார்போலச் சுவாமியை
நோக்கிக் கயிலாசமலையை நீத்து நீரிங்கே யெழுந்தருளியிருக்
குந் தன்மை யென்னென்று வினவலும், அவர் புன்சிரிப்புச்
செய்துசொல்லுவார். உமையிடத்தும் விநாயகரிடத்து முருக
னிடத்துங் கயிலாசமலையிடத்தும் வைக்குமாசையினுந் திரி
கூடமலையிலதிகவாசை வைத்தனம். விஷ்ணுவேயிந்த ரகசிய
த்தை யொருவருக்குஞ் சொல்லமாட்டோம். உனக்குச்சொல்
லுவோங் கேட்பாயாக. சருவாண்டங்களையு மொடுக்கி மீட்டு
ஞ் சிருட்டிசெய்புநாளில் யாமும் பராசத்தியுமிருக்குமிடமாத
லாலே யெல்லாவுலகுக்கு மாதாரந் திருக்குற்றாலம். இதுவல்
லால் வேறுதானமெமக்குண்டோ? ஊழிதோறு மானந்த நிர்
த்தனஞ் செய்புந்தானமுஞ் சிருட்டியாதி முத்தொழிலுஞ்
செய்பு மூலஸ்தானமுமிதுவே. அறிவைத்தரு தலங்கட்கெல்
லாந் திருக்குற்றாலமேயுயர்ந்தது. என்று கூறுதலும், விஷ்ணு
கேட்டுக் காசியாதிதலங்கள் பலந்தரமாட்டாவோ? என்று

வினவப், பரமேசுரன் அருளிச்செய்வார் அருணை கேதாரம் சிதம்பரம் காளத்தி திருவாரூர் காசி திருமறைக்காடு காஞ்சி திருச்செங்காடு திருவெண்காடு முதலிய திவ்ய க்ஷேத்திரத்திலொவ்வொருகூறுதங்குவோம். திரிகூடத்தலத்திலே சத்திய வடிவாய் ஞானக்கலையெல்லா நிறைந்துநிற்போம். நதிகட்கெல்லாஞ் சித்திராநதி விசேடம், சிவஸ்தலங்களுக்குள்ளே சண்பகாரணியமே யுயர்ந்தது. தெய்வத்தன்மையுள்ள *முத்தலைவெற்பெல்லாஞ் சிவலிங்க சொரூபம். விருக்ஷங்களிலெல்லாம் வேதமூலமாகிய குறும்பலாவே யுயர்ந்தது. ஒரு சிவஸ்தலம் ஆயிரவருடத்திற் கொடுக்கும்பலனை யொருவருடத்திற் காசி கொடுக்கும். அருணாசலம் ஆறுமாதத்திலே யருளும். திருவாரூர் மூன்றுமாதத்திலே யுதவும். இரண்டுமாதத்திற் கேதாரமீந்தருளும். ஒருமாதத்திற் கோகருணமுதவும். எழுநாளிலே திருநெல்வேலி கொடுக்கும். ஒருநாளிலே திருக்குற்றாலந் தந்தருளும்,

பிராமண குலத்தில் குற்சரகோத்திரத்தில் வந்தவொரு புத்திரன் முற்காலத்திலேவடவருவித்தீர்த்தமாடிய, ஒருநாட் பலனளிப்ப அவனைப்பெற்றதாதை நரகத்தைக்கடந்து சுவர்க்கத்தை யடைந்தனன். சங்கேந்திய கையையுடையாய்! சித்திராநதிப்பெருமை சொல்லமுடியுமோ? வாழ்நாளெல்லாம் பாவமே செய்தாராயினும் பாவனையினாலாவது பயத்தாலா

---

* முத்தலைவெற்பு - திரிகூடமலை,

வது விளையாட்டாலாவது எவ்விடத்திருந்தேனுந் திரிகூட மலையைப் பரவிக் கைகுவித்து நாவினாற் சொல்லுவாரானால் தீவினையகன்று நமது பதவியை நண்ணுவர். அந்தவிதமே திசைநோக்கிப் பணிந்து புட்பகந்த னம்மருகேவந்து சேர்ந்த னன். திரிகூடமலை மகிமை சொல்லுதற்கரியது. இத்தலத்து க்கிணையில்லையென்பவர் மனிதர்களுக்கரசராவர். இணையுண் டென்பவர் சருச்சிதைத்தபாவத்திலேபோய்ச் சேருவர். திரி கூடத்தலத்துக்கு மற்றொருதலத்தை யுவமையாகச் செப்பு வோர், இத்தலத்துச் சிவனின்மாமியத்தை நிந்திப்பவர், இங் கேயெம்மைப்பூசிப்பவர்க் கிடர்செய்பவர் யாராயிருந்தாலும் பூமியிலே புலையராய்ப்பிறந்துழலத்தக்கவரே. சிருட்டியாதி மூன்றுதொழிலு நாமிருந்து செய்யுமிந்தத் தலத்தை யன்பு டன் காண்பவர் பணிபவர் மகிமை பகரற்பாலதோ? எத்தல த்திலுறைவாரு நித்திரைவிட்டெழும்போது குற்றாலம் திரி கூடமென் றொருதரமாயினுஞ் சொல்லியெழுவாரானால் அவ ர் சிவமே யாவர். இவ்விதம் இந்தத்தலமான்மியமுடையதா தலாற் கயிலாயத்தைவிட்டு எந்நாளும் நன்னகரத்துச்சின்ம யமாகிய சித்திரசபையிலே நாமிருப்போம்" என்றருளிச்செய் தனர். அதுகேட்டு விஷ்ணு பிரமன் வாசுகி யகத்தியர் அவ்வி டத்துப் பணிவிடை செய்து விட்டுநீங்காராயினர். தேவதுந் துபி முழக்கமுந் தேவர்கூட்டமுந் திருநடனமுமென்று மவ் விடத்து விளங்காநிற்கும். அந்நடனஞ் சிற்பரையன்றி யாரு

ங் காணமாட்டார். தவஞ்செய்தமுறையாற் றேவராதியர் தெரிசிக்கப்பெற்றனர். பிரமன்: ஆதிசத்தி சிவபிரானுடையசொரூபங்களை யெழுதிவைத்தனன். அவற்றைப்பார்த்து வியாசர் முதலியோர் சித்திரசபையென்று திருநாமமிட்டு வழங்கினர். குறுமுனிக்குக் கயிலாசவாசியாகிய நம்பெருமான் அருளிச்செய்த எட்டுவிதமான்மியமுஞ் சித்திரசபை நடனமுஞ் சொன்னோமென்று சூதருஷி யேனைய ருஷிகளுக்குச் சொல்ல, அவர் சூதமுனிவரைநோக்கிப் "பரமேசுரன் றிருவாக்கால் வாசுகிக்குச்சொல்லிய கண்டகசேதனன் சரிதத்தை விரித்துச்சொல்லி யருளவேண்டு" மென்று கேட்கச் சூதமுனிவர் சொல்வாராயினர்.

ஒன்பதாவது திருநடனச் சருக்கம் முற்றிற்று.

---

## பத்தாவது
## கண்டகசேதனச் சருக்கம்.

பூமிதேவிக்கு வாசனை தங்கியகூந்தல்போலச் சோலையும், இடைபோல வல்லிக்கொடியும், தனம்போல, அகிலுஞ் சந்தனமுங் குங்குமமுங் குளிர்ச்சியைச்செய்யும் பொதியமலையும் விளங்காநிற்கும். பாற்கடலினமுதம் வானவருலகத்திற் போயிருந்ததெனப் பொதியமலை யாகாயத்தைக் கிழித்துச்செல்ல அவ்வமுத மாங்குநின்றெழுகியதுபோல அருவி பொன்னைச் சொரிந்து பொதியமலையைவிட்டிறங்கித் தாம்பிரபருணி நதி

யிலேவந்து சமுத்திரத்தைப்போய்ச்சேரும். அந்நதி யகத்திய முனிவர் கமண்டலத்திலே பிறந்து முக்களாலிங்கரது பாவ விநாச க்ஷேத்திரத்திலேவந்து அத்தியாழ்நல்லூர் முத்திதீர்த் தத்திலே யுலாவித் திருப்புடைமருதூரைச் சூழ்ந்து தசரத ராமன் பூசித்த க்ஷேத்திரமும், சிவசயிலமும் * வன்னியீச் சுரமும் வாலீச்சுரமுஞ் சேர்ந்த கடனைநதி யொருபக்கமாக வும் பஞ்சலிங்கம் விளங்கும் பச்சாறு ஒருபக்கமாகவும் இரு கரையிலுமுள்ள சிவாலயங்களொன்பதினும் விஷ்ணுவாலய ங்களொன்பதினு நடைபெற்றுச்செல்லும். இத்தகைய தாம் பிரவன்னியாகிய பெண் வலம்புரிச்சங்கமாகிய பாத்திரத்தை ச் சுத்திசெய்து முத்துக்களாகிய அரிசியை வாரியதிலேபெ ய்து பவளக்கொடியாகிய தீயைமூட்டிச் சிறுசோறுக்கி யலே யாகிய பாவைக்கூட்டி மணலாகிய சிறுவீட்டிலே விளையாடா நிற்கும். அந்நதி பாற்கடலாகப் பொதியமலை சர்ப்பசயனமா கத் தலைவைத்துக் கடலிலே காலைநீட்டிப் பச்சைமால் கிடந் தாற்போலப் பசிய நெற்பயிர்களையுடைய பழன நீண்டுள்ள திருநெல்வேலி க்ஷேத்திரத்தில் உமாதேவிபாகமல்லாத மற் றைப்பாகமும் பச்சொளி பரந்தாற்போன்று பசியநிறமுடை த்தாய் விபூதி சந்திரன் கங்கைநதி யிவைகளின் வெள்ளொளி யைக் கவர்ந்தாற்போலு முத்துக்களையுடைத்தாயிலகு மூங்

---

* வன்னியீச்சுரம் - அக்கினிபூசித்த தலம், அது ஆழ்வார்குறி ச்சி நகரத்துக்குக் கிழக்குப்பக்கமுள்ளது.

கின்மரத்து நிழலிலேவாழுஞ்சாலிவாடீசர் பரசமயங்களாகிய பகையைக்கெடுத்துச் சைவசமயத்தைநிலைநிறுத்தும் இடபக்கொடி நின்றசைய முரசங்கண் முழங்க ஆலயத்திலிருந்தரசு செய்யுங் கீழ்வேம்பநாட்டிலே திருநெல்வேலிக்கு மேல்புறஞ் செஞ்சியர் தஞ்சையர் வழுதியர் வஞ்சியர் ஈழர் என்னும் ஐந்து நாட்டாராகிய வைசியமாக்களுக்குப் பொதுவாய் வியாபாரஞ் செய்யுமிடமாகிய வொரு பெரிய பட்டினத்தில் நீதிசேர்ந்த நால்வருணத்தவருள் ஓதல் பசுக்காத்தல் உழவு வாணிபம் வேட்டல் ஈதலாகிய ஆறுதொழிலு மியற்றும் வைசியர் குலத்திலே வாணிபஞ்செய்யுங் கவிப்பர்குடியிலேபிறந்தவன்; அவன் பொருளீட்டுதல் பங்கிடுதல் எல்லாமிற்றகாலத்திலுஞ் சிறிதும் பயப்படாமை தனியே யெவையுஞ்செய்தல் காலத்துக்குத்தக்கபடி யொழுகல் கோபமின்மை துன்பம்வந்த காலத்திற்றேறுதல் உறுவதுதெரித லென்னு மெட்டுக்குணங்கள் பொருந்திய தத்தனது புத்திரன். நாடுநகரம் மலை காடு சமுத்திர மிவற்றிலுள்ள எல்லாப்பொருள்களு நிறைதலாலவன் பண்டசாலை வைசியர்கள் பொக்கிஷம்போலிருக்கும். பவளமும் பொன்னுங் கருப்பூரப்பொடியும் அகிலுஞ் சந்தனமும் வயிரமு முத்தும் பெண்கள்கொங்கையு மனமு நடனஞ் செய்யுமார்பையுடையவன். முடிவில்லாத திரவியம் பெற்றிருந்தானேனுங் களவுசெய்யும் ஆசையுள்ளவன். கோபித்தெல்லாருநிந்திக்கச் சிறியவிலைகூறிப் பண்டங்கள் விற்குங்கொடிய,

வன். சருக்கரை கருப்பூரம் சந்தனக்கட்டை தேன் முதலியவ ற்றைப் பண்டமாற்றுக்குநான்குபங்குவிலையதிகங்கூறிப் பொருளீட்டுபவன். பேயின் பசிக்குப் பெரிய விருந்தாகிய தன் னுடல்வியாதி தன்னையுண்ப துணரானுய்ப் பிள்ளையுந் தன் ரூயும் பசித்திருக்கத் தானேயுண்பவன். திரிமூர்த்திகளையுந் தலைவணங்காதவன். கன்னத்திலடிப்பவர்க்கன்றி யெவருக் காயினுஞ் சிறிதுங்கொடாதவன். திரவியமிகுதியாகத்தேடத் தீவுகளெங்கும்போய்வர மரக்கலங்களிலே சரக்கேற்றுபவன். காணி பொருளைக் கொண்டு கோடி பொருளீட்டினுலும் அவற்றிற் காணியேனுந் தருமஞ் செய்யமாட்டான். நெருங் கிய விண்ணுலகத்துப் பொருள்களு மண்ணுலகத்தில் வரச் செய்யும் அறிவுடையவன். கண்டகசேதனனென்னும் பெய ரையுடையவன். நாலுதிசையிலுள்ள பண்டங்களெல்லாங் கிழக்குவடக்குத் தெற்குத்திசைகட்கு விலைப்படச்செலுத்தி மேற்றிசைக்கட்சென்றுவிற்கத் தானே இடபங்களிலே பொதியிட்டுக்கொண்டு சித்திராநதியின் கீழ்த்திசையிற் போயினு ன். சூரியனு மத்தமித்தான்.

மறுநாட்காலை ஐப்பசிமாதப்பிறப்புப் புண்ணியகாலமாத லாலே நாற்றிசையிலுள்ளவரனைவருந் தருமமாகிய கரும்பின் சாரத்தாற் சமைத்த சருக்கரைவட்டாகிய சண்பகாரணியத் தை யடைந்தனர். பிராமணர் முதலிய நால்வருணத்தவரும் ஏனைச்சாதியாருந் தேவருந் திரிகூடமலையைப் பருவகாலத்து

மேகம்போலக்கூடிமொய்த்தனர். சிவம்துகங்கையைத் தேவ ருஞ் சித்தருஞ் செண்பகாடவியை மௌனயோகியரும் வட வருவியை மானிடருஞ் சார்ந்தனர். ஆதலா லந்நகரம் பூமியந் தர சொற்கம்போலுமிருந்தது. தீர்த்தத்தின்அலையிலே மூழ் குவார் திருமாலையும், தீர்த்தநீர்ச்சுழியின் மூழ்கியெழுவார் பிர மனையும், தீர்த்தத்திலே தோன்று மிந்திரதநுவிலே படிந்த வர் இந்திரனையும், அருவியிலே யாடினவர் சிவபிரானையு நிக ராவர். சுவர்க்காதிபோகத்தை யிச்சித்தவர் நதியின்பலதுறை யிலு நீராடி நன்னியமங்களைச்செய்து பிராமணர்க்கு வஸ்தி ரம் உண்வு இரத்நகடகம் பூமி பொன் பசு விளைநிலம் கன்னி காதானம் முத்து குதிரை யானைமுதலிய தானஞ்செய்தனர். பிறவிவேரறுத்துச் சிவபதத்தைச்சேரவிரும்பியவர் : சிவபி ரான் பார்வதி விநாயகர் குமரக்கடவுள் விஷ்ணு முதலிய தே வாலயங்களின் பூசையும் அடியவர் பூசையு நலம்பெறச் செய் தனர். கண்டகசேதனன் கொண்டுவந்த பண்டங்களெல்லாம் அநியாயவிலைக்கு விற்றும் பண்டமாற்றுச்செய்தும் பற்பல பொற்பொதியாக்கினன். அவன் கொடுமையைப் பார்ப்பதற் குப் பயந்தொளித்தல்போலச் சூரியன் மறைந்தனன். அன் றிராத்திரி விலலாதிருந்த சரக்கெல்லாம் மறுநாட் கொடிய விலைக்குவிற்றுப் பிறருக்கணுவுங்கொடாதவனுய்த் தன்னூர் போய்ச் சேர்ந்தனன். யாருக்கு முற்றவிடத் துதவிபுரியாத செல்வம் உவர்ச்சலப்பெருக்கன்றோ? கோடிநாள் தவஞ்செய்

தார்க்கு மனுகவொண்ணாத சங்கவீதியிற் போனானல்லன். சித்திராநதிக் கரையிலிருந்துந் தீர்த்தமாடினானல்லன். பொருளே பின்னுந்தேடித் திரவியங்காத்த பேய்போலிருந்தனன். தினந்தோறு மூனைச்சுவைத்துக் கடித்ததனாற் பற்கள் தேய நடையுங்குறுகித்தளர உடல் * ஆட்கடியன்போலக் குறுகி யுயிர்விடுஞ் சமயத்திலே யமதூதர்கள் தண்டமேந்திவந்து முயற்சியினாலே திரவியத்தை யீட்டிச்சேர்த்தாய். தானங் கொடுத்தறியாய். விளக்குமாறு குப்பையைக்கூட்டிக் குவித்தல்போல நீ சேர்த்துவைத்ததிரவியம் யாருக்குதவி தருமமில்லாத கெடுமதியுடையோனே! யமபட்டணத்துக்கு வாவென்றழைத்தனர்.

அப்போது உயிர்சோர்ந்து கண்டகசேதனன் மனஞ்சுமூன்று கொடிதாகத்தேடிய பொருள்களையும் அந்தப்பொருள்கள் தன் னுயிர்போஞ்சமயத்தி லுதவிபுரியாத வாதனையையுந் தனக்குவந்த நிந்தனையையு நினைந்து நினையாததெல்லா நினைவானாய்த் தீயவழியாக வந்த பொருளைச் சிவபிரான், விநாயகர், உமாதேவி, முருகக்கடவுள், விஷ்ணு இவர்கள் திருப்பணிக்குக் கொடுத்தேனுமல்லேன். மேலோர்க்குச் செருப்புங் குடையுங் கொடுத்தேனல்லேன். அன்னசத்திரங்கட்டி யுண்பவர்க்கெல்லா மன்னமிட்டேனுமல்லேன். திருநந்தனவனம் வைத்துத் தெய்வங்களுக்கெல்லாந் திருப்பள்ளித்

---

* ஆட்கடியன் - ஆளுக்கடிமைப்பட்டோன்.

தாமஞ் சேரும்படி செய்தேனல்லேன். தளிரையுடைய வரு
க்கை நெல்லி தேமா தென்னை கமுகாதி பலவிருக்ஷம் வைத்
தேனல்லேன். அடுத்தவிடு வாழ்வுற வாழ்ந்தேனல்லேன்.
சுற்றத்தாருக்கூட்டி வளர்த்தேனல்லேன். தாழ்ந்த குடும்ப
ங்களைத் தாங்கினேனல்லேன். முற்காலத்திலே விரும்பப்ப
ட்ட புண்ணியத்தை மேன்மேலும் வளர்த்தேனல்லேன். ம
ழைகாலத்திலே யொதுங்க இடங்கொடுத்தேனல்லேன். பொ
ருளில்லாதார்க்குக் கன்னிகாதானஞ் செய்தேனல்லேன். சி
வாலயத்திலே திருவிளக்கிட்டேனல்லேன். நதியிலே பாலம்
படித்துறை கட்டினேனல்லேன். குருவுக்கும் அடியாருக்கு
ம் பிராமணருக்கும் போசனஞ் செய்வித்தேனல்லேன். சித
ம்பரம் குற்றாலம் பாவநாசம் காசி இராமேசுரத்துக்குப் போ
வார்க்குத் திரவியங் கொடுத்தேனல்லேன். வஸ்திரமில்லார்க்
கு வஸ்திரமும் பொருளில்லார்க்குப் பொருளும் பசியுள்ளா
ர்க்குச் சோறுங் கொடுத்தேனல்லேன். ஊசியினு மூதியம்பா
ர்த்தே னொருபிடி யமுதாகினு மனத்தோடு பிச்சையிட்டுண்
டறியேன். ஆலயங்கட்டாவிடினும் அதை வலமாகவந்து
வணங்கினேனல்லேன். குளங் கிணறு வெட்டினேனல்லேன்.
வீண்பொருளைச் சேகரித்தேன். முட்டுண்டுகுனிந்தேனென்
செய்வேன். ஒன்றுஞ்சொல்ல நாவெழும்பவில்லை. அந்தோ!
நிலையில்லாததேகத்தையும் வாழ்வையு மெய்யென்று நினைத்
து அளவில்லாத கொடுமைசெய்தேன். அவத்தைவந்தடுத்த

தந்தோ? விலகுதற்குத் தருமமென்னு மெய்த்துணையில்லாத பாவி பலவாறுகச்செய்தபாவம் பலித்ததென்று அயர்ந்து சோர்ந்தனன்.

கடுகளவு மீவில்லாத பாவியாகிய கண்டகசேதன னிங் ஙனஞ் சோர்ந்துநடுங்கிப் பக்கத்தார் பொருளையபகரித்துக் கொண்டுபோகப் பார்த்துப் பேசவாயில்லாமற் பதைபதைத் துயிர்நீங்கித் துணையின்றிப் பாவமென்னும் பெரிய பாரத் தைச்சுமந்து பேரும் பொருளு மனையு மாதரும் ஒருவருக்கும் பயன்படாத சரீரமும் பூமியிற் கிடப்பத் தனியே தன்வினை பிடர்பிடித்துத் தள்ளச்சென்றனன், யமதூதர் பெரிய கயிற் றாற் கட்டிப்பயப்படுத்தி, ஆயுதங்களாற்றாக்கி நெருப்பாற்றி லே மயிர்ப்பாலத்திற் போக்கி முள்ளிலே புரட்டி முரட்டுச் சரீரமெல்லாம் புண்ணாக்கி யமன்முன்னே கொண்டுபோய்வி ட்டனர். தூதர்கள் கண்டகசேதனனை யடிப்பதைக்கண்டு யமன் மனமிரங்கிக் கட்டவிழ்த்துவிடும்படி செய்து இனிய வார்த்தைகூறித் தூதுவர்க்குச் சொல்லுவான், பலநாளும் பாவியாகிய இவன் பாவமே செய்தாலுஞ் சிவபிரான் றிருக் குற்றால க்ஷேத்திரத்திலே போய்ப் பூருவத்திலே மூன்றுநா ள் தலவாசஞ் செய்திருந்தான், எந்தக்காலத்துத் தவமோ? தேவர்களுக்கு மிது கிடையாது, ஒருநாளிருந்தபல னிவன் செய்த பாவமெல்லாம் போக்கிவிட்டது மற்றொருநாளிருந் தபல னிவனைக் கயிலாசமலையிலே சேர்த்துவிடும், இன்னு

மொருநாளிருந்தபலன் சிவபிரான்மேற் கடனாகவிருக்குமெ ன்று சொல்லிய சமயத்திலே சிவகணங்கள் விமானங்கொண் டுவந்து வானவர் மலர்மாரிசொரிய அதிலேற்றிச்சென்றனர். நமன் றாதுவரதிசயித்தனர். கண்டகசேதனன் போய்க் கயி லாசமலையிலே வீற்றிருந்தனன். இந்தமான்மியமுள்ளதுதல வாசமெனச் சூதமுனிவர் நைமிசாரணிய வாசிகளுக்குச்சொ ல்லக்கேட்டு, அவர்கள் "இனி வடவருவியாடிய வொருநாட் பலனாற் பிதா நரகத்தை நீங்கியிருக்கப் புத்திரன் செய்த செய்கையை யருளிச்செய்க" வென்றுகேட்கச் சிவபிரான் விஷ்ணுவுக்குச்சொல்லிய முறைப்படியே யச்செய்கையினைச் சூதமுனிவர் சொல்லுவாராயினர்.

பத்தாவது கண்டகசேதனச் சருக்கம் முற்றிற்று.

---

## பதினோராவது
## கவுற்சனச்சருக்கம்.

நீராடப்புகுந்தமாதர் கூந்தல்வரையுந் தாவுங் கரியகண் களைத் தம்பகையென் றையுற்று நீலோற்பலமலருங் கெண் டைமீனு நீருள்ளொளிக்குங் கேணிகள் நெருங்கிய சோலை யைப்பார்த்து அச்சோலையி னழகிய மலரில் விளையாடுங் கிளி கற்கண்டுபோலுஞ் சொல்லார்ந்த அம்மாதர் வாயாகிய கொவ்வைக்கனியை விரும்புந் தொண்டைநாட்டில் உழவருக் கெதிரே நடந்து வெடிதாவி மாமரத்தின் கிளைகளைக்கிழித்து

க் கமுகம்பாளையைக்கலந்த வாளைமீன் சோமசுந்தரபாண்டிய
ன் மீனக்கொடியைப்போலுங் காஞ்சிபுரத்திலுள்ள சிவாலய
த்திலமர்ந்த மாமரத்தடியி லெழுந்தருளிய ஏகாம்பரேசரை
யிரண்டுகையாலணைத்து வளைத்தழும்புங் கொங்கைத்தழும்
புந்தந்த காமாக்ஷியம்மை யறம் வளர்க்கும் அந்நகர்க் கொரு
பக்கத்திலே தேவதுந்துபி முழங்கும் வீதியி னழகுவாய்த்த
சோலைவளமுள்ள செஞ்சாலி வேலிமிக்க தலைநகரத்திற்பிரா
மணகுலத்திலே குற்சர் கோத்திரத்திற் பிறந்து வடகலைவே
தம் பயின்றவனொருவன்; அவனுக்குப் பாவக்கிரகங்க ளுச்ச
மேறச், சுபக்கிரகங்கள் நீசமடைய, இராகு கேதுக்களுங்
* காரிசேயு முதிக்குஞ்சமயத்திலே கவுற்சனென்னு மொரு
புத்திரன் †கரும்பினி லரும்புபோலப் பிறந்தனன். பாவமெ
ல்லா மொன்ருகத்திரண்டு குழந்தைவடிவாகிய அவன் சன்
மார்க்கமெல்லாங் கீழே கிடக்கக்கிடந்து பாவந் தலையெடுப்ப
த் தலைநிமிர்ந்து தவழ்ந்து வஞ்சனையுஞ் சூதுங் கொலையும்
நடைபெற நடக்கத்தொடங்கினன். அழுந்தோறுஞ் சீவகோ
டிகளெல்லா மழும்படி யழுவான். பேசுந்தோறும் பொய்யுங்
கோளுங் கடுஞ்சொல்லுமே கற்பான். பழிசெய் துயிர்களை
வதைக்கும் பயிற்சியே பயின்ருன். மழையால் வளரு முப

* காரிசேய்-குளிகன்.

† கரும்புனிலரும்பு-கரும்பினுச்சியிற் பயனிலதாகிய அரும்பு; அது மலர்ந்தாலு மணமில்லாதது.

யோகமற்ற செடிகள்போலக் காமம்வளர வளர்ந்தான். அத ன்மேல் உபவீதந்தரித்து, வேஷக்காரர்போல முன்குடுமிதரி த்துக் கூட்டமாகிய மந்திரங்களெல்லாம் முறைதவற வுச்சரி த்துப் பிராமணரோதும் வேதக்கிடையெல்லாங் கீழேகிடத்த லாகக் கைவிட்டு மற்றைநூல்களைப் புலிக்குட்டி கொலைகற் றதுபோலச் சிறிதுகற்று ஆசாரியர்போதிக்கும்போது தரும சாத்திரங்களைக் கைவிட்டுத் திருட்டுப் பலிக்குங்காலத்தை யறியவேண்டிச் சோதிடநூலே பயின்று தேர்ந்தனன். ஆத லாலேயரசன் பேரவைக்குப் புரோகிதனுயினுன். தேர்ச்சியி னுலே பிறன் குற்றங்கூறித் திரவியமிகுதியாக ஈட்டுதலினு லரசனைத் தன்வயப்படுத்திச் சர்ப்பத்தைக்கண்டித்து ஓந்தியி னிடத்தகப்படு மயில்போலத்தூர்த்தர்வயத்தகப்பட்டனன்.

அப்பால் பிரமசாரியென்னும் பெயர்மாறவேண்டி யிலக் குமிபோலுமொரு பிராமணப்பெண்ணை * யிராக்கதமணஞ் செய்து வேட்டகமே காமவேட்டையாடுங் காடாகவிருந்து நாட்டில் விவாகஞ்செய்யுங் கோலமுற்ற பெண்கள்கூட்டமா கிய மான்களைத் திரவியமாகிய வலைகொண்டு பிடிக்கும் வே டனுமாகி யந்தமான்களைப்பற்றுங் கலைமானுமாயினுன். மனு வந்தரம் பருவம் மாளையம் சங்கிராந்தி யட்டகை விதிபாதம் வைதிருதி முதலிய தொண்ணூற்றாறு தர்ப்பணகாலமும் மா

---

* இராக்கதமணம் -பெண்ணினத்தார் கொடாமல் பெண்ணை வலிந்து பற்றிப்புணர்வது.

தர்முலேத்தடமன்றி வேறு தடாகத்திலே மூழ்கிப் பிதிர்க்க கடன் செய்யாதவனுனன். அன்றியும் பிறந்ததினம் சிவராத் திரி இரண்டு சந்தியாகாலம் விரததினம் அட்டமி மாதாபிதா சிரார்த்ததினம் பதினுன்கு முதலிய புண்ணியகாலங்களினும் பெண்கள் புணர்ச்சியைவிட்டுநீங்கான். மாதர்புணர்ச்சிக்குச் செல்லுஞ் சந்தியே சந்தியாவந்தனமாக மிருகங்களின் முறை யே முறையாக எந்த மாதரையுங்கலந்து, போகமே குலமாக மையலே நியதியாக விரகமே யொழுக்கமாகக் கைக்கொண்டு சாதுதருமத்தைவிட்டுக் காயத்திரி முதலிய மந்திரங்களை மறந்து மங்கையர் * உந்தியந்தடாகத்திலே மூழ்கி யவர்முலே களின் சாந்தம்பூசி பிரகசிய மவர்பாற்பேசி மன்மதனுகிய தெய்வத்தை வணங்குவான். உதயத்திலே ஸ்நானஞ்செய்து நித்தியகன்மமுடித்து அக்கினிகாரியஞ்செய்து பண்டைக்கரு மமுடித்துக்கிரமப்படி யறத்தைப்பேணி விருந்தோடு சுற்றத் தாரையு முண்பித்து மாலேயில் விருத்தியடைவார்க்கெல்லாங் களைபோல வளர்வானுயினன். அப்பால் அரசன் செங் கோல்செலுத்து நீதியைவிட்டுக் கொடுங்கோல்புரியும் வஞ்ச கஞ் செய்துங் கணவனைப்பிரியாக் கற்பின் மகளிரைப்பிரியும் படி செய்துந் தன்னிடத்து வந்த பிராமணப்பிள்ளைகளுக்குத் தீமையே போதிக்கத்தொடங்கினன். பெண்கள் செய்யும் பாவம் புருடர்களுக்குப் புருடர் செய்யும்பாவம் அரசர்களு

---

* உந்தி-கொப்பூழ்.

க்கு அரசர்கள் செய்யும்பாவம் புரோகிதருக்கு ஆதலால் இவன்: மேற்சொன்ன மூவர் பாதகத்தையுந்தாங்கு முழுச்சுமை தாங்கியாயினான்' இம்மட்டோ? மனத்தினினைப்பதொன்று சொல்வதொன்று செய்வதொன்றுமாகத் தன்னினத்துமாதர் முறையைத்தவிர்த்து மிழிகுலப்பெண்களைச்சேர்ந்துங் கூரிய கொடிய யுத்தத்திலேபோய்ப் பகையைவென்று கொலைசெய்தும் நம்பினவர்க்கு வஞ்சகஞ்செய் திகழ்ச்சியுற்றும் மணிமந்திரஅவிழ்தங்களாற் பிறர்மனைவியரை மயக்கஞ்செய்து பகை பழிக்குப் பயப்படாதவனாகியுஞ் சலத்திலே மூழ்கியறியானாய் மடவார் செம்பஞ்சுக் குழம்பிலே மூழ்கியும் மதுபானஞ்செய்தும் அடுத்தவர் குடியைக் கெடுத்தும் அருக்கியம் பலிகொடுத்துண்ணுமற் குலாசாரந்தவறியும் நியாயவழிக்கு விரோதஞ் செய்துஞ் சிவக்ஷேத்திரத்தைச் சிவனடியாரை யலைத்துங் கொலை குருநிந்தை புலை பொய்களை யனந்தங்கோடிசெய்துங் கடலின் மணலினுமதிகமாகிய விவசாரஞ்செய்தும் விவாகஞ் செய்தநாளன்றி மற்றைநாள் மனைவியைத் தீண்டாமலுந்திரிந்தனன்.

அவன்மனைவி யருந்ததிபோலுங் கற்புடையவள்; அவள் தவத்தாலேமணந்தநாளே கருப்பமுற்றுச்சங்குவிலையில்லாத முத்தமீன்றதுபோலச் சுகுற்சனென்னுமொரு புத்திரனைப் பெற்றனள். பிள்ளைப்பெற்றனளென்று நினையாமல் மனைவியை நிந்தித்துத்திரிவான், பரத்தைமாதர் தொடர்ச்சிவிட்டு

நீங்கான். வேம்பினைத்தின்னும் புழு கரும்பின்சுவையை யிச்சிப்பதுண்டோ? கற்புடைப்பெண்களைப் பார்த்தபாவம், திரவியங்கவர்ந்தபாவம், மனைவியை மனங்கொதிக்கச் செய்தபாவ முதலிய தீமைகள் சேரத்திரண்டு பஞ்சிலக்கினிபோலக் கவுற்சனைப்பற்றிப் பிடிக்க, நாளுக்குநாள் கராம்புநிலமுழுங் கொழுப்போலத் தேய்ந்து இறந்தனன். கவுற்சனிறந்தவுடனே யந்தநாட்டிள்ள மனிதர் பால் தேய்த்துமுழுகித் தீவினை நீங்கினர். பெண்கள் நறுநெய்யிலே மூழ்கிச் சருக்கரை வழங்கியார்த்தனர். தருமங்களுயர்ந்தன. தாழ்ந்தபூமியுமுயர்ந்தது. கவுற்சனை யமதூதர் தண்டஞ்செய்து வலைவீசிப்பிடித்துக் கொண்டுபோய்க் குறுந்தடிகளாலடித்துத்தள்ள இரண்டுகால் சோர நடந்தனன். நூறுகாதமோடும்படி தூதரடித்தனர். நூறுகாதமுருண்டுவிழச் செடிகள் தலையைப்பற்றி யிழுக்கச் செய்துபுரியைக்கட்டி யிருநூறுகாதமிழுத்துப் பற்பலதுன்பஞ்செய்து யமபட்டணத்திலே கொண்டுபோயினர். அவ்விடத்து மலைபோன்றபுயமும்பெரியதண்டமும்வடவைத்தீப்போன்ற குடுமியும் நெருப்புப்பொறிபறக்குங் கண்களுங் கழற்காலும் வீரதந்தமும் விளங்க யமனரசிருக்கக்கண்டு, கவுற்சன் பயந்து கீழேவிழுந்தனன். அவனை யமதூதர் தலைமயிரைப் பிடித்திழுத்து யமன்முன்னே விட, யம னிந்தப்பாவியை யடிமின் உதைமின் வெட்டுமினென்று சினந்து இடியஞ்சும் படி பார்த்தான். அப்போது அங்கே மேகம்போன்ற நிறத்

தினர் பேய்முகத்தினர் தீப்பறக்குங்கண்ணினர் உரத்தசொல்லை யுடையவராகிய வேலையாளர் இருப்புலக்கை தண்டம் பாசம் வாள் முதலிய ஆயுதங்களையெடுத்துவந்து, ஆட்டுஞ்செக்கும் அரைக்கும் யந்திரமுங் கழுவும் நாயும் பாம்பும் வடமுந் தூக்கும் விட்டமுங் காய்ச்சிய குறடுந் தூண்டிலும் வலையுஞ் சூழ அங்குள்ள பாதகரை யுறுக்கிக்கட்டி இறுக்குவர். கோபிப்பர். எற்றுவர். கந்துகந்தா றொறுக்குவர்; இவைகளைக் கவுற்சன் பார்த்துப் புலம்புவான்.

இயம தண்டனை யிவ்வளவுகொடிதென்று தெரிந்தேனல்லேன், காமக்குறும்பனாகிய யான் குருவாக்கியமு மெய்யென்று தெரியேன். எண்ணில்லாத கோடி தீமை செய்தேன். புண்ணியஞ்செய்தறியேன். கழுகுக்கோ? கவணுக்கோ? மழுவுக்கோ? வாளுக்கோ? நரகவேதனைப்புழுவுக்கோ? ஆயுதங்களை வீசுந்தூதர்படைகளுக்கோ? என்னுயிர்ப்பலி கொடுப்பதென்று மனங்கலங்கி யேங்கித் திடுக்கிடக் கையுங் காலும் புத்தியும் பதறிக் கண்ணீரொழுக நின்றனன். அவனைத் தூதரெற்றினர். உதைத்தனர். தடிகளை வீசி முந்தினர். வாயிலே புழுக்களைவாரிச் சொரிந்தனர். அக்கினியிலே தள்ளினர். வாய் புலம்பச்செய்தனர். கழுவிலிட்டனர். மலமும் புழுவுந் தின்னும்படி வாரி வாயிலிட்டனர். கண்களிலே யூசியை நிறுத்தினர். பல்லையுடைத்தனர். கன்னத்தைக்கிழித்தனர். காலைத் தளைந்தனர், துணித்தனர். கையை வெட்டினர். உலக்கை

யாற் சரீரத்தையடித்து வீழ்த்தி யெலும்பை நொறுக்கினர். செக்கிலிட்டாட்டினர். இன்னும் பலவாறு சகிக்கக்கூடாத துன்பமெல்லாஞ்செய்தனர். ஆயுதங்களுந்தேய்ந்தன. தூதர் கைகளுஞ் சலித்தன. அவனுயிரை யிருபத்தெட்டுக்கோடி நரகிடமுஞ் செலுத்தினர். யமனுக்கினைப்படி விகடபத்திரன், பாசபாணி, உக்கிரன், துன்முகன், ஆதிய தூதுவர் முற்படக் கோடி கோடி கொடுமைசெய்ய ஆடியோடித் தவிப்பவ்வுருயிரைத் தருமஞ்செய்யாத கவுற்சன் கண்டு வாடிச்சுழன்று மயங்கினன். அங்கே நம்பினவர்பொருளை யபகரித்தவ னுயிரைக் கும்பிபாக நரகத்திற்றள்ளினர். சிவாலயம் விஷ்ணுவாலயம் மடம் அறச்சாலையைக் கெடுத்தவனுயிரைப் பாழ்நரகத்திடை வீழ்த்தினர். தேவஸ்தானம் பிராமணரிவர்கட்கு வரியைக்கூட்டிக் கொடுமைசெய்த பாவியுயிரை யெரிவாய் நரகிடையிட்டனர். சிவாலயம் படித்துறை தடாகத்தைச் சார மலசலமோசனஞ் செய்தவருயிரை யெச்சில்வாய் நரகத்திலே விழ்த்தினர். அரசனுக்கு அநீதிபோதித்துக் குடிகளுக்கிறைப்பண மதிகப்படுத்திக் கோட்சொன்ன குறும்பனுயிரைக் காளகூடநரகத்திலே கவிழ்த்தனர். கூடவிருந்து முகமன்கூறிப் புறத்திலே வஞ்சகம் பேசியவனுயிரைக் கும்பியிலே தள்ளிச் சம்மட்டியினலடித்தனர். ஒழுக்கத்தைவிட்டுச் சந்திமறந்து ஊனுண்ட மூடன் சரீரம் புழுச்சொரியப் பறவைகள் குத்த அவனுயிரைக் கோரநரகினிலே யழுத்தினர்.

பறவை விலங்குகளைக்கொன்று பசுங்காவின்மரத்தை வெட்டினவனுயிரை யசிபத்திரமென்னு நரகத்திலே தள்ளினர். சூழ்ச்சியினுலே பிறர்பொருள் விரும்பிய கள்ளனுயிரைக்காலசூத்திர நரகிடை வீழ்த்தினர். நன்றிகொன்றவனுயிரை யிருணரகத்திலே யெறிந்தனர். இவருட் கவுற்சன் பட்டபாடு இலேசோ? பாவமுங்கண்டுசலித்தது.

இவ்விடத்து இவைநடக்கும்போது இவன்மைந்தனுகிய சுகுற்சன் தன்னுடையபதாய் குணமமைந்த வேதப்பிராமணர் குழாத்தைச்சேர்ந்து காஞ்சி க்ஷேத்திரத்தையடைந்து, பூவரும்புபோலக் குலவொழுககம் பூண்டு வேதமோதி வருகின்ற நாளிலே யவ்வூர் வீதிதோறுஞ் சபைதோறுந் தன்றகப்பன் செய்த பழிபாவங்களை யிரண்டு காதுகளும் வருந்தக்கேட்டுப் பிராமணகுலத்திலே குற்சர் கோத்திரத்திலே பிறந்து மென்றுதை பாதகஞ்செய்தான். அந்தோபாற்கடலில் விடம்போலப்பிறந்த தகப்பன்செய்த குற்றமெல்லாங் கேட்கி லென்காதையுஞ்சுட்டுக் கருத்தையுஞ் சுடுகின்றன. இங்ஙனஞ் சொல்லுதற்கரிய பாவஞ்செய்தானை நரகத்தைவிட்டு நீக்கச் சகரரறுபதினுயிரம் பேரையுமீட்ட புத்திரன்போலத் தவஞ்செய்தேனில்லை. புத்திரனுக அவனிடந்தோன்றும் வன்பழிபோக்க இதுவே மார்க்கமாகுமென்று தீர்த்தயாத்திரை செய்ய நினைந்து கங்கை சோணை சரசுவதி சிந்து நருமதை காளிந்தி கோதாவரி காவிரி சேது வைகை தாம்பிரவன்னித்

தீர்த்தங்களாடித் திரிகூடமலைச்சாரலைச் சார்ந்து, தருமார்த்தகாம மோக்ஷத்தை விரும்பினவர் யாவரும் வருகென அலையாகிய கையைக்காட்டி, வந்தவர் பாவங்களோடச்சிலையிலே யம்பு (நீர்) பூட்டி யருள்வடிவாய்த்தோன்றும் வடவருவியைக் கண்குளிரக்கண்டு போய்ச் சித்திராநதி மகிமையை நயந்து பாடியாடி யகங்குளிர்ந்து கும்பிட்டு மலர்களாலருச்சித்துச் சிரத்திலே கரத்தைக்குவித்துக் குறும்பலாவீசரைத் தொழுது ஆனந்தக்கூத்தாடி வேதமோதி யங்கிருந்து வடவருவித் துறையாடி வருநாளிலே, அவன் பிதாவாகியகவுற்சன் நரகத்திலே படுந்துயரத்தையு மவனைத்துன்பப்படுத்தும் யமதூதர் சலிப்பையும் நாரதமுனிவரங்கேகண்டு சலித்துக் கண்ணைமூடி யோகத்திலிருந்து மனத்துக்கெட்டா ஞானக்கண்டிறந்துபார்த்தலும் நரகவேதனை யிவனுக்குப் பிரமகற்பந்தொலைந்தாலுந் தொலையாது. ஆனாலுஞ் சர்ப்பம் மணியைப்பெற்றது போலிவனொரு புத்திரனைப் பெற்றிருக்கிறான்; அவன் திரிகூடமலையிலே சித்திராநதி தீர்த்தத்திற் பத்தரொடுஞ் சித்தரொடு மூழ்குகின்றான். அவனாலே யிவன்பாவ மகலுமெனத் தெளிந்து, அவனாலே யாமுந் திரிகூடமலையை யடையப் பெறுவோமென்று சடைமுதுகிலே யசைய வந்தனர். அம்முனிவர் வரவைக் குற்சர்பெருங் குலதீபமாகிய சுகுற்சன் கண்டு மனங்கசிந்து தாழ்ந்து அருக்கியபாத்தியங்கொடுத்துப் புட்பாஞ்சலிசெய்து பணிந்து எம்பிரானே! நீரிங்கெழுந்தரு

ளியவித மென்னை? யென வினவுதலும், புருடரிற் சிறந் தோனே! நீ யிங்கினிதிருக்க உன் தந்தை நரகத்திலே கிடத்தல் நன்றோ? வென்று நாரதர் சொல்லச், சுகுற்சன் மீட்டும் வண ங்கி "யென்பிதா துயரந்தீர்க்கு மார்க்கம் அருளுக" எனக் கேட்க, நாரதர் கூறுவார். "வேதப் புதல்வனே! யுன்பிதா நரகத்தை விட்டுக் கரையேற வேண்டுமானல் வடவருவித் தீர்த்தத்திலே மூழ்கிய வொருவருடத்திற் பாதியாகிய வுத்த ராயண மாதமாறில் மாசிமாதமூழ்கிய பலன்களிலே பன்னிர ண்டாவதாகிய துவாதசி தினத்திலே மூழ்கியபலனை நீயவனு க்குக் கொடுக்க வேண்டு மென்றனர்.

அது கேட்டுச் சுகுற்சன் மனங்களித்து முனிவர் கட் டளைப்படி மாசிமாதத்துப் பன்னிரண்டாந் திதியிலே சித்தி ராநதியின் மூழ்கிய பலனைத் தன்றுதைக்குத் தத்தஞ்செய்து தாரை வார்த்தனன். அத்தாரை நீர் பாதகமாகிய குறும்பை பெறியும் புண்ணிய தாரையோ? கவுற்சன் மனவிருளகற் றுங் கதிர்த் தாரையோ? தீவினையாகிய விடந்தீர்க்கு மமு த தாரையோ? அரியவுயிர்த் தாரையோ? நாமறியோம். உ டனே தேவலோக வாசிகள் விமானங்கொண்டு கவுற்சனைத் தேடி வந்தனர். நரகங்களவனைக் கரையிலே கொண்டு வந்து விடுத்தன. யமன்றாதுவர் பயந்தனர். யமதருமராஜன் கவுற் சனைக் கொண்டுவருக வென்றுத்தரவு செய்யத் தூதுவரோடி யவனை யமலோகத்துக்கு வடதிசை மார்க்கங் கொண்டு வரு

கின்றனர். வரும்போது கவுற்சன் அங்கே தாய்தந்தையரை ப் பூசித்தவர் சற்புத்திரரைப் பெற்றவர் மாமன் முதலிய பெரியோர் வழி நின்ரோர் மனத்திலும் வாக்கினுந் தீமையி ல்லாதவர் தெய்வ மிகழாதவர் ஆகிய இவர்கள் பெருஞ்செல் வராய் வீற்றிருக்கும் அரசவீதியையும், நாயகனைத் தினந் தொழும் பெண்கள் நாயகனோடும் புருடனிறந்த போதவன் கூடவிறந்து அப்புருடனோடும் வாழ்ந்திருக்கும் வீதியையும், பிணைப்பட்டுத் துணைவராய் அன்னியர் பயந்தீர்த்தவரும் ஒப்பில்லாத செல்வராய் மாடகூடந்தோறு மகிழ்ந்திருக்கும் வீதியையுந் தடாகங் கிணறு வெட்டினவர் பலனுண்டாகு மரங்கள் சோலைகள் வைத்தவர் இடமில்லாதவர்க் கிடங்கொ டுத்தவர் மழைகாலத்தில் வஸ்திரம் போர்வைகள் வழங்கின வர் கோடைகாலத்திற் பாதரக்ஷை குடை கொடுத்தவர் செ ல்வராய் புபரிகைதோறும் வீற்றிருக்கும் வீதியையும், ஒருவ ருக்கு வந்த மானங்காத்தவர் பிழை பொறுத்தவர் பிராமண ருக்கிடர் நீக்கினவர் துன்பமுற் றவருக்கபயந்தந்தவர் சிறை மீட்டவர் தண்ணீர் குடிக்கும் பாத்திரமுதவினோர் தண்ணீர் ப் பந்தர் வைத்தவர் சேனை காவலராய் வாழ்ந்திருக்கு மன் றத்துடன் *செச்சையினையும், தடாகந்தோறும் பிதுர்பலியீ ந்தவ ரடைந்த பதவியினையும் பார்த்து இடந்தோறும் பொலி ந்த வளத்தினை லியமன் பட்டணமிதுவோ? வென்று பலவீதி களைக் கடந்து யமனரண்மனை வாய்தலின் வழியே போனான்.

---

* செச்சை - உன்னதமான பெரிய கட்டிடம்.

அவ்விடத்தில் அன்னதானஞ் செய்து பிக்ஷையிட்டுண்டவர் யாசகர் மிடிதீர்த்தவர் சொன்னதானம் கோதானம் பிராமணர்க்கீந்தவர் எப்படிப்பட்ட தானமு மேற்பவர்க்களித்தவர் ஆகிய இவர் இமயவருலகம்போலும் பொன்னாற்செய்த மண்டபந்தோறுந் தலைவரா யிருப்பதையும், புண்ணியம் வாழ்த்த முறை முறை காலங்கள் பணிசெய்ய உயர்ந்தவர் தருமசாஸ்திரஞ் சொல்ல வித்தியாதரர்பாடத் தேவப்பெண்கள் சாமரம் வீசத் தேவர் தானவர் சூழ அரசர்வணங்க யமதருமராஜனிருந்த பெரிய சபையினையும் பார்த்தான். அதன்மேல் தேவர் முனிவர் சயசயவென்று நிற்பப் புயமலையிலே தாவுகின்ற ரத்ந குண்டலங்கள் பிரகாசிக்க முகமாகிய சந்திரன் புன்னகையாகிய நிலவினைப் பொழியப் பொன்னரியாசனத்திருக்கும் யமன் புண்ணிய சொரூபத்தை நோக்கிக் கண்களிப்ப நின்று, அங்கே யமன் பாவர் கூட்டத்தையும் பாவர் வேடத்தையுங் கொண்டு பாவர்களைத் தண்டஞ்செய்வதையுந் தேவர் கூட்டமுந் தேவர் வேடமுங் கொண்டு புண்ணியஞ் செய்தார்க்கருள் புரிகின்றதையும் யாவரிடத்து நடுநிலைமை யியற்றுவதாற் றானுவ ரிவனுக்குத் தருமனென்னும் பேர் வந்ததென்று சொல்வதையுங்கண்டு கேட்டுக் கவுற்சன் யமனுக் கெதிரேசென்று வணங்குதலும், யமன் முகமலர்ந் துள்ளங் கனிந்து நின் புத்திரனாலே தண்டனை நீங்கினாய். அவனுனக்குச் சித்திராநதிப்பலன்கொடுத்தலாலென்னுஞ் சமயத்தி

லே தேவரார்த்தனர். தேவதுந்துபி முழங்கின. புட்பமாரி பொழியப் பட்டன. கவுற்சனைத் தேவர்கள் விமானத்திலே ற்றினர். உடனே யமன் பின் சென்று வழிவிடவந்து திரி கூடமலையைக் கண்டெதிரே தொழுதனன். சற்புத்திரரைப் பெற்றவர் பேறு மற்றொருவ ருலகத்திற்பெறுவரோ? இங்ஙனந் தேவரோடு விமானத்திலேறி யாகாய மார்க்கம் வருகின்ற கவுற்சனை யவன் புத்திரனாகிய சுகுற்சன் கண்டு நாரத முனிவரை வணங்கித் தென்றிசையி லொரு சூரியனுதிக்கின்றதென்று சொல்ல, நாரதர் நீ யுன் பிதாவுக்குத் தந்தபலன் அதோ வருகின்றதென்றனர். அந்தச்சமயங் கிட்டவந்து விமானம் விட்டிறங்கிக் கவுற்சன் நாரதர் முனிவர் பாதங்களைப் பணிந்தனன். சுகுற்சன் தந்தையின் பாதங்களை வணங்கினன். உடனேகவுற்சன் மகனை வாரியெடுத்துப் புயத்திலணைத்துக்களிகூர்ந்து உச்சிமோந் துடலம்புளகங்கொள்ள நெடுங்காலம் யமபட்டணத்திற் பட்டபாடெல்லாஞ் சொல்லி நரகத்தினின்று கரையேறியதும் யமனுபசரித்தது நிகழ்த்திப் புத்திரனோடு சென்று வடவருவியிலே தீர்த்தமாடிச் செய்கடன் முற்றிச் சங்கக்கோயிலை வலம்வந்து திரிகூடநாதரை வணங்கி, வருத்தஞ் செய்கின்ற நரகவேதனையைத் தவிர்த்துச் சுவர்க்க பதவியைக் கொடுத்தனை. வடவருவிதந்த பலன்போலுமென்று மைந்தனை வாழ்த்தி நிறுத்திவிட்டு நாரதமுனிவரை மீட்டும் பரவி விடைபெற்று விமானத்திலேறித் தேவ

வாத்திய மொலிப்பக் கவுற்சன் கற்பகநாட்டையடைந்தனன் நாரத முனிவர் சொல்ல அதனுற்றகப்பனுக்கு மைந்த னரக வேதனை தவிர்த்த கதையினைச் சொல்லியபின்பு திரிகூட மலையின் றிசைநோக்கி வணங்கி வாழ்ந்த புட்ப கந்தன் கீர்த்தியை விஷ்ணுவுக்குச் சிவபிரா னருளியவாறே சவுனகராதியமுனிவருக்குச் சூதமுனிவர் சொல்வாராயினர்.

பதினேராவது கவுற்சனச் சருக்கம் முற்றிற்று.

---

## பன்னிரண்டாவது
## புட்பகந்தச் சருக்கம்.

பொன்னுலாகிய மாடங்களையுடைய வீதிகளணிவகுப்பாகமுரசமொலிப்பக் கொடிகளே கொடிப்படைகளாக வளைந்து தேவராசனைத் தன்னுட்டரசனுகிய * உக்கிரகுமாரபாண்டியன் வென்றனென்று பாண்டி நாடு தேவநாட்டை வென்றது. அந்நாட்டிலே யாகாயத்தை யளாவிய மாட கூடமும் மலைக் கூட்டமுஞ் சேனையாக மேகமண்டலத்தைச் சார்ந்த கொடிக்கூட்டங்கள் சிறகுகளாகக் கோபுரமாகிய அரசன் பெரிய துசத்தம்ப நாட்டி யிந்திரன்மேற் செல்லும் படைவீடு போன்றிருந்தது கொற்கை நகரம். அதிலே புலிக்கொடியைத் தாங்கிப் போர்செய்கின்ற சோழராசனும் பறவைகளைப் படுக்கும் வில்லைக்கொடியாகத் தா

ங்கிய சேரராசனும் *புல்லைக்கையிலே யுடையராகத் (தோல்வி யுடையராக) மீனக்கொடி தாங்கிப் பாண்டியனரசிருக்குமத்தாணி மண்டப முள்ளது. இத்தகைய இராசதானியாகிய அந்நகரத்துப் பிராமண குலத்திலே குசலனென்றொருவ னிருந்தனன். அவன் ஆறு அங்கமும் ஐந்துவேள்வியும் நான்கொழுக்கமும் மூன்றக்கினியும் பாதுகாத்து இம்மை மறுமைப்பயன் கருதி மனவொருமை வாய்ந்த அக்கினி குலத்தாருடனே, மணக்கின்ற சரீரத்தையுடைய மான் பாலூட்ட யானைக்கன்றுண்டு களிப்பதுபோல நூல்கள் பயின்று மகிழ்வானுயுயர்ந்த வேதநூல்களை யோதிப் பிரமம் சைவம் வைணவம் காந்தமாதி பல புராணங்களைப் படித்துப் பல செடிகளிலும் போய்த் தழைமேயும் ஆடுபோல யாரிடத்திலும்போய் அத்திரிமனு, வாசிட்டமென்னு நூல்களைக் கற்றுச்சமய நூல் பிதற்றித் திரிந்தனன், மாவிரதம் பாசுபதம் காளாமுகம் சைவம் வயிரவம் வாமமென்னும் உட்சமயமாறும் பொருந்திய நூல்களைக் கற்றிருந்தும் மெய்ம்மார்க்கத்தை விட்டு அன்னிய மதப்பிரவேசஞ் செய்து வைதிகத்தையுந் தழுவமாட்டான். புறச்சமய நூல்கள் பயின்று வைசேடிகம் மீமாஞ்சை பவுத்தம் ஆருகதம் உலோகாயுதம் நையாயிக

---

* புல்லைக்கையிலேயுடையோராதல் - தோல்வியடைந்தவருயிர் பெறற்பொருட்டுப் புல்லைக் கையிலே யெடுத்துவாயிற்கொளவுதல், இது-யுத்தமுறை.

மென்னு மதங்களையுந் தெரிந்து பிறர்க்குப் போதிக்குங் குருவுமாயினன். பலநூல்களும் பயின்றுணர்ந்துணர்ந்தினலும் அவற்றின் பொருளையும் உயர்ந்த சமயத்தையுந் தேறமாட்டான். பல பண்டஞ்சேர்ந்த கடைவீதியிற் புகுந்துங் கரும்பைவிட்டு வேம்பு வாங்குகின்ற சிறுவனைப்போலாயினன். ஓதியுமுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானறியாத பேதை யுட்பேதையாகிப் பிராமண குலத்துப் பெருமையை நீங்கினன். நீதிநூல் கற்றோர் சொல்லு நெறியினு நில்லானுய் வேதங்கள் சொல்லு மெய்ப்பொருளெல்லாம் பொய்ப்பொருளென்று சொல்லுவான். கீழ்த்திசை மேற்றிசையாக வெனக்குத தெரிதலாலே வேறுதிசை யில்லை. திக்குப்பாலகரில்லை. பழவினையுமில்லை. செய்யும் வினையெல்லா முடனுடனழிதலாலே பாவபுண்ணியமில்லை. கறந்தபால் முலைபுட்புகாது. விழுந்த பழம் கொம்பிற் சேராது. அதுபோலிறந்தவர் பிறப்பதில்லை. யிறந்தவருயிர்கள் கீழ்மேலும் பறந்திடக்காண்பதில்லை. யாதலால் நரகஞ் சொர்க்கமில்லை. தெய்வமுமில்லை, உருவம் வேறில்லாததாற் சாதிவித்தியாசங் கிடையாது. பாருங்கள் தங்களுக்கிசைந்த போகத்தை யநுபவித்தலே முத்தி யினதை விட்டுத்துறவு பூண்பதே நரகம். அவரவர் சரீரத்துக்கேற்ப வுண்டுடுத்தலே தரும மார்க்கம். பசியாற் சரீரம் வருந்தித் தவஞ்செய்தலே பாவமார்க்கம். என்று, நன்மார்க்கத்திலே நடப்பவரை மயக்கி யந்தகாரத்திற் புகுத்தலே தொழிலா

கக் கொண்டான். பெரிய வேதங்களை யுணர்ந்தோரை யே மாற்றிக் காமனூலையே பயிலும்படி செய்தும் காலைமாலை ஸ்நானஞ்செய்து விபூதிதரிப்பாரை யிளவெந்நீர் மூழ்கிச் சந்தனம் பூசச்செய்தும் ஓமாக்கினியிற் சொரியு நெய்யை யுண்டியிலே சொரியச்செய்தும் ஸ்திரீகளுக்கு மாடவர்களுக்குங் காமமே மிகவிளையச்செய்துந் தான் விழும் படுகுழியிலே விழும்படி செய்தனன்.

இம்மட்டோ? சிவாலய விஷ்ணுவாலய சேவை செய்யச் செல்வாரையுங் கங்கை கோதாவரி காளிந்தி காவிரி தாம்பிரபருணித் தீர்த்தமாடச் செல்வாரையுந் தடுத்தனன். திருக்குற்றால நாதரை வணங்கச் செல்வாரை யந்தி சந்தியிலும் விசேடகாலங்களிலும் போய்த்தடுப்பது நியமமாகக்கொண்டு அறிவென்கிற பாலை விஷயமாகிய வெடிப்பு நிலத்திலே கொட்டினான். பாவனையிலுஞ் செய்கையிலும் பத்தியினாலே பயத்தினாலே விளையாட்டினாலே யாவரேனுந் திரிகூடாசலத்தைத் திக்குநோக்கிப் புகழ்ந்து வணங்கினால் மோக்ஷமடைவரென்று படித்திருந்துந் தெரியாதவனாய் உள்ளூரிலுள்ளாரை விலக்குவானன்றிப் புறநாட்டுள்ளாரையும் விண்ணுலகத்தாரையுந் திரிகூடத்துக்குச் செல்வதை விலக்கமாட்டான். ஆகாயத்திற் றோன்றுஞ் சூரியனைக் கைக்குள்ளே மறைக்கமுடியுமோ? யாரையும் புறமத நூலால் வென்று திரிதலாலவ்வூர்க்கெல்லா மொருவனா யுயிர்களுக்குத் துன்பஞ் செய்யுங் களைபோன்றிருந்தனன்.

பெண்களுடைய மோகமே கொண்ட மடமையோனுகிய குசலனிங்ஙனமிருக்க, காவிரிநதியின் வடகரையிலே சைவ வேதியனொருவன் சைவவேதாந்த புராணங்களை யுணர்ந்து பெண்டு பிள்ளை பண்ட பதார்த்தங்களெல்லாம் பொய்யென்றுணர்ந்து மாயையாகிய இருளைக்கடக்குஞ் சிவநெறி விளக்கும் ஞானசூரியன் போலுதயஞ்செய்திருந்தனன். * மானதம் † வாசிகம் ‡ காயிகமென்று சொல்லப்பட்ட மூன்றில் மேலாகிய செயல்களை யாராய்ந்து புண்ணிய நதி யாடல் சிவ தரிசனஞ் செய்தல் வாழ்த்தல் தியானங்களை யறிந்து, கங்கையாதி தீர்த்தமாடி வருதற்குச் சரீர நிலையாமையை யெண்ணி எல்லாத் தீர்த்தமுந் தரும்பலனைத் திரிகூடமலைச் சித்திராநதி தருமென்பதைப் புராணங்களா லுணர்ந்ததுடன் தேவர்கள் புல்லாய்ப் புதலாய் விருக்ஷங்களாய் விலங்காய் மனிதராய்த் தவஞ்செய்யப்பட்ட தலந் திருக்குற்ருலம். குறும்பலா மூர்த்தி, பிரமவிஷ்ணு ருத்திரனுகிய மும்மூர்த்தி சொரூபம் என்பதுந்தெரிந்து அங்கே செல்லும் விரதங்கொண்டு காவிரியாடிக் கடவுளை வணங்கிச்சேது மூழ்கித் திருச்செந்தூரைச்சேர்ந்து சேவித்துக் கொற்கை நகரத்தையடைந்து பிராமணர் வீதிக்கட்போயினன். சிவசின்னங்

---

* மானதம் - மனத்தாற் செய்யப்படுவது.

† வாசிகம் - வாக்காற் செய்யப்படுவது.

‡ காயிகம் - சரீரத்தாற் செய்யப்படுவது.

தாங்கிச் செல்லுஞ்சைவப்பிராமணனைக் குசலன்கண்டு மனம் பொறுமல் கோபித்து விபூதிதரித்து வேறுவேடம் பூண்டதனுல் வேதநூலுணரவில்லைப்போலும். தருக்கஞ்செய்யவல்லையாகில் வாவென் றதட்டினுன். சைவ வேதியன் நீதிநூலுணர்ந்தார் முன்னே பேசினுல் உன்செய்கை வெளியாகுமென்முன். இவ்விருவர் தருக்கத்தையும் பார்ப்பதற்கு அங்குள்ள பிராமணரெல்லாந் திரண்டு கூடினுர்.

கடவுள் வழிபாடில்லாவித மாறுமட்டுப் பேசுங் குசலன் சொல்வது சரியோ வென்பார் சிலர். இத்தகைய திருடர் கள்ளத்தை வெளிப்படுத்த வந்தவர்போலச் சைவ வேதியன் ருேன்றின னென்பார் சிலர். இம்மறையோன் கல்வியிற் கடல்போலுமென்பார் சிலர் .குசலன் வாயடக்கவுரியனென்பார் சிலர். இருவரையுஞ் சபையிலின்றுபார்ப்போமென்பார்சிலர். நீதிநூன் முறைப்படி வென்றவர்வழியில் நாம் நிற்போமென்பார் சிலர். வந்த பிராமணரிவ்வாறுக, சைவவேதியன் சபையில்வந் தொருபக்கத்திலிருந்தனன். வைதிக சபையினடுவே சமயவாதஞ்செய்யுங் கூட்டத்தோடு சந்திரனை யெதிர்த்துவருமிருள்போலக் குசலனும் வந்தெதிர்த்தனன். அப்பால் பேசுதற்கு எண்ணில்லாமதத்தோரை யேவினன்.சைவவேதியன்கேட்டு வேதமுதலிய சாஸ்திரங்களாலே தக்கவாறு ஒவ்வொன்றுக்கும் விடைபகர்ந்துவென்று அறிவிலிகாள்! வாயை மூடிக்கொண்டு சும்மா போமென்றனன், மறுத்துப்பேச வறி

யாம லவரெல்லாமீண்டனர். உடனிருந்த பிராமணரெல்லாஞ் சைவவேதியனிடத்திலே யுபதேசம்பெற்றுச் சைவவைதிக நெறியையடைந்தனர். தமிழ்நாடெல்லா மெய்ம்மையாற் சைவவைதிகங்களுயர்ந்தன. வஞ்சகர் பயந்தோடினவுடனே விபூதிவளர்ந்தது. மேலோர் சங்கங்கிளைத்தது. நீதி நியதி திரிலோகங்களையுமளந்தது. பஞ்சாக்ஷரசெல்வம் பெருகியது. தன்னை அடுத்தவரிவ்வாருக மூடனாகிய குசலன் கடவுளைக் கண்ணினாற் கண்டாலன்றி யொப்பமாட்டேனென்றனன். தருமசாஸ்திரப்படி யறியப் புத்தியில்லாதவனே! யமதூதர் தண்டஞ்செய்யும்போது நாளையறிவா யென்றெழுந்து சைவவேதியன் சைவப்பிராமணர்சூழ வேதமுழங்கப் பொய்வளர் மனத்தார்க் கெட்டாத திருக்குற்றாலத்தலத்தைச் சேர்ந்து குறும்பலாவீசரை வணங்கி வாழ்த்திச்சென்றனன்.

சிவவேதியனை வணங்கி யுபதேசம்பெற்றவர் வாழ்வுபடைத்து உயர்ச்சியடைந்தனர். வளைக்க வளையாத மூங்கில் போலுங் குசலன் தாழ்வுபடைத்துச் செல்வம்போய்த் தடுமாறிக்கடலிலே கப்பல் கவிழ்ந்த வணிகன்போ லலமந்துவேதப் பொருளையுந் தெய்வத்தையு மிகழ்ந்து வாய்க்குச் சுவையுணவு கிடையாதலந்து வறுமையினாலே பசிவருத்த வியாதியா லுருவழிந்துபார்ப்பவர் புறம்பழிப்பத் தாய்போல்வாரும் வெளியேதள்ளச் சந்தியிலே யுமன்று யாசிக்கச்சத்தியின்றிப் பிக்ஷைஇடுவாருமின்றி யம்பலத்திலேகிடந்து தண்ணீர் தண்

ணிரென்று கூவித் தவித்துப் பார்ப்பதற்குத் துணையின்றிப் பதைபதைத் திறந்தனன். உடனே யவனைக் காலதூதர்வந்து பாசத்தாலிறுக்கிக்கட்டிப் பந்தடித்தல்போலடித்துச் சரீரமெல்லாஞ் சூலத்தாற் குத்திக் காகம் வளைந்து கண்களைக் குத்திக் கொண்டுபோயினர். இடைவழியிலே அவன் தான்செய்த கொடுமையும் சைவவேதியன்கூறிய சாபமும்நினைத்து வருந்தும்போது, திரிகூடமலை யதோ சமீபித்ததென்று தூதரிலொருவன்சொல்ல, மற்றவர் அவ்வழியைவிட்டுக் கொடியவழியிலே திருப்பினர். திரிகூடமென்று தூதர் வார்த்தையாலுணர்ந்து இளமையிலே தான்படித்த கந்தபுராணத்தின் பொருளையு நினைந்து திரிகூடங் கதிதருமென்று குசலன் கருதினன். குருவாக்கியத்தை யிகழ்ந்தவர்க்குக் குருவினுடைய தண்டனையே குருவாமன்றோ? தூதர் கைகளை வரிந்து கட்டியதனால் குசலன் திரிகூடத்தைக் கும்பிடமுடியாமற் சரீரந் தளர்ந்து விழ்வாரைப்போலக் கீழேவிழுந்து திசைநோக்கிக் குறிப்பினாலே குற்றாலமென்று சொல்லித்தொழுதனன். குசலன் குற்றாலமென்றொருதரஞ் சொன்ன தமிழ்வேதவார்த்தை யுலகமெல்லாம் பெருகி நாற்றிசையினும் பரந்து தேவலோகத்தையு நிறைத்துத் திருக்கயிலாயமலையிலெழுந்தருளியிருக்குஞ் சிவபிரான் திருச்செவியினு முழங்கியது. ஒருதரம் பணிவதற்காக விழுந்தகுசலனை மற்றொருதரமும் விழாதபடி வச்சிரதண்டங்கொண்டு தூதரடித்தனர்.

அப்போது சிவபிரான் றிருவருளாலே தூதர்கட்டிய பாசக்க ட்டுத் தெறித்தோடத் தேவதுந்துபி யோசை முழங்கியது. அதுகேட்டுக்காலதூதர் குசலனை விடுத்தோடினர். குசலன் பாவமெல்லா மெங்கோடிப்பறந்தனவோ? பொருந்துதற்கரி ய புண்ணியங்கள் விளைந்த விதமென்னென்று சொல்வேன், யாவர் திரிகூடச்சிவபிரானருண்மகிமை யறிபவர். சிவகணத் தார்வந்து பீதாம்பரத்தாலும் ரத்நாபரணத்தாலும் மலரா லுங் குசலனையலங்காரஞ்செய்தனர். தேவப்பெண்கள்வந்து சாமரம்வீசினர், முனிவ ராசிகூறினர். தேவர் பூமழைபொ ழிந்தனர். வாசனைதங்கிய மாலை மலரும், விமானத்திலே கட் டிய பூமாலைமலருந், தேவர்கள்சொரிபு மலருந் திசைதோறு மணத்தலினாலே குசலன் புட்பகந்தனென்னும் பெயர்பெற் றேனாகித் திருக்கயிலாயமலையைச் சேர்ந்து, எம்பிரானுடை ய திருவடித்தாமரையை வணங்கினன். தேவர்களிவனுக் கிந் தப்பதவி கிடைத்த தென்னவென்று வினவலும், தண்டஞ் செய்து யமதூதர் கொண்டுபோம்போது திக்குநோக்கி வண ங்கிக் குற்றாலமென் றொருதரங் கூறினன். பயத்தாலாவது விளையாட்டாலாவது அன்பாலாவது யாரேனு நமது திரிகூட த்தைத் திசைநோக்கி நிசமா வணங்குவாரானால் பாவமெல் லா மெரிந்தோட வுயர்ந்த கயிலாயமலையிலே நமது பதவியில் வந்திருப்பர், ஆதலாலிவன் பெறுவதழியாத பதவியெனச் சிவபிரா னருளிச்செய்தனர். அப்போதே சிவகணமாகிக்கயி

லாசபதவியைப் பிரியாமல் பிரம விஷ்ணுக்களறியாத நிலைமைபெற்றுப் புட்பகந்தன் வீற்றிருந்தனன். சந்திரசேகரராகிய நம்பெருமான் விஷ்ணுவுக்குச் சித்திரசபை நடனகாலத்திலருளிய தீர்த்தமான்மியமென்று சூதருஷி சொல்ல நைமிசாரணியமுனிவர் இனி, "மதுவுண்டானுயிர்மீட்ட மான்மியத்தை யருளிச்செய்க" வென்று கேட்க அவ்வாறேசூதமுனிவ ரருள்வாராயினர்.

பன்னிரண்டாவது புட்பகந்தச்சருக்கம் முற்றிற்று.

---

## பதின்மூன்றாவது
## தருமசாமிச் சருக்கம்.

மலைபழுத்தாற் போல வெளிப்பட்டுக் காக்கப்படுகின்ற தேங்காய்க் குலைகளைச் சிதறி இருபுறமு மாறி மாறிச்சென்று வளர்ந்து கண்ணேணியை நிகர்த்த மரக்கிளைகளாகிய மேலுள்ள பழுக்கள்மேலேதாவிச் செல்லுஞ்சூரியன் றேர்க்கால் வழுக்க, மாமரம்பழுக்குஞ்சோலைதோறுந் தேன்மிகுந்தொழுகும் வளமிகுந்த பாண்டியநாடு கூட்டமாகிய வளங்களையுடைய மற்றை நாட்டின் அழகாகிய பலமணிகளுக்குள் நடுநாயகமணியாயுள்ளது. செயற்கையழகைத் தொய்யிலெழுதி நிறுத்தப்படுந் தனங்களையுடைய இலக்குமிக்கிருப்பிடமாகிக்கிளைக்கப் பெற்றுப் பூமிதேவிக்குக் கூர்மையுள்ள கண்ணாகவு முகமாகவுமுடையது. அத்தகைய பாண்டிநாட்டிலிருக்கும் பிரா

மணகுலதிலக னொருவன் காலை மாலை நீராடிச்சந்தியாவந்தன கடன் கழிப்பதே தருமமாக ஆச்சிரமம் போற்றுவதே பொருள்ளாகச் சந்திரசேகரராகிய சிவபிரானை வணங்குவதே யின்பமாகக் கொண்டவன். இம்மூன்றையுந் தாங்கினாற்போ லு முப்புரிநூலையணிந்தமார்பையுடையவன். சைவமார்க்கமாகிய *ஒரு நெறியும் †இரண்டு பிறப்பும் மூன்றக்கினியும் நான்கு வேதமும் ஐந்து வேள்வியும் ஆறு தொழிலும் ஏழு பிறவியையு முணர்ந்த தோற்றமும், எட்டுத் திசையின் மதிப்பும், ‡ஒன்பது யோகதாரணையும் பெற்றவன். சிவசாமி யென்னும் பெயருடையவன். வெற்றிலைபாக்கு எதிர்ப்பட்டாற் குழந்தைகள் போலவும் பழைய சோறுகிடைக்கில் விருத்தர்போலவும், மாத ரதரபானத்தில் வேங்கைப் பூத்தேனில் வெறுப்புறும் வண்டுபோலவும் வெறுப்புற்று மான்றோலில் வியாசமுனிவர் போலவும் விருப்புற்றுப் பிரமசரிய விரதங்காத்து வருநாளிலே குருவின் பாதங்களைவணங்கி வேதங்களில் விதித்த §நான்காச்சிரமங்களி லிம்மை மறுமை யிரண்டினு மிலாபங் கொடுப்பது யாதென்று வினவலுங், குருசொல்லுவார். பெண்கள் முகமும் பாராமல் வேதமோதுதல் பிரமசரிய

---

* ஒருநெறி - தருமமார்க்கம். † இரண்டு பிறப்பு - சென்மத்தாலுங் கிரியையாலுமாகிய பிறப்புக்கள். ‡ ஒன்பதுயோகதாரணை-யோகநூலுட்காண்க. § நான்காச்சிரமம்-பிரமசரியம், கிருகத்தம், வானப்பிரத்தம், சந்நியாசம்.

மாம். நாயகியை விவாகஞ்செய்து வாழ்தல் காருகத்தியமாம். மனைவியோடு வனத்திற் சென்றிருந்து தவம்புரிவது வானப் பிரத்தமாம். இம்மூன்றையும் விட்டுப் பிரமத்தையாய்ந்திருப் பது சந்நியாசமாம். பிரமசரியத்திருந்தாலுந்தூர்த்தர் சூரிய னுதிக்கும்போதே பெண்கள் முகத்தைப்பார்ப்பர். பழைய சோறு வெற்றிலைபாக்குவிட்டகலார். தேனையிகழமாட்டார். முஞ்சிப்புல்லையு மான்றோலையுங்கைவிடுவர்! இல்லறத்திருந்தா லும் அவர் மனைவி பூத்துநீராடினுற் பன்னிரண்டுநாளுமவளை விட்டு நீங்கார். சாதித்தருமமும்விடார். பிறர்மனைவியை விரு ம்பார். ஆதலாலவர் துறவோரேயாவர். துறவோராயுமனந்தடு மாறினவர் மேற்குறித்த இவருக்குங் கழிபட்டவர். இந்த நால்வருக்குள்ளே யில்வாழ்வார் மற்றைமூவருக்கும் இறந்தா ர்க்கும் பொருண்முதலிய கெட்டார்க்கும் ஆதாரமாயிருத்த லினுல் இல்லறமே வாழ்வினுக்கு முயர்கதிக்கும் வித்துமாம். துறவறத்தின் வேருமா மென்று வேதஞ் சொல்லும். தரும மாகிய பண்டமேற்றிய மனைவாழ்க்கை வண்டியைக் கருமமா கிய நுகத்தடியைக் கட்டி நாயகனு நாயகியு மிழுத்தாலெவ்வ ளவு தூரமுஞ்செல்லும். இவருள்ளொருவர் மட்டுமிழுத்தாற் சிறிது தூரமுஞ் செல்லாது. உயிர்க்குறுதி; யிம்மைமறுமையு ம் மோக்ஷமும் அறம்பொருளின்பமுமே; யிவற்றைத்துறக்க முடியாது, இல்லறம் புரிதலே யிலேசாகுமென்று அதற்கி சைந்த பெண்ணிலக்கணஞ் சொல்லத் தொடங்கினர்.

பாதமிரண்டும் தாமரை மலர். புறவடி புத்தகம். *பரடு தராசு. குதி பொற்பந்து. கணைக்கால் பாம்பு. முழந்தாள் ஞெண்டு. தொடை வாழை, யானைத்துதிக்கை. இடை கொடி. நிதம்பம் இரதம். நாபி நீர்ச்சுழி. வயிறு ஆலிலை. மயிரொழுங்கு தாமரைத்தண்டு. முலை தாமரையரும்பு. விரல் மாந்தளிர். நகம் கிளிமூக்கு. கை காந்தட்பூ. முன்கை வீணை. புயம் மூங்கில். கண்டம் சங்கு. காது வள்ளை. மூக்கு குமிழம்பூ. முகம் சந்திரன், கன்னம் கண்ணடி. கண் கருங்குவளை. பல் முல்லையரும்பு. அதரம் செவ்வாம்பற்பூ. நெற்றி பிறை. புருவம் வில். கூந்தல் கரியமேகம். கூந்தலுங்கண்ணும் கருநிறம். நகம் கால் கை நா வாய் கடைக்கண் இவைகள் செந்நிறம். பல் வெண்ணிறம். தேமல் பொன்னிறம். மயிர் நுனியு மூக்கு நாவுமொன்று. புருவமிரண்டு நிதம்பமுந்தனமும் பரியன. பல் சிறியது இடை நுட்பம் ஆகவும், கால்விரல்கள் நீளாமற் குறுகாமல் நெருங்காமல் ஒன்றோடொன்று சேராமல் மச்சரேகை சங்கரேகை கொடிரேகை நடுவிரல் நோக்கிய ரேகை யிருந்தால் சிறந்ததாகும். இரண்டுகைவிரல் நெடிதாய் நேரியதாய் நெருங்கிப் பத்மரேகை சங்கரேகை கிடக்கத், துரும்பு நடுவே செல்ல இடமில்லாமல் நெருங்கிய தனங்களுடைய பெண்ணே நல்லவளாம். எலும்பு நரம்புந்தோன்றலாகா. கூந்தலைத்

---

* பரடு-புறவடிக்கு மேற் குதிப்பக்கத்திலுள்ள உருண்டையாகிய திரட்சி.

தவிரவுரோமமாகாது. நிதம்பம் நான்கு விரலளவும் கண்டம் ஆறுவிரலளவும் நெற்றி நான்குவிரலளவும் நாடி மூன்று அல்லது இரண்டுவிரலளவுமுயரமிருக்கவேண்டும். கூந்தல் காது மூக்கு கண் இவை நீண்டிருக்கவேண்டும். இவைகளுடன் இலக்குமிபோலு மழகும் நிறை பொறை குளிர்ந்தவார்த்தைகளும் வேண்டும். இந்த இலக்ஷணங்கள் குறையாமல் ஒன்பது வயதுக்குமேற்படாமற்* பன்னிரண்டுகுணத்தின்முறை பொருந்திய வடிவமுள்ள கன்னியே மணஞ்செய்தற்குரியவளாம். மணம் வேதங்களிற் சொல்லியவாறு எட்டுவிதம். அவற்றைக் கேட்பாயாக. நாயகனு நாயகியுங் களவாற் கூடுவது காந்தருவ மணம். நித்திரை செய்பவளைக் கலப்பது பைசாச மணம். வலிந்தொருத்தியைப்புணர்வது இராக்கதமணம். பெண்ணுக்குஞ் சுற்றத்தாருக்கும் பொன் கொடுத்துக் கலப்பது அசுரமணம். பெண்ணுக்கு மட்டும் பொன் கொடுத்துக் கொள்வது ஆரிடமணம். பொருள் கொடாமற் கன்னியை மணப்பது பிரசாபத்தியமணம். யாகஞ்செய்து பெண்ணைக்கொடுத்

---

* பன்னிரண்டுகுணம்-அதிகாலையிற் சமையலறைபுகுதல், விருப்பமுறும்படி சமைத்தல், சுவையமைந்தவுணவை உண்பித்தல், விருந்தினரையழைத்தல், மகப்பெறுதல், மடனுறுதல், நாணுறுதல், அச்சமுறுதல், நாயகனொடுமுயங்கல், நாயகனுறங்கினபின்னுறங்கல், நாயகன் றுயிலெழுதன்முன்னெழுதல், எழுங்காலை நாயகனை வணங்கல்.

தல் தெய்வமணம். நாயகனை வலியவரித்துப் பெண்ணைக் கொடுப்பது பிரமமணம். ஆதலாற் பிரமமணமே யுயர்ந்ததென் றருளிய குருமொழியுட் கொண்டு வணங்கி நாற்பத்தெட்டு வருடம் பிரம்சரிய விரதஞ்செய்த சிவசாமியையழைத்து வேதவரம்புகண்ட வேதியனொருவன் நல்லிலக்கணம் பொருந்திய தன் புத்திரியைப் பொன்னுற் பொதிந்து இருபத்தொரு தலைமுறையு முய்ய விதிப்படி கொடுத்தனன்.

மின்னல்போலிடையு மன்னம்போல்நடையுங் கொவ்வைக்கனிபோ லிதழுங் குடம்போல்த் தனமுங் கரும்புபோல மொழியுமுள்ள புனிதவதி யென்னு மப்பெண்ணை யாசையுடனே மணந்து சிவசாமி திரிகாலமுஞ் செய்கடன் முடித்துக் காருக பத்தியமுதலிய மூன்றக்கினியும் வளர்த்து இல்லறம் புரிந்திருக்கு நாளில், சமுத்திரஞ்சூழ்ந்த வுலகத்திலே யன்னியர்தன்னைப் புகழுங்கா லரிய நாணமும் பழி வருங்காலத்திற்கு நாணமுமாகிய விரண்டு நாணமும் * அறிவுமடம் † கொடைமடமென்னு மிரண்டுமடமும் பொருந்திய நாயகனை வசப்படுத்துதற்கு நாணமுதலிய நாற்குணங்களும் மெய் வாய் கண் மூக்குச் செவியாகிய பஞ்சேந்திரியங்களுமே மருந்தென் றறிபவள். இன்னும் மட நாணமென்னு மியற்கை

* அறிவுமடம்-அறிந்ததை யறியார்போன்றிருத்தல்.

† கொடைமடம்-வரையாதுகொடுத்தல்.

க்குணத்தோடு தன்னுயக னுடனிருத்தல் மனவூக்கம் ஆகி ய நான்கையுங் கடமையாகக் கைக்கொண்டவள். இத்தகைய மேகநாணும் பூங்கூந்தலேயும் விஷம் நாணும் விழியினையு முடைய புனிதவதியாகிய மனைவி வேறென்றுன் மனத்தளர்ச் சியடைந்து ஒருநாள் நாயகன் பாதங்களைப்பணிந்து திரவிய மில்லாதவரிளமை நீரில்லாத தடாகம் ஆறில்லாத நகரம் அர சனில்லாத நாடு சந்திரனில்லாத ஆகாயம் போலும் புத்திரரி ல்லாத மனைவாழ்க்கை யென்றனள், அதுகேட்டுச் சிவசாமி பிரமசரியமுற்றி முனிவர்கடன் கழித்தோம். கிருகத்திலக் கினிகாரியஞ்செய்து தேவர்கடன் தீர்த்தோம். புத்திரனுற் பிதிர்க்கடன் கழிப்பது இனி முறைதானென்று, சற்புத்திர ன் வேண்டினு லுயர்ந்ததவஞ் செய்தல்வேண்டும், சிலகாலத் தி லதுமுடியமாட்டாது. சுருக்கவழி செல்வோமென்றுமனை வியுடன் சிவஸ்தல யாத்திரை செய்யத்தொடங்கி மதுரை திருப்பூவணம் * புதுவை கொடுங்குன்றம் புனவாயில் திரு வேடகம் கானப்பேறு சேது திருச்சுழியல் திருவாடானை திருப்பரங்குன்றம் திருவாப்பனூர் திருநெல்வேலிமுதற்பல தலங்களை வணங்கித் திருக்குற்றுல க்ஷேத்திரத்திலே வந்து சேர்ந்து, மேகங்கள் படியுந் திரிகூடமலையிலே வேத சிவாக மம், அவற்றின்பொருள் ஞானம் மந்திரம் புண்ணியந் தவம் போலப் பொலிந்தோங்கும் வடவருவித் துறையைத் தரிசித்

*புதுவை-திருப்புத்தூர்,

துத் தருப்பைப்புல் வலக்கரத்திற்றங்கிச் சங்கற்பஞ்செய்து மலையை முதலாவது வணங்கித் தடாகத்திலே படிந்து மேலேறி யுருத்திரமந்திரஞ்சொல்லி விதிப்படியேபூசித்துச் சித்திரகங்கையைப் பரவி, அலைபிறேசை தேவப்பெண்களோசை தேவவாத்தியவோசை வலம்புரிச்சங்கவோசை மேகவோசை வேதவோசை தவசிகளுந் தேவர்களுந் தீர்த்தமாடுமோசை காதுகள் குளிரச்செய்ய, வடவருவியிலே ஸ்நானஞ்செய்தனன். அப்போது அவன்பாவங் கழுநீராய்ப்பயந்தோடுதலால் வெய்ய வினையை வென்றவனானன். புலன்களொற்றுமைப்பட்ட நிலையாற் றன்னையுணர்ந்த ஞானியுமானன். அருவியிற்றோன்று நிறந்தங்கிய இந்திரதநுவின் றரிசனத்தாலொப்பற்ற மெய்ப்பொருளைக் கண்டவனானன். அதன்பின் நித்தியகன்மமுடித்து விபூதி ருத்திராக்கந்தரித்துக் குற்றலநாதரைப்பணிந்து அவரது திருவாக்காற் புத்திரப்பேறு பெறுவரம்பெற்றுத் தன்னூருக்குச் சென்றனன்.

சிலநாட்சென்றபின் தன் மனைவி புனிதவதி கருப்பமுற்று ஆறுமாதஞ் சென்றதன்மேல் சந்திரனையுங் கங்கையையுந் தாங்கிய சடையினையுடையார் பொற்பாதங்களைப்பரவிச் சிவசாமி சீமந்தச்சடங்கு முடித்தனன். புனிதவதி முகமாகிய தாமரைவெளுப்பப் பச்சைநரம்பு படர்ந்து தளதளப்ப நடைதளர இடைபெருக்கச் சரீரத்துக்குச் சோர்வுவரப்புளித்தவுணவி லாசையுண்டாகப் பத்துமாதஞ் சென்றபின் வயி

று நோவ உயர்ந்த ஜாதிவரம்பு நீதிபெருகச் சுக்கிரனும்புதனு
முதிக்க வியாளன் பார்க்கச் சற்கருமவைதிக சைவநெறியுந்
தழைப்பக் கற்கர்கோத்திரம் விளங்கப் புத்திரனைப்பெற்ற
னள், உடனே புத்திரனுக்கு நீராட்டிக் கிரியைசெய்து பதி
னொராநாளிலே நாமகன்ம நிறைவேற்றிச் சிறந்த தருமமெ
ல்லாமுடிய வேண்டியிருத்தலாற் றருமசாமி யென்னும் பெய
ரிட்டனர், நான்குமாதஞ் சென்றபின் வீதி மிதிக்கச்செய்து
ஆறுமாதத்தி லன்னபிராசனஞ்செய்து மூன்றாவது வருடத்
திற் சவுளக்கிரியை முடித்து ஐந்தாவது வருடத்தி லுபநய
னந்தரிப்பித்துப் பலகலைகளும் பயிற்றினர், அதன்மேல் இருக்
கு தைத்திரியம் சாமம் அதர்வணமென்னும் வேதங்களோதி
மந்திரம் சந்தோபிசிதி நிருத்தம் சோதிடம் நிகண்டு வியாகர
ணமென்னும் ஆறங்க முணர்ந்து சிவாகமத்தின் முறைதெரி
ந்து, வராகம் வாயவியம் மச்சம் வாமனம் பதுமம் காருடம்
நாரதீயம் மாற்கண்டேயம் காந்தம் வைணவம் சைவம் கூர்மம்
பாகவதம் பவிடியம் இலிங்கம் பிரமகைவர்த்தம் பிரமாண்டம்
ஆக்கினேயமாகியபதினெண்புராணங்களும் பயின்றுஸ்மிருதி
களு மிகக்கற்றுத் தருமசாமி கலைமதிக்கொழுந்துபோல வளர்
ந்து நெய்விட்டெரியுஞ் சுடர்விளக்காய்த் தனக்குத்தானே
சமானமாயினன், பொற்குண்டலமும் புயத்தி லழகுசெய்யு
முப்புரிநூலுஞ் சந்திரன்போன்ற முகத்தழகுங் குடுமியினழ
குங் காணுந்தோறு மன்மதனுங் காமுறுவானென்றால் மட-

வாரைச்சொல்லுவானேன். இங்ஙனம் ஆடவர் மதியையுமய க்குஞ் சரீரத்தினழகு நாளுக்குநா ளதிசயமுறக் கற்ற நலமும் பார்த்து, யௌவனபருவம் வாய்ந்த அப்புத்திரனாகிய தரும சாமிக்கு வாள்போன்ற நேத்திரமுடைய ஒரு பெண்ணைச் சிவசாமி விவாகஞ்செய்வித்தனன். நாட்டிலுயர்ந்த குடியி லே சம்பந்தஞ்செய்து பிறந்திடத்தும் வேட்டகத்துஞ் சிறப் புச்செய்யப்பெற்றுத் தாமரையு நீலோற்பலமும் பூத்த தடா கக்கரையில் வெறியாடும் வண்டுபோல்வானாய் அழகினா லுய ர்குலத்தானானாலும் காமப்பெருக்கால் தூர்த்த மூர்க்கரோடு பழகிச் செம்புப்பாத்திரத்தில் வைத்த பால்போலக் குண ம் வேறுபட்டுக் கல்வியென்னும் பயிர்க்கு மூடமாகிய களைமூ ட வேதங்களை மறந்து மதனூலிற் பயின்று அதரமுதலிய * பதினொரு அமுதநிலையும் † பதினைந்து ஆலிங்கனமும் எண்ணில்லாத ‡ கரணங்களுந் தெளிந்து பதுமினி சித்தினி முதலாகிய பெண்களைத்தேடத்தொடங்கினன்.

அந்நாட்டிலே யனங்கமோகினி யென்னு மொருமட ந்தை மின்னலே யுருவெடுத்து மேகமாகிய கூந்தலை முடித் துத் தெக்ஷிணதேசவளம்பார்க்க வந்தாற் போன்றவள். பொலிவினையுடைய முலைகள் பெருத்ததனாலே பொன்னுல கத்துக்கு மீண்டு போகமாட்டாள். பெண்யானையையுருக்

---

*பதினொருஅமுதநிலை, † பதினைந்து ஆலிங்கனம் இவற்றைக் கொக்கோகநூலுட்காண்க. ‡கரணம்-லீலை.

குஞ் சிறு நடையுடையவள். மன்மதனபிடேக முடியிருக்குங் குறுநகையினை யுடையவள். உடுக்கிருக்குஞ் சிற்றிடையுடையவள். வஞ்சகமெல்லாங் குடியிருக்கும் வேல்போன்ற விழியுடையவள். விவாகமில்லாதிருக்கு மிந்திராணி போல்பவள். முலையாகிய யானை முன்னேகாக்க வலிய மன்மதன் பின்னே காக்க வலைவீசுங் கலகவிழிவாள்க ளிரண்டுபக்கமுங் காக்கச் சமுத்திரஞ் சூழ்ந்த வுலகத்தை யாணை வசத்தாலேயடக்கி வஸ்திரமாகிய வேலிக்குள்ளே யரசிருக்கு நிதம்பத்தினை யுடையவள். கரிய புருவங்கள் வில். கைகள் கரும்புவடிவம். இடை மின்னல். புறந்தாளிரண்டும் ஆமை முதுகு ஆகத், திரண்ட முலைகள் பெருக்கப் பட்டு மன்மதனோடு பிறந்தவள். அழகால் மேனகை போல்வாள். முல்லையரும்புபோலும் பற்களையுடையாள். பாடலாலே குயிலைப்பணிகொண்டவள். கூந்தல் வாசனையாற் பூங்கோடெல்லா வற்றையுஞ் சிறுவிலைக்கு வாங்கியவள். உலகமெல்லா மேவல்செய்யவோ? சபையேறத் தொடங்கினள்.

கங்கர் சோனகர் கலிங்கர் குடகர் கருநடர் சிங்களர் சாவகர் கொல்லர் தெலுங்கர் கோசலர் சீனர் வங்கர் கூவிளர் மகதர் கடாரர் கொங்கணர் இவர்கள் நிறைந்த கொற்கையர் பெரிய சபையில் அன்னப்பக்ஷியோ? தேவப்பெண்ணோ? முனிவரை யின்னுமொருதர மயக்க வந்த மோகினியோ? சொன்னமோ? இரதிதோற்றமோ? மன்மதன் சின்னமோ?

பெண்கள் தீபமோ? வென்னப் புகுந்து, பறவைகளைப்பிடிக்க வேடுவர் செடிகளினுள்ளே மறைந்திருத்தல் போலச் சமயம் பார்த்துத் திரையினுள்ளே மன்மதன் காளையர் மனமாகிய மீனைத்தன்னுடைய கண்ணாகிய வலையாற் பிடித்தற்கு மறைந்திருக்க வெளியே வந்தனள். வரிசையாகக் காம்போதி தோடி பயிரவி யிராகம் பாடத் தித்தி முகவீணை சிங்குழல் கின்னர மொலிப்ப மத்தள மிருபக்கமும் பரதமுறைப்படி யொலிக்கத் தத்தளங்க தளங்க வென்று தாளங்கள் முழங்கப் *பிள்ளையார் கவித்துவமும் †பேரணியும் ‡அஞ்சலியும் §சலாந்தருவும் வெவ்வேறு வகைப்படப் பாடி ¶செக்கணியாடிக் ||குச்சராதிகள் சேர்த்துக் கண்கள் போராடக் கையினலபிநயம் பிடித்தனள். பூமியிலே பெயர்ந்தாளோ ஆகாயத்திலே குதித்தாளோ கண்ணிலே கலந்தாளோ கருத்திலே புகுந்தாளோ வண்டோ தும்பியோ மயிலோ வுருப்பசியோ? வென நடித்தனள். பாதத்தை யெடுத்து மிதிக்குந்தோறு மணிகள் பதித்த சிலம்பும், மன்மதன் பாணத்துக்கு விற்போல் வளையும் புருவமும், கையை யசைக்குந்தோறும் வளையல் வீசுமொளியும், வாள்போலும் கண்ணாகிய வலையிலே தவத்தோ

---

*பிள்ளையார் கவித்துவம் - விநாயகர் துதி.

†பேரணி ‡அஞ்சலி §சலாந்தரு ||குச்சராதி இவற்றின் விவரம் பரதநூலுட் கண்டு கொள்க.

¶செக்கணி - ஓர் நடனம்.

ரை யகப்படச் செய்யும். அரசரெல்லாம்: அவளிசையாகிய வலையிலகப்படுங் காதுகளாகிய அசுணப் பறவைகளைப் பிரித்தாலும் பேரழகாகிய மதுவை விரும்பிய கண்ணாகிய வண்டைப் பிரித்தாலும் வட்டமுலைகட் கிடையே நுழைந்த மனத்தைப் பிரிக்கமாட்டார்கள். இங்ஙனம் அனங்கமோகினி கண்ணாகிய பாணத்தை யவள்காதிற் கொப்பிருந்து தடுத்ததனாலும் இடையை வருத்திய முலையைக் கச்சிருந்து தடுத்ததனாலும் அரசர்கள் பிழைத்தனர். இங்ஙன மனங்க மோகினி நடனஞ்செய்யுஞ் சபையிலே தருமசாமியுந் தன்னுடைய தோழரோடும் போயிருந்து தேமல் படர்ந்த முலையையுடைய பெண்களுக்குள்ளே யென்னுடைய மனத்தைக் கவர்ந்தன ளிவளென்றே யதிசயித்தனன். தருமசாமி பேசும்போதும் பார்க்கும்போதும் அனங்க மோகினிக்கு மாசையவன் மேலிருக்கும். ஆனாலும் வேசையென்னும் ஜாதித்தொழிற்கேற்ப அதனை விலக்கி நடனம் புரிந்தனள். பொருளாசையுற்றமாதர் மன்மதனே யானாலும் விரும்புவாரோ? எட்டுத் திசையி லுள்ளோரையும் நடனத்தாலே வென்றனள். இனியுலகி லுள்ளாரை யெல்லாம் வெல்லு வாளென்று மன்னரெல்லாங் கோடி வரிசை யளித்து நடனம் போதும் போதுமென் றெழுந்து போயினர். காமமிக்கவரெல்லா மனங்க மோகினியைப் பின்பற்றிச் சென்றனர், சபையிலிருந்த கூட்டமெல்லா முடைந்த குளத்து நீர்போல வேறு வேறாய்ப் பிரிந்து

இட்டுண்ணுதவர் செல்வம்போ லொன்று மில்லாமற் போயி னபின் அளவில்லாத மயக்கமுற்றவரெல்லாம் வலையுட்பட்ட மான்போலாயினர்.

இங்ஙனங் காமங்கொண்டு குரங்காடல் போலச் சுழன்று திரிவாரைப் பார்த்து அவருள்ளே சிவசாமி புத்திரனாகிய தருமசாமியையே அனங்கமோகினி தகுதியாகிய மீனைத்தவறவிடாத கொக்குப் போல வெதிர்சென் றழைத்துவாவென்று மனமுருகப் பேசுஞ் சொல்லென்னுஞ் சுவையைத் தருமசாமி தூண்டிற் புழுச்சுவையை யுண்ணு மீன்போலுண்டு வளையலணிந்த அவள் கையைப் பற்றி யவள் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தனன். வீடாகிய வேலி சூழ்ந்த படுக்கையாகிய கொப்பத்திலே பாங்கியர் வேடராகச்சூழத் தருமசாமியாகிய யானையைத்தள்ளத் தாய்க்கிழவி யானைப்பாகனாய் வெட்க மென்னுந்தோட்டியைச் செலுத்த அனங்க மோகினி அந்த யானையைத்தளையிடுஞ் சங்கிலியாயிருந்தனள். அதன்மேல் பொற்கச்சைக் கிழித்து மீறி நெருங்கிய கொங்கைகள் பாதி வெளியே பிதுங்கிப் பிரகாசிக்க நின்றனள். தருமசாமி விளக்கில் விழும் விட்டில் போலாயினன். விண்ணினின் றெரிந்து விழுங் கொள்ளியைப் போன்ற வேசையினழகை நோக்கி மயங்குவாரோ? தமது புகழை வளர்க்கு முயர்ந்தவர். வாசனைதங்கியஅனிச்ச மலரின் மிருதுவாகிய வுனது பாதம் பூமியிலே நிற்கத்தரியாதென்னுள்ள மென்பான். அவ்வார்த்தைக் குறி

ப்பைநோக்கிப் பாங்கிமாரெல்லாம் விலகினர். உடனே கத வைத் தாள் பூட்டிவிட்டுத் தருமசாமியுடன் அனங்கமோகினி பூமலர் மெத்தையிற் கலந்து வாசனை தங்கிய பூமாலை சந்த னக் களபங் கஸ்தூரி யெல்லாமணிந்து வெற்றிலைச் சுருள்கள் கொடுத்து மோக நயங்கள் செய்தலும், தருமசாமி நகக்குறி யாதி புறத்தொழிற் கலவி யெல்லாங் காமநூற் சூத்திரத்தின் உரைபோற் செய்வானாய் அவள் பார்வை வழியே சென்று பாதங்களைத் தடவி வயிற்று ரோமமாகிய சங்கிலியைச் சார மாக்கி யதினின்று முலையாகிய மலைமேற்றாவிக் கூந்தலி லுள்ள தேனீயை விரட்டி யதரத்திலுள்ள தேனை யெடுத்து ண்ணும் வேட்டுவச் சிறுவனாயினான். மணக்கின்ற கனிவா யாகிய வள்ளத்தின் கள்ளையுண்டு மயங்கித் தியங்கிக் கலவை ச் சந்தனக்குழம்பால் முலையாகிய மலையினின்றும் வழுக்கி ரோமச்சாரத்திலே தரியாது கொப்பூழென்னுஞ் சுழியாகிய மடுவிலே வீழ்ந்து ஆசையாகிய கடலிலே யாழ்ந்து சிலம்பொ லிக்க அரும்புபோன்ற முலை குழைய மோகமிகுவதெல்லாம் பொருளாகிய குடுமியைக் கத்தரிக்குங் கத்தரியென்ப துண ராணுய்ப் பெண்ணே! யென்னுயிர் நீ யென்றனன். அனங்க மோகினி யதுகேட்டு உடம்புவேறோ? வென்று கண்கள் சிவ ப்ப வூடல்செய்தனள். உடனேயவள் செம்பஞ்சுக்குழம்பூ ட்டிய பாதங்களைப் பிடித்துச் சமாதானஞ்செய்து கலவி நல முண்டு நடைபெற்று வருநாளிலே யூடல் கூடல் செய்கின்ற

சமயந்தோறுந் தருமசாமியின் றிரவிய மனைத்துங் கிரகிப்ப தானாள்.

மோகமாகிய கயிற்றாற்கட்டி முலைகளாகியபாம்புகளால் வசப்படுத்தி நகக்குறியாகிய தோட்டியாலழுத்திக் கடைக் கண்ணாகிய வாளால் மதத்தையடக்கிப்போகமாகிய கவளத் தைப்பொருளுக்குத்தக்கவளவு தருமசாமியாகிய யானைக்குக் கொடுத்துவந்தனள். ஓமமந்திர மொவ்வொன்றாகக்குறையக் காமமே நிறையக் கிரியையென்னுந் துணையைப்பிரிந்து மன் மதனையும் வென்ற அழகுள்ள தருமசாமி யனங்கமோகினி மேகலாபரணமணிந்த நிதம்பமாகிய பாம்பால் அறிவாகிய ச ந்திரனை யிழந்தான். தன்னுடைய வீட்டிலன்றி யயல்வீட் டிலே தேவாமிர்தங்கொடுத்தாலும் யாசிப்பதென்று, அதை க்கொள்ளாத நெறியாளன் அனங்கமோகினி யிதழ்க்கனியும் பாலுமுண்பதுபோலே யவள் வீட்டிலே மற்றைக்கனியும்பா லுமுண்பானாகி, அவன் நினைப்பது காமநூல் எழுதுவது மு லையிலே தொய்யில் உண்ணுவது அவள் வாயமுதம் உறங்கு வது கொங்கையினிடம் பண்ணுகின்ற செபமந்திரம் அவள் செவிமந்திரம் குளிக்கு நீர் நிறந்தங்கிய அவள் கொங்கையி லே தோய்ந்த பனிநீர் கைப்பொருளெல்லாங் கொடுத்துக் கல்விகேள்வியாதிய வெப்பொருளுங் கைவிட்டு வேசைமுலை ப்போகமென்னும் பொய்ப்பொருளே கைக்கொண்டான். பொதுமாதர் மயலடைந்தா லெப்பொருளையுந் தெளிந்தவரு

மிந்தப் பூமியிலே தெளிவடைவரோ ? பிதாவாகிய சிவசாமி கிருகத்தனம் போயு முன்னோர் தேடிவைத்த பொருள்போயு மனைவி சீதனம்போயும் வஸ்திரங் கந்தையாய்ப்போயுங் கணிகையர் மயக்கத்தைப் போக்கமாட்டாளுய்த் தன் வித்தையினாலே பொருளீட்டிவரப் பகற்காலத்திலே யனங்கமோகினியைப் பிரிந்து சென்றனன். இரவாகியுமவனை வரக்காணுமலவள்பக்கத்திருந்தாருடன் கள்ளுண்டு பஞ்சுமெத்தையிலே மயில்போலப்படுத்து நித்திரைசெய்தனள். அவள் பொருட்டாகத் தருமசாமி வேதப்பொருள்களை யெடுத்தோதி யரசரிடத்திலே மிக்க திரவியம் பெற்று மெத்தையைவிட்டுப் பூமியிலே கிடந்து புரளுந் துயில் கொள்வாளைக் காணுமையால் விரைந்துவந்து அறிவு சோரமுகமாகிய சந்திரனோடு கூந்தல் சோரச் சேலைசோர இராத்திரி நித்திரைசெய்பவளைக்கண்டு இதமாக அவள் பாதங்களை வருடினான். தன்டையணிந்த காலைச்சரணமென்று அவன்வருடுமுன்னே யுதய தாமரைமலர்போலக் கண்விழித்துத்தருமசாமியைத் தெளியாதவளாய்க் கட்குடித்த வெறியினுற் பேச்சுத்தடுமாறிப் பேசினாள். தருமசாமியுங் காட்டுமார்க்கம் வருதலாலே தாகம் பெரிதென்று சொல்ல, அனங்கமோகினி பால்வைத்த பாத்திரமென்று கள்வைத்த பாத்திரத்தை யெடுத்துத் தெரியாமற் கொடுத்தனள். களகளவென அவனுங்குடித்தனன். உண்டபின் மறையோன் கள்ளையாகொடுத்தா யென்று வினு

வனும், பார்க்கவில்லையேயென் றேங்கிக் கையைநெறிப்பவள் போலாயினள். கள்ளுண்டவன் வெறிமேலிட்டு மனங்குலைத லும் அவளொன்றுஞ் சொல்லாமற் பக்கத்திலேசென்றனள். ஆதலால் வேசைய ருறவு ஒருவனுக்குக் கூடுமோ? மன நிலை தடுமாறி வரவர மயக்கமேறிக் கனப்போல வார்த்தை யுங் கலையு நிலையுஞ்சோரத் தனியாய்த் தரையிலே கிடந்து நினைவில்லாமல் நிறையழிவினர்போலாயினன். புணர்ச்சி வெறிமிகுந்து பொறிமயங்கிக் கிடந்துழன்று அறிவுவந்த பொழுதி லுள்ளமெல்லா நடு நடுங்கிக் குணத்தினற் கல்வியி னற் குலத்தினுலுயர்ந்த தருமசாமி புலைத்தன்மை புகுந்த தன்மையாற் புலம்பத்தொடங்கினன். சிற்றாரிற் குடிவாழ்க் கையுஞ் சிறியாரைச் சேர்ந்திருத்தலுங் கிணற்று நீராடுதலு ங் கல்வியறிவில்லாதார் கூட்டுறவுந் தாசி வேசையர் நலமும் நீங்காத நரகமென்னு மனு நாலுணர்ந்திருந்தும், அறிவிலியா கிய யான் துர்த்தையின்ப மெல்லாந் துன்பமென்று சொல் லு மேலோர் வார்த்தை கேளாமல் மதியழிந்து மதுவுண்டே ன். அறநெறியுங் குல முறையுந் தவறிப்போனேன். பார் க்குமிடத்து இகமுமில்லைப் பரமுமில்லை. முத்துப்போன்ற பற்களையுடையாள் மோகத்தாலே குலநெறிக ளத்தனையுங் கைவிட்டேன். பித்தனைப்போலானே னிந்தப் பெரும்பாவ ந்தொலைய வினியெத்தனை காலஞ் செல்லுமோ? என்னசெ ய்வேனெனச் சோர்ந்தான். புலைபர் மதுவுண்டால் அழுக்கு

ச்சேலையி னழுக்குப்போலப் பேம். உயர்ந்தோர் மதுவுண் டால் வெள்ளைப்புடவையி லழுக்கேறுதல்போல மிகவும் பிற ரெல்லாங் கண் புதைப்ப வுருவழிந்து கரியசந்திரனைப்போல வுடம்பு கறுத்தனன். பாவம் வந்துவளைந்தது. இம்மைபோல மறுமையினுந் தொந்த மாகத் தொடருமிதைத் தொலைப்பதே கருமமெனப் புத்தியி லுணர்ந்து பாம்புபுண்பட்டாற்போல ம றுகி வேதசிவாகமங்க ளுணர்ந்த பண்டிதர் பெரிய சபைக்க ட் புகுந்து பெரியவர்களே! பாலென்றுங்களளென்றும் பாத் திர பேதந்தெரியாமற் கள்ளுண்டுவிட்டேன். வல்வினையேன் பெரும் பாவம் மனுநீதி முறையாற் போக்கும் விதம் அருளி ச்செய்யவேண்டுமென்று வணங்கினன்.

அப்போது வேதப்பிராமணர் கள்ளுண்டேனென்று சொல்லும் வார்த்தை கேட்குமுன்னே காதுகளைப் பொத்தி ப்புண்ணியர் வாழ்கின்ற இந்தச்சபையிலே புலைநெறியோய் நீவரத்தக்கவனோ? கண்முன்னே நில்லாமல் விரைவிலேயப் பாற் போவாயென்று கோபித்தனர். தருமசாமி மெய்ந்நடு ங்கி விடத்தையறியாதுண்டு வருந்தியபோது அதை யிறக்கு முன்னமருந்தூட்டித் தீர்ப்பதன்றித் தஞ்சமென்ற பிள்ளை யைத் தந்தைதாய் தள்ளுவரோ? சிறியேனறியாது செய்த பிழையைப் பொறுப்பது பெரியோர் கடமையென்று திரும் பவு நெருங்கிக் கீழேவிழுந்து வணங்கினன். அதுகேட்ட அப்பெரியோர் மனமிரங்கிக் கள்ளுண்ட பாவந்தீர்ப்பதற்குச்

சுருதிமிருதி நூல்களைவிரித்துச் சொல்லுகின்றனர். சனன மாகிய கடலிலே வீழ்ந்தவரை யழுத்துகின்ற சுழியும் அறி வாகிய வெளிக்கு இருட்படலமும் நரகத்திலே யிழுக்குந் தோ ட்டியும் மோக்ஷவழியடைக்குங்கதவுங் கள்ளே; அத்தகைய கள்ளுண்டவரைச் சொல்லுவதியாது? அவரைச்சொன்னாலு ங் கண்டாலும் பெரும்பாவம். மெய்வளரு நெறியோர்கள் வி லக்குவதும் பொய்வழியை விரும்பினரும் விரும்பக்கூடாத தும் புலைமதுவே. சூத்திரர் கள்ளுண்டா லவர் புலையராவார். அரசர் கள்ளுண்டா லவர் புலையரினுங் கடையர். அன்னவரே யப்படியானால் உலகத்துக்குத் தெய்வமாகிய பிராமணர்க்குக் கள்ளுண்டன்முறையோ? அறிவில்லாதவனே! யிந்தப்பாவம் போதலரிது. ஆனால் கள்ளுண்டவர் வாய்நிறைய நெய்யை நெருப்பெழக்காய்ச்சி யுண்டா லிப்பாவம் நீங்குமென்றனர். எவ்வளவு நாளிருந்தாலு மிந்தச்சரீரமிறப்பதுநிச்சயம். மலை கடல்போலப் பெருத்துவந்த பாவம் பிறவிதோறுந் தொட ரும். ஆதலினிதனைச் சுமக்கமாட்டேன். இவ்வுடற் பாரத் தோடு மிம்மையிலே யிந்தப்பாவம் நீங்கலாம் வகை சொன் னீர். அடியேன் செய்த தீமை போவதானா லுத்தரவுப்படி செய்வேனென்று தருமசாமி சொல்லுதலும், அவனுக்குப் பகையாகியதூர்த்தர் உடனேவேகும்படி பாத்திரத்திலே நெ ய்யை வார்த்துக் கொடிய அக்கினிமேலேற்றிக் காய்ச்சினர்.

பிராமணர் சபைநடுவே யக்கினிமேலே கொதிக்கு நெய் யையும் தருமசாமி துணிவையு நேரிலேபார்த்தோ ரெல்லாரு

கொந்தனர். கேட்டோரெல்லாருஞ்சலனமுற்றனர். வீதிதோ
று நின்றாரெல்லாரும் வந்து மறுகினர். அக்கினியிலே காயு
நெய்யைப்பார்த்தவர் மனங்கொதிப்பதாயினர். இதையுண்ட
வர் பிழைப்பரோ? பிராமணரிப்படிப் பிராயச்சித்தஞ் சொல்
வரோ வென்பர். வேறுவழியாக ஏதேனுஞ் சொல்லித்தரும
சாமி குற்றத்தை மாற்றும விதுசொன்ன பிராமணர் மிகக்
கொடியரென்பர். அழகுபோய்க் குலம்போய்த் தருமசாமி
யுயிரும்போமேயென்பர். பழவினைப்பயனோ? விவாகஞ்செய்
யப்பட்ட பெண்ணின் றலைவிதியோ? வென்பர். சுழல்கின்ற
கண்ணையுடைய பரத்தையரைத் தொட்ட தோஷமோ? வெ
ன்பர். இளமைதங்கிய இடபம் போலுந் தருமசாமிக்கிந்த
வல்வினை வருமோ? வென்பர். பாலென்றுதெரியாமற் கள்ளு
ண்டதனாலிந்தப் பாவமிவனைச் சாருமோ? வென்பர். நஞ்சினை
யமுதென்றுண்டாலது கொல்லாதுவிடுமோ? வென்பர். வாம
மார்க்கமாயில் மதுவுண்டாலும் முறையென்பர். மயக்கஞ்செ
ய்து காமமே கொடுத்ததிப்பாவமென்பர். கன்மம் பலித்த
தென்பர். இளமைப்பிராயத்தின் மாலைசூட்டிய கன்னியின்
சோகதாகம் பார்க்கப்படுமோ? வென்பர். இது முன்னைவினை
யே பெற்ற தாய் தந்தையர் கேட்டா லென்னபாடு படாரந்
தோ? வென்பர். யாகஞ்செய்த சிவசாமிக்கு இவனைத்தவிரப்
புத்திர னிரண்டு மூன்று பிறந்ததுண்டோ? வென்பர். இவ
னொருமகன்றா னுதித்தனனென்பர். பாவ மெய்யாமாகிற் பு

ண்ணியம் பொய்யோ? வென்பர். சிலர் கண்ணீர் ததும்பினர். சிலர் வாடிமயங்கினர். சிலர் சூழ்ந்துவந்து திரண்டொலித்த னர். சிலர் தருமசாமி யுயிர்படும்பாடு குறித்துப் புலம்பினர். சிலர் அழுதனர். சிலர் உயிர்கலங்கினர். சிலர் ஏங்கிக்கரைந்த னர். இவைகளைநோக்கிப் பிராமணரிருந்தபடியே சோர்ந்த னர். அயலாரெல்லாம் உலைந்து வீழ்ந்தனர். பகைவரும்பதைத் த்தனரானாற் றருமசாமி தாய்தந்தையர் துயர மெம்மாற் சொல்லமுடியுமோ? மணஞ்செய்தநாளன்றி மற்றைநாளிலே தருமசாமியைத் தெரியாதவளானாலும் நாயக னுயிர்போனு லென்னுயிரை விட்டுவிடுவேனென்று துணிவுடனே தரும சாமி மனைவி யெழுந்தனள். தோழியரிரங்கி யேங்கினர். கற் புடைப்பெண்கள் கொள்கையை விலக்க யாராலே முடியும். மனைவியின் றுணிவுந் தருமசாமி மனத்திற் றுக்கமின்மையும் பார்த்துத் தாயருந் தந்தையருந் தமர்களு மழுதனர். இயரு மூத்தோருஞ் சிறியரு மழுதனர். யமனும் பேய்களு மழுதன ரானாற் பின்னையாரழாதவர். வலிமையுற்ற தருமசாமி யுயிர் க்குறு மிடுக்கண்பார்த்துப் பறவை மிருகங்களு மேங்கின. தி சையுந் தெய்வமு மூரும் நாடு முலகமுங் காடு மரங்களு மிரு ம்புங் கல்லு மலைகளு முருகின. சபையிலிருந்த பிராமணர் உலகமெல்லாம்வருந்த மழுவெனக்காய்ந்த நெய்யைக்கொடுக் க; அதைத்தருமசாமி வாங்கி யுண்ணுமுன் யானையைக்காத்த திருமால்போல யாழ்முனிவராகிய நாரத ரவ்விடத்துக்கு வந் தனர்.

வரும்போது பயப்படாதே யென்றொரு கையைக்காட்டிக் கருணைக்கண்ணானோக்கித் தருமசாமிவினைக்குச் சஞ்சலங்காட்டி யவன் றாமரைப் பூப்போன்ற கையிலிருக்கு நெய்யை யக்கினிக் குணவாகக்காட்டி யேனையவர்கட்கெல்லா மினியவுயிர்காட்டி அம்முனிவர் நெருங்கித்தோன்றுதலு மிருந்தவரெல்லா மெழுந்தனர். நின்றவரெல்லா மெதிர்சென்றனர். அந்த நாட்டிலுள்ளார் துயர்க்கடல் முருகக்கடவுள் வேலாயுதங்கண்ட கடலைப்போலாக அவரழுங்குரலோசை யாகாயஞ்சேர்ந்த காற்றுப்போலடங்கியது, நாரதமுனிவர் சபையிலுள்ள பிராமணரை நோக்கி யாகாக்கினி வளர்க்கும் வல்லவர்களே! நெருப்பிற்காய்ச்சியநெய்யை யிவனுக்குக்கொடுத்தீர். இவன்செய்த பாவ மென்னென்று வினாவலும், அவர்கள் முனிவரைவணங்கி வேதம் பயிலும்வாயில் புலைத்தன்மையாகிய கள்ளையுண்ட பாதகனிவ னென்றார், அதற்காக இவனுயிரைக்கொன்றோ? அக்குற்றத்தைப்போக்குவீர், வேறொருவழியாற் போக்க வகையறியீரோ? நீங்கள் படித்ததும்பொய்யோவென்று நாரதமுனிவர் கூறலும், பிராமணர் அவரை வணங்கி அரசர் வைசியர் சூத்திரர் கள்ளுண்டாலு மிந்தப்பாவம் போக்கமாட்டார். பிராமணனாகியவிவன் கள்ளுண்ட பாவத்தை முனிவரே நீரன்றிப் பிரமதேவர் வந்தாலும் போக்குவதரிதென்றனர். அதுகேட்டு முனிவர் புன்னகை புரிந்து இப்படி யனந்தங்கோடி பாவமென்றாலுந் தீர்க்குந்தீர்த்த மே

ற்றிசையிற்றெய்வத்தன்மைபொருந்திய வோர்மலையினிடத் துண்டு. உலகத்தார்காண வுள்ளங்கை நெல்லிக்கனிபோலக் காட்டுவோம். துங்கபத்திரி காவேரி சோணை நருமதை காளி ந்தி கங்கை யாதிநதிகள் வந்து கலந்து மாசிமாதத்திலே தீர்த் தமாடுந் தேனருவியானது பாவம்போக்குதல் காட்டுகின்றே மிங்குள்ளவரெழுக வென்றனர். தருமசாமி யுடனே பாண்டி நாட்டிலுள்ளார் பலருமெழுந்தனராய்த் தேவர்கள் வணங்கு ம் யாழ்முனிவர் முன்னே செல்ல அவர் பின்னேபோய்ப் பொதியமலைச்சாரலைக்கடந்து தேவர்களும் வந்து நம்மைப் போல் வாழ்ந்திருக்கும் நன்னகரத்தையடைந்து சந்தனமர வேலிசூழ்ந்த சண்பகாரணியத்தைச்சார்ந்தனர். அதன்மேல் ஒலிசெய்து நீரைத்தூவிப்பகை வினைகளைக்கடிந்து சைவதிற் றலை நின்றோர் பாவமாகிய மான்களைப் பிடிக்கத்திரிகூடமலை யெடுத்துவீசும் வெள்ளிவலையைப்போல விளங்கி மேன்மே லலைவீசும் அருவியைக் கண்குளிரக்கண்டனர்.

அற்றைநாள் விரதமாகக் கூடவந்தவர் கூட்டத்திலிருந் து மறுநாட்காலையிலே சுத்தியாதி கருமமுடித்து நாரதர் செ ல்ல, அவர் பின்சென்று குறும்பலா நாதரை மனமுறவண ங்கி யருவியின் கீழேயுள்ள தடாகத்திற் றருமசாமி புகுந்து பவித்திரம்பூண்டு தருப்பைப்புல்லேந்தி வணங்கிச் சங்கற்பஞ் சொல்லி வருணமாதி மந்திரம்பகர்ந்து ஸ்நானஞ்செய்து மூல மந்திரஞ்செபித்துக் கைகுவித்து மலர்கள்தூவி வடவருவி

யைச் சார்ந்துமூழ்கினன். மூழ்குமுன்னரே யருவியாகிய சிங் கந் தருமசாமி பாவமாகியயானையைக்கொன்றது. கழுநீராகிய இரத்தஞ்சாய்ந்தது. தருமசாமி காலம் விடிந்தது விடிந்ததெ ன்ன வெண்டிரை முழங்கியது. வாளராப்போலு மையுண்ட கண்ணையுடைய மாதரான்மதுவுண்டபாவத்தாற்கரிய விராத் திரிபோலமேனிகறுத்துவந்ததருமசாமி வடவருவியிலேதோ ய்தலும், பாம்பாற்றீண்டிவிடப்பட்ட சந்திரன்போலப்பிரகா சித்தனன். தீர்த்த மேன்மைகண்டவரெல்லாரு நாரதமுனி வர் பாதத்தை வணக்கிப்பரவினர். பாண்டி நாட்டாரார்த்த னர், ஆரமுழக்கம் வானந்தூர்த்தது. தேவர் பூமாரிபொழிந்த னர். திரிலோகத்தையுந் திருக்குற்றாலத்தின் கீர்த்தி மூடி யது. தெய்வத்தன்மையுள்ள விபூதியணிந்து சைவவைதிகச் செய்கையாற்றிச் சைவவேதியர் கூட்டத்திலே சேர்ந்து தவ நெறித் தருமசாமி மெய்வளருந் திரிகூடத்துப் பெருமானைப் பணிந்து போற்றி மதுவுண்ட பாவத்தைப் போக்கிப் பரிசுத் தனுயினன். அதன்மேல் தருமசாமி சுற்றத்தார் சூழ நார தமுனிவரைத் துதித்து "நிந்தனை யொழித்தாய். உயிரைநிலை நிறுத்தினய். திரிகூடமலையிலே சீவன் முத்திதந்தனை. பிற வித் துன்பமொழித்தாய். எந்தையே ? நின்னருட்குக் கைம் மாறென் செய்கே" னென்றனன். "உன் பிதா குறும்பலா மூர்த்தியைப் பரவியுன்னைப் பெற்றனன், உனக்கு மந்தத்தரு மங் கைகொடுத்தலாலிங்கேவந்தாய். பாவந்தீர்த்தாய். வாழத்

கடவை'' யென்று வாழ்த்தி யாழ்முனிவர் விண்ணுலகத்து க்குச் சென்றனர். அம்முனிவரால் திரிகூடமலையையடையப் பெற்றவர் நினைக்குந்தோறும்வடவருவித்தீர்த்தந் தருமசாமி பாவந்தீர்த்த அற்புதத்தைத் துதிசெய்வாராயினர். மெய்கண் ட திரிகூடமலையை விட்டு இனி மோக்ஷந்தேடுதல் கைகண்ட வெண்ணெயை விட்டு நெய்தேட லொப்பாமென்று சர்ப்பாப ரணராகிய திரிகூட நாதரைப் பணிந்து தருமசாமி சங்கக் கோயிலாகிய தேன்கூட்டைச் சூழும் வண்டாகி நன்னகரத் திலமர்ந்து திருக்குற்றாலநாதர் பாதங்களைப்பேணி, யவர் திரு வருளாலே மின்போன்ற விமானத்தி லேறித்தேவர்கள் பர வத் தேவமாதர் சாமரம்வீசக் கயிலாசமலையைச் சேர்ந்த னன்.

மேன்மையுஞ் சிறப்பும் வாய்ந்த தீர்த்தமான்மியமிது வென்று சூதமுனிவரருளுதலும் "வீதிகட்கெல்லாஞ் சங்க வீதி யுயர்ந்ததும், நாலுவாயிலன்றிப் பிலத்துவாரமொன்றெ ய்திய முறையும், தெய்வங்கள்காப்பதுஞ் சொல்லியருள்க" வென்று சவுனகராதி முனிவர்கள்கேட்கச்சூதமுனிவர்சொல் லுவார். பிரமன் வடிவங்கொண்டு எல்லாவுலகத்தையுஞ்சிருட் டித்த தம்பிரான் விஷ்ணுவாயிருத்தலால் அவர் ஆயுதங்கட்கு ள்சங்கங்கோயிலும் வீதியுமானது. சக்கரம்விமானமாகவிளங் கியது, அக்கோயிலுக்கு நான்குவேதங்களும் நான்கு வாயில் களாயின, சித்திரசபையிலேயாதிகாலத்திலே பிலவேந்தன்வங்

தவழியேயைந்தாம் வாயிலாகச், சர்ப்பமுனிக்கணங்களுக்குச் சமீபத்திலே யகத்தியருநிற்பர். பிரம விஷ்ணுக்கள் செய்த தவத்தாலன்றோ? தேவதுந்துபிமுழங்க யாருமறியாத சித்திர சபையிலே யெம்பிரா னடனஞ்செய்தனர். வில்லேந்திய இராகவன் அந்தப் பொதுநடனத்தைப் பரவியருள் பெறுங் குணத்தாலே முற்காலத்தி லரக்கர்களை வென்றனன். சங்கக் கோயில் வடக்கு வாயிலே முகமாகவுடையது. நான்குவேதங்களாகிய நான்கு வாயில்களுங் காப்பவர் தேவகணங்களாம். பிலத்துவாரங் காப்பது வாசுகியே. மேலைவாயிலைக் காப்பவர் கணங்களுக்கதிபதியாகிய கணநாதர். உலகமெல்லாம் பெற்ற கன்னியாகிய பார்வதியைச் சிவபிரான் நீலியென்று சொன்னதாலே கறுப்பு நிறத்தோடு தோன்றுங் காளியே சங்கக் கோயிலைக் காப்பவள். திருமதிலைக் காப்பவர் ஐயனார். திருக்குற்றாலப் பஞ்சக்குரோசத் தெல்லையைக் காப்பவள் மாகாளி. தலங்களெல்லாம் பூதவாகனராகிய சிவபிரான் காப்பர். திரிகூடமலையைக் காப்பவர் பிரமவிஷ்ணுக்கள். வேதங்கள் யுகங்களை யெல்லாம் பராசத்தியே காப்பவள். ஆதலாலே திரிகூடத்திலே தேவர்கள் சராசரமாகத் தங்கியிருப்பர், அவ்விடத்திருப்பார்மேற் றீவினைகள் கலக்கமாட்டா. மரணாந்தத்தில் செண்பகப் பூங்கோதை கையிலேந்த எல்லாவுயிர்க்குந் திரிகூடநாதர் திருவருளா லுபதேசஞ்செய்வர். நான்கு வேதங்களுக்குஞ் சொல்லமுடியாத திருக்குற்றாலத்

தலமான்மியத்தைத் தெரிந்தவா றுங்களுக்கு விரித்துச் சொன்னே" னென்று காமமுதலாகிய பகையை வேரோடுகளைந்த மாதவச்சூதர் வியாதமுனிவரருளாலுணர்த்தி யறிவா லிப்புராணத்தைச் சொன்னேர்கள் கேட்போர்கள் பெறும்பலனை யெடுத்துச் சொல்வாராயினர்.

பதின்மூன்றவது தருமசாமிச் சருக்கம் முற்றிற்று.

---

## பதினான்காவது

## நூற்பயனுரைத்த சருக்கம்.

ஒளிதங்கிய முகத்திலிரண்டு கண்களிருந்தாலும் சூரியோதயமானாலன்றி யுலகத்துப் பலபொருள்களையுங் காண முடியாது. கண்போலச் செல்வமு மறிவும் பெற்றாலும் நூற்கேள்வி யடைந்தார்க்கன்றிப் புண்ணிய பாவம் இம்மை மறுமை வீடு தெரியமாட்டா. ஆதலால் வேதமோதிப் பிராமணர் மோக்ஷமடைவர். க்ஷத்திரியர் வைசியருக்கும் வேதச் சார்பு நூலால் வீடு பேறு கிடைக்கும். எல்லா வருணத்துப் பெண்களுக்குஞ் சூத்திரவருணத்தாருக்கும் வேதவழிவந்த புராண நூலால் மோக்ஷங்கிடைக்குமென்பார் மேலோர். ஒருமரத்தின் வேரையடைந்து அதன் மூலமாகக் கொம்பிலிருக்கும் பழத்தைத் தெளியு மெறும்பைப்போல இல்லறத்திலிருந்து போய் மோக்ஷத்தையடைவார்க்கும் நற்சார்பை யுணர்ந்து தீச்சார்பு கெட நடக்குந் துறவிகளுக்கும் ஒரு பக்கமே நின்

றொருபொருளைக் குரங்குபோலப் பிடித்தது விடாமலிருக் குமுணர்ச்சியுடையோருக்கும் போர்செய்கின்ற ஐம்புலன்க ளாகிய பேயை யறிவாலோட்டுவது புராண நூலாகும். முய ற்சியில்லாதவர் *வேளாண்மை செய்வதும் உபகரித்தலில்லா தவரில்லறம் பூண்பதும் வீரமில்லாதவர் யுத்தகளத்திற் செல் வதும் புராணவாராய்ச்சி யில்லாதவர் மோக்ஷத்தை விரும்புவ துங் கண்ணில்லாதவன் வழிநடத்தல்போலாகமுடியும். இந்த வழி யந்தவூர்க்குப்போமென்றறிந்துசெல்வா ரவ்வூரையடை வார். அஃதறியார் பலவழியிலுஞ் சுழன்று திரிவார், குறித்த வூரையடையமாட்டார். அற்பமார்க்கத்தைச்சேரும் பசுநூல் கள் பாசமாகிய கிடங்கில் வீழ்த்திவிடும், நன்மார்க்கத்தைச் சாருஞ் சிவபெருமா னருள்வழியினாலே செலுத்துவது சிவ புராணமே. அத்தகைய புராணங்களைக் கேட்பவர் வேறுநினை யார், கேளார் விளையாடார். நித்திரைசெய்யார். மாறுபட்டதி சைகளை நோக்கார். வேறு வார்த்தை பேசார். நேரேயிருந்து செவிகொடுத்து அறுசுவை யுண்டி யுண்பவர் போலச் சொற் சுவைகளை யருந்துவர், சுயம்புத் தலங்களினெல்லை நான்கு குரோச தூரமே. திருக்குற்றாலத்தினெல்லை மாத்திரம் நான்கு திக்கிலும் பஞ்சக்குரோச தூரமாகும். ஆதலினதிலே வசிப்பவர் உயர்ந்த கதியும், மனிதர் தேவர்வாய்த் துதியும டைவர். சிவபுராணம் படிக்குமிடங்கள் ஆலயம் நதி மண்ட

* வேளாண்மை, விவசாயம்,

பம் சபை சித்திரகூடம் யாகசாலை சோலை நல்லோர் கிருக
மாம்; இவைகளிற் சுத்திசெய்து, அடியார்களாலெழுதிய ஏட்
டைப் பொற்பீடத்திலேற்றி மலர் மாலைகளாலலங்கரித்துத்
தீபமேற்றிவைத்துப் பூசைசெய்து நூற்பொருளுரைக்கும்
புராணிகரை யாசனத்திலிருக்கச்செய்துபசரித்து அவருக்கி
யன்றவைகளைக் கொடுத்துச் செல்வமும் மோக்ஷமும் விரும்
புவர்; அழகாக எதிரிருந்து புராணநூற் பொருளைக்கேட்பர்,

திருக்குற்றாலத்தலமான்மியத்தை யெந்தநாட்டி லெந்த
இடத்திலேனுமிருந்து சொல்லுவோர் கேட்போர் அத்தலத்
தைத் தவத்தினாலடைந்தார் பெறும்பயனைப்பெறுவர். புரா
ணம் வாசிக்குமிடத்து முனிவர் வானவர் வந்து நிறைவர்,
தருமம் வளரும். செந்நெல் முதலிய பயிர் தழைப்ப அந்த
நாடு மழைவளத்தாற் செழிப்படையும், விரத தினத்தில
ந்தப்புராணம் படிப்பவர் ஒன்று பத்தாகப் பலனடைவர். யா
கசாலையிலே படிப்பவர் நூறுயாகப்பலன்பெறுவர். தவசிகள்
மேற்குறித்த காலங்களிற் படித்தாலாயிரமடங் கதிகப்பலன்
பெறுவர், பிதுர் தினத்திலே புராணங்கேட்கில் தென்புலத்
தார் நரகத்தைவிட்டு நீங்கிச் சுவர்க்கஞ்சேர்ந்திருந்து புரா
ணம் படிப்பவர்க்கு ஆசிவழங்குவர். இம்மட்டோ திருக்குற்
றாலத்தலபுராணங் கேட்பாராகில் குற்றமுடையார்அதை நீங்
குவர். பகையாற்றோற்றவர் அரசராய்ப் பகையை வென்று
பட்டணஞ்சேருவர். தரித்திரமுள்ளார் ஒரு நாளிலே அதை

நீங்குவர் இரண்டுதினத்திலே வாழ்வடைவர். மூன்றுதினமும் கேட்பாராகிற் சுவர்க்கபோகமடைவர். இம்மட்டோ? இப்பு ராணங்கேட்போர் பிராமணராகில் வேதமோதிய பலனடை வர். க்ஷத்திரியராகிலவர்க்கு வேற்றரசர் வளநாடு அடங்கிநட க்கும். வைசியராகில் நவநிதியமுமிக வளரும். சூத்திரராகிற் பலவாய பெரும்பூமி பலிக்கும். கன்னியர் காளையராகில் வி வாகம் பெறுவர். சுமங்கலிகளேற் சற்புத்திரரைப் பெறுவர். பொதுவாக எல்லாரு நினைத்தவரம் பெறுவர். பேய்பிடித்தவ ராகிற் பேயகலும். பிணிகொண்டவராகிற் பிணிநீங்கும். புரா ணம் படிப்பார்க்குங் கேட்பார்க்கு மெல்லாவினைகளு மவரை விட்டேகும். புராணம் கேட்பவர் பித்தராகிற் பித்தோடு வியாதியும் போகும். சித்தரேற் காயசித்தி முதலிய வெய்து வர். பத்தராவர் பரமஞானமிகுந்து முத்தராகுவர். படியாதவ ராகில் நிறைந்த கல்வியும் படித்தவராகிலுயர்ந்த ஒழுக்கமும் பொல்லாராகில் நற்குண மாட்சியும் புத்தியில்லாதவராகிலுய ர்ந்த வறிவும் தொழில்செய்யவல்லார்க்கும் வல்லவரல்லார்க் கு மெல்லாச் செல்வமுங்கிடைக்கும். இப்புராணத்தைப் புத் தகத்திலெழுதுவார்க்கும் பொருள்விரித்துப் புகல்வார்க்கும் பாடங்கேட்பவர்க்குஞ் சொல்பவர்க்கும் மோக்ஷத்தை இந் நூல் கொடுக்கும். இப்புராணம் தனிவழிக்குத்துணையாகும். எல்லாப்பிணிக்கு மருந்தாகும். இனிய பேரின்பமுமாம். இம் மை மறுமையு நல்கும். போரிலே வென்றியைத்தரும். இதை

வீட்டில் வைத்துப் பூசிப்பவர் சிவார்ச்சனை செய்த பலன்பெ றுவர். இதை வீட்டில் வைத்திருந்தாற் பெருஞ்செல்வ முண் டாகும். திரிகூடமென்ற பெயரை யந்தரத்திற்றவறிவீழ்பவ னொருவன் கேட்டுத் தேவபதவி பெற்றனன். அத்தகைய தலமான்மியத்தை மந்திரம்போலக்கேட்பவர் கீர்த்தியை நம் மாலெடுத்துச்சொல்ல முடியுமோ?

சங்கு சதுரம் ஆமை தாமரை சக்கரம் இவ்வைந்து வடிவமாகிய வுத்தமாலயங்கட்குளுயர்ந்தது சங்கக்கோயிலே. இரத்நம் பொன் வெள்ளி தாம்பிரம் சித்திரம் ஆகிய பஞ்சச பையிலும் சித்திரசபையே யுயர்ந்த ஞானசபையென்று வே தஞ்சொல்லும். இத்தலத்தில் பரை பரன் மதுகங்கேசன் சோமேசன் கூத்தனென்னுஞ் சுயம்புமூர்த்திகள் ஐந்தாம். சிகரம் மலை அருவி சிவலிங்கம் விநாயகர் ஆகிய இவ்வைந் தையும் ஓரிடத்திலே காணுங்காட்சி யைந்தாம். வேதம் பிர மன் விஷ்ணு. சனி துர்க்கை மாகாளி சாத்தன் பராசத்தி சிவகணங்கள் வாசுகியாகிய காவலாளிகள் பதின்மராம். மலை பலாவிருக்ஷம் மூர்த்தி தீர்த்தம் தலம் ஆகிய விசேடமைந்தா ம். அருவியி லிந்திரவிற்றோன்றுதல் அதிலேமூழ்கலாற் பாவ ங்கழு நீராய்ப்போதல் சித்திரசபையிலே தேவதுந்துபி முழ ங்குதல் பராசத்தி கருப்பமுற்றுத் திரிமூர்த்திகளைப்பெறுதல் சிவபிரான் பஞ்சாக்கரமுணர்த்தல் எனத் தேவரகசியமை ந்தாம். தரிசனம் பிறப்பு இறப்பு சிந்தனை திருக்குற்றால மா

ன்மியங்கேட்டல் என முத்திப்பேறைந்தாம். விம்மிதம்புளி
கம் போர்த்தல், ஆனந்தக்கண்ணீர்பெருகல், மொழிதடுமாறல்,
சரியையாதி திருத்தொண்டுசெய்தல், தோத்திரம், தியானம்,
திருப்பணிக்குப் பொருளீட்டல், அவைகளை யழித்துண்ணு
மை, எனப் பத்தியெட்டுவகையாகும். இவ்வெண்வகைப்
பத்தியினாலே மேற்கூறிய வற்புதமெல்லாந் தெரிந்து திருவ
டித்தாமரையை வணங்குந் தவத்தோர்களை யடைக்கலமாக
நாடோறும் வணங்குவாரன்ருே? நாமெல்லாம் வணங்குங்கட
வுளாவார். திருக்குற்ருலம் மோக்ஷந்தருவது நிசமே. திருக்
குற்ருலத்தைச் சேருநாளளவுந்தான் வினை யொருவரிடத்து
நிற்கும் என்று சூதமுனிவ ரருளிச்செய்து நைமிசாரணிய
முனிவர்கள் சூழச் சித்த ராச்சிரமத்தைச் சேர்ந்தனர். "சிவ
புராணங்களுள்ளே நன்னகர்ப் புராணத்தை நீ ரருளுதலாற்
கடவுளுண்மையறிந்து பிழைத்தோ" மென்று ருஷிகள் சூத
முனிவரை நோக்கிச்சொல்லினர்.

அதன்மேல் சவுனகராதி யெண்பத்தெண்ணுயிர முனி
வர் சுயம்புவாகிய திருக்குற்ருல க்ஷேத்திரத்தைத்தரிசிக்கும்
பொருட்டுத் தேவலோகத்தைக்காண விரும்பு மனிதரைப்
போல ஆசைகொண்டு சென்மமாகிய மயேந்திரசாலத்தைக்
கடத்த, இரத்நங்களுஞ் சூரிய சந்திரப்பிரகாசத்தை வீசும்
பொதியம் கொல்லி மயேந்திரமலைகள் சூழ்ந்த திரிகூடமலை
யைச்சார்ந்தனராய் அம்மலையிற் கல்லெல்லாஞ் சிவலிங்கவடி

வமென்றெண்ணி யேகங்காங் துவிதாங்கமாகத் தூரத்திலே வணங்கிச்சென்று வலங்கொண்டுபோய்த் துதித்துச் சமீபத்திற் பஞ்சாங்கமாகவும். அட்டாங்கமாகவும் பணிந்தனர். தலையாலே வணங்குத லேகாங்கம். இரண்டுகையுஞ் சேர்த்துவணங்கல் துவிதாங்கம். இரண்டுகையுந் தலைமேலேற்றி வணங்கல் திரயாங்கம். கைகளிரண்டு முழந்தாளிரண்டு தலையொன்று நிலத்திலேபடியவணங்கல் பஞ்சாங்கவணக்கமாம். மார்பு. மூக்கு கை தலை காது வாய் கண் முழந்தாள் இவையெட்டு நிலத்திலே தோயப் பாதமுங் குய்யமு நிலத்திலே படியாமல் வணங்கல் அட்டாங்கவணக்கமாம். பின்பு சித்திராநதி மூலமாகிய சிவமதுகங்கையைப் பொருந்தி, யுத்தரகங்கை பூசைமகிழ்ந்தமை பாடியாடி யிந்திர தநுவையுடையவருவியையுஞ் செண்பகத்தடாகத்தையும் வந்துகண்டு அருவியிலே தீர்த்தமாடி மகிழ்ந்து செய்கடன்முற்றித்தேவகன்னியராலயத்தையடைந்து ஆர்வங்கொண்டு பரவிக் குகைகடோறுங் கூடிக் காயகற்பமுண்டு பிரமன் மால் கற்பம்வரை யிருப்பவரோடு தங்கியிருந்தனர். அப்பால் இளவேனிற்காலமாகிய சித்திரைமாதத்துச் சூரிய கிரகணத்துக்கஞ்சி நிழலு மொளிக்குங்காலத்திலே மழை மந்தாரமலர் வாடை யூடாடவருதல்கண்டு விம்மிதம் பயப்பநின்றனர். அங்நின்ற ஆரியமுனிவர்களுக்கு முன்னே பன்னிரண்டு நிறைந்த கேள்வியுடைய தவசிகள் போற்றக் கந்திருவர் வித்தியாதரர்பரவத் தேவர்கள் வாழ்த்தத் தென்

றற்காற் றொருபுறந்தவழ மேக மொருபுறந்தவழக் குளிர்ச்சி போர்ப்ப வெற்றியுடைய ஏனையமுனிவரர் சூழத் திசைக டோறுந் தமிழ்மணப்பக் குண்டலமுங் குழைந்தகாதுந் திருமுகமும் நயனமுஞ் சடாபாரமுஞ் செபவடமுங் கமண்டலமும் புத்தகமும் சமுத்திரசலத்தையுண்டவாயும் விளங்கத் தென்றிசையி லொருசூரிய னுதயஞ்செய்தாற்போலப் பிரமாவின் புத்திரருந் தமிழ்முனிவருமாகிய அகத்தியமுனிவ ரெழுந்தருளினர்.

இங்ஙனம்வந்த தமிழ்முனிவர் கூட்டத்தை யங்குநின்ற நைமிசமுனிவர் கூட்டத்தார் வணங்கி வாழ்த்தி மலர்கொண்டு போற்றிப் பாற்கடலைச்சேர்ந்த தேன்கடல்போ லளவளாவித் திரிபுரையினிடத்துத் தேவர்செய்த சிறப்பைப்போற்றி யகத்தியமுனிவரைக் கண்டு மகிழ்ச்சியுடன் வணங்கி விடைபெற்றுச் சண்பகத்தடாகத்தை நீங்கிச்சந்தனத்தடாகத்தின் மூழ்கி வடவருவியைக் கண்களிப்பக்கண்டு அதிலே ஸ்நானஞ் செய்து விபூதிருத்திராக்கந்தரித்துச் சூதமுனிவரருளியவுண்மையைத் துதித்தனராய்த் திரிகூடமலையைக் கயிலாயமென்றே கருதிப்பாடி வசந்த வீதியிலுள்ள தெய்வங்களைவணங்கி வடக்குவாயிற் பெரியகோபுரத்தைப்பரவி ஸ்மிருதிகளாகிய பதினெட்டுப்படிகளையும் வணங்கிச் சங்கவீதியை வலஞ்செய்யும்பொருட் டுள்ளேபோய்ப் பராசத்திபீடந் துசத்தம்பம் குறும்பலா இவைகளைத் தொழுதெழுந்து கைகள் குவித்து

மூன்றாம்பிறைபோன்ற நெற்றியுங் குறுநகையும் பவளவா யுங் குவிந்ததனமுந் துகிலுடையு மெல்லா வண்டங்களையும் பெற்ற ஆலிலைபோன்ற வயிறுமுடைய குழல்வாய் மொழித் தாய் திருவடித்தாமரையும் குறும்பலாநாதர் மகிழுந் திரும ணக்கோலமுங் கண்குளிரத் தரிசித்துத் திருவருள்பெற்றுச் சத்தி கணபதி பாதங்களை வணங்கி விஷ்ணுமூர்த்தியையும் ஞான விசையையும் பரவி மணக்கோலநாதரையும் வணங்கி மேற்றிசைவாயிற் காவற்கடவுளைத் தொழுது சோமசேகர ரைத்தாழ்ந்து சிவலிங்கமுதலிய பஞ்சதரிசனம் பெற்று அக த்தியமுனிவரையும் வாசுகியையும் வாயுதேவனையும் பயிரவ ரையும் போற்றிப் பராசத்தி பீடத்தைத்தொழுது தாணுமா லயத்தொட்டிலை யிறைஞ்சித் துசத்தம்பத்தின் பக்கத்தே தாழ்ந்து விநாயகக்கடவுளையேத்தித் துவாரபாலகரைத் தரிசி த்து நந்திதேவரையுஞ் சூரியனையும் வாழ்த்தித் தெக்ஷிணாமூ ர்த்தியை வணங்கிக் காளிமுதலிய சத்தமாதரையும் பணிந்து அவ்விடத்தும் யானைமுக விநாயகரைத்தொழுது சோமாஸ் கந்தரைத் தரிசித்து இலக்குமி சரசுவதி குமாரக்கடவுள் சூ ரியன் சந்திரன் விநாயகரிவர்களை வணங்கி யுள்ளே புகுந்து நடேசரைப்பணிந்து குறுமுனிக்காகத் திருமேனிகுழைந்த குழகராகிய மூலலிங்கமூர்த்தியைத் தரிசித்துப் பேரானந்த வெள்ளத்திலே திளைத்து ஆனந்தக்கண்ணீர்பொழிய மொழி குழற மனங்கரையழிய வாய் குழறுப்ப இதழ்துடிப்பத் தோத்திரஞ்செய்யத் தொடங்கினர்.

கங்கைச்சடையாய்! கௌரிபாகா! பிரம விஷ்ணுவே! பஞ்சாயுதங்களைமாற்றி மான்மழுத்தாங்கிய கையையுடையாய் திருக்குற்றாலச்சிவபெருமானே! யுகந்தோறும் பிரமவிஷ்ணுக்கள் பூசையுகந்தவனே! திரிநேத்திரங்களின் சோமசூரியாக்கினியுடையாய்! இகபரத்தி லின்பந்தரு நன்னகரத்தையுடையாய்! வினையை நீக்குஞ் சண்பகாடவியாய்! தக்கன் யாகத்தைக்கெடுத்த மூர்த்தியே! நதிவிழ் வேடனுக்குக்கதியளித்த கடவுளே! படிந்தோர் பாவங்களைக் கழுநீராகப்போக்கும்வடவருவித்துறையாய்! சிவமதுகங்கைதங்கிய சித்திராநதியுடையாய்! ஆத்திரேயன் பிறவிப்பிணியை மந்தமாருதத்தாலே தவிர்த்தவனே! வடவருவியிலே மூழ்கிய சுகுற்சன்பிதாவாகிய கவுற்சனுக்கு நரகத்தையொழித்தவனே! கண்டகசேதனன் பாவத்தை மூன்றுதினத்தின் முடித்த முதல்வனே! யகத்தியமுனிவர்க்காகக் குறுகிய பெரியவனே! புட்பகந்தன் றுன்பந்துடைத்தவனே! யானையெறிந்தபூவு நீருமாகிய பூசை யுவந்தவனே! தருபசாமி பெரும்பழியைத் தகர்த்தவனே! வேதமாகிய குறும்பலாவுடையவனே! திரிகூடமலையை வலம்வந்த யானையின் பாவத்தையொழித்தவனே! சங்கவீதியாய! வேடனு நரியும் வலஞ்சூழக்கண்டு நல்லபதவி யளித்தவனே! பரிவட்டந்திருடிய பார்ப்பான் சிவத்துரோகந் தீர்த்தவனே! தேவர்கள் சிவத்துரோகந் தீர்த்தவனே! அருச்சுனன் தவறவிட்ட சம்புடத்தைக் காட்டியவனே! பஞ்சக்குரோசத்தி லிறந்த

வர்க்கு மந்திரோபதேசஞ் செய்யுங் குருமூர்த்தியே! சத்திபீடத்தின்மேவிய தாரகப்பிரமமே! மோக்ஷந் தருதற்காகத் தோன்றிய முழுமுதற்கடவுளே! சித்திரசபையிலே நடனஞ் செய்யுந் தெய்வநாயகனே! போற்றி போற்றி போற்றியென்று நைமிசாரணிய முனிவரெல்லாரு மிருதயதாமரை மலரக் கைகுவித்திறைஞ்சினராய்த் திருவருள்பெற்று அடியார் குழாங்களை வணங்கித் தண்டீசநாயனாரை வணங்கிவந்து நந்திதேவர் பாதங்களைப்பணிந்து சங்கக்கோயிலை வலங்கொண்டு வந்து சித்திரசபையைத் தரிசித்துத் துதித்து பிரமபதம் சுவர்க்கபதம் விண்டுபதங்களிற் பெரிதாகிய பரமபதத்திலிருப்பவரைப்போலச் செண்பகவனத்தில் வந்திருந்தனர். அதன்மேல் சூதமுனிவ ரருளிச்செய்த புராணங்களுக்குள்ளே திருக்குற்றாலத்தலபுராண நூறுமடங்கதிகமெனத் தெளிந்து அதிசயித்துத் திருக்குற்றாலத்தலத்திலே பலநாளிருந்து பழவினைகளைத் தொலைத்துத் திரிகூடநாதர் திருவருள்பெற்றுச் சிவவேதியரிடம் விடைபெற்று நைமிசாரணியத்தில் வந்திருந்தனர். சிவபிரான் றிருவெண்ணீறும் பஞ்சாக்கரமும் வளர்க. சாதிநெறி வேதநெறி சைவநெறியுந் தழைத்தோங்குக. மாதர்கள் கற்புநெறி வளர்க. பெரிய பூமண்டலத்தில் மனுவேந்தர் நீதிநெறி நீடூழிவாழ்க.

பதினலாவது நூற்பயனுரைத்த சருக்கம் முற்றிற்று.

இரண்டாவது சிவரகசியகாண்டம்முற்றிற்று.

திருக்குற்றாலத்தலபுராண வசனம் முற்றுப்பெற்றது.

இங்ஙனம்

மு. ரா. அருணாசலக்கவிராயர்

---

உ

# சூசீபத்திரம்.



---

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 10 | 4 | க ையை | கையை |
| ,, | 17 | காரலும் | கராலும் |
| 18 | 18 | ததருளும் | த்தருளும் |
| 19 | 16 | வேடிச்சி | வேடச்சி |
| 20 | 11 | கும்பிட்டு | கும்பிட்டுக் |
| 27 | 7 | விஷ் | விஷ |
| 30 | 14 | யென்னெ | என்னெ |
| ,, | 19 | வாசுசி | வாசுகி |
| 32 | 3 | பகிர | பகீர |
| ,, | 18 | பனிப்போ | பனிபோ |
| 48 | 2 | சாபரூ | சாரூப |
| ,, | 5 | பிரான் | பிரான |
| 54 | 8 | ஒலிட் | ஓலிட் |
| 57 | 13 | யாசுர | யசுர |
| 63 | 13 | பாற்ககண் | பாற்கண் |
| ,, | 20 | ணெணன் | ணெனன் |
| 82 | 7 | ளவவு | வளவு |
| 91 | 11 | கைச்சடை | கைசடை |
| 103 | 14 | தெரிந்த | தெறிந்த |
| 112 | 18 | விடுதத | விடுத்த |
| 113 | 3 | மததே | மத்தே |
| 122 | 8 | பிரமாண | பிராமண |
| 132 | 11 | தரை | தாரை |
| 141 | 2 | ட்டாங்க | டாங்க |
| ,, | ,, | ஸ்க்கார | ஸ்கார |
| 142 | 16 | டுகேகோ | டுக்கோ |
| 145 | 22 | யானை | மேகம் |

| பக்கம். | வ. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 147 | 11 | பார்தத | பார்த்த |
| 148 | 3 | கொள்ளும | கொள்ளும் |
| 152 | 16 | ரகனற | ரகன்ற |
| 155 | 13 | மருச்சு | [illegible] |
| 164 | 17 | வசானே | [illegible] |
| 172 | 10 | புணசிரி | புன்சிரி |
| 185 | 6 | யொலி | [illegible] |
| ,, | 27 | கலவி | கல்வி |
| 189 | 14 | கருப்புர | கருப்பூர |
| ,, | 21 | வண்ங்கி | வணங்கி |
| 209 | 17 | ழைதத்து | ழைத்து |
| 223 | 19 | பஞுச | பஞ்ச |
| 224 | 8 | பலனேக் | பலனைக் |
| 230 | 16 | வெடித்து | வெடிப்பித்து |
| 236 | 14 | கூறித்துவி | [illegible] |
| 240 | 7 | நீககத் | நீக்கத் |
| ,, | 22 | வியரு | யவிரு |
| 268 | 9 | பமைய | பழமைய |
| 289 | 17 | ற்றுங்க | [illegible] |
| 295 | 11 | வெணச்குத | [illegible] |
| 306 | | காரத | [illegible] |
| 307 | 6 | பொரு | பொருட் |
| 313 | 14 | தாளோ | [illegible] |
| 326 | 13 | சைவதி | [illegible] |
| 335 | 2 | யேகங்கார் | [illegible] |